# புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு

## (தொண்டைமான்கள் ஆட்சி)




பதிப்பாசிரியர் :

**சிரஞ்சீவி**

இணை ஆசிரியர் :

**க. இலக்குமி நாராயணன் எம்.ஏ.,**

காப்பாட்சியர், அரசு அருங்காட்சியகம், சேலம்.



அபிராம் பப்ளிகேஷன்ஸ்

307, லிங்கி செட்டி தெரு,
சென்னை-600001.

49-3

## பொருளடக்கம்

## அட்டையில் காணப்படும் அரசு சின்னமும் அதன் விளக்கமும்

H. H. S. B D. R. R. G T. B. R. P. என்பது "His Highness Sri Brahadamba Das Raja Rajagopala Tondaiman Bahadur, Pudukkottai" என்பதன் சுருக்கம்.

இடது பக்க சிங்கம் வைத்துள்ள கொடியில் அநுமார் ஒரு கையில் மலையைத் தூக்கிக் கொண்டு நிற்கும். வலது பக்கம் உள்ள சிங்கம் பிடித்திருக்கும் கொடியில் ஒரு சிங்கம் கொடியைப் பிடித்திருக்கும்.

## தொண்டைமான்களின் ஆட்சிக் காலம்

| | | |
|---|---|---|
| 1. | இரகுநாதராயத் தொண்டைமான் | 1686–1730 |
| 2. | விஜயரகுநாதராயத் தொண்டைமான்-I | 1730–1769 |
| 3. | இராயஇரகுநாதத் தொண்டைமான் | 1769–1789 |
| 4. | விஜய இரகுநாதத் தொண்டைமான் | 1789–1807 |
| 5. | விஜயஇரகுநாதராயத் தொண்டைமான்-II | 1807–1825 |
| 6. | இரகுநாதத் தொண்டைமான் | 1825–1839 |
| 7. | இராமச்சந்திரத் தொண்டைமான் | 1839–1886 |
| 8. | மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான் | 1886–1928 |
| 9. | இராஜகோபாலத் தொண்டைமான் | 1928–1948 |

49—3

# பதிப்புரை

இந்த வரலாற்று நூல் எனது பதிப்பகத்திலிருந்து வெளியாகும் 23-வது வெளியீடாகும். இதற்கு முந்திய வெளியீடுகள் யாவும் நாவல்களாகவும், இலக்கிய நூல்களாகவும் இருந்தன. சரித்திர சம்பந்தப்பட்ட நூல்களையும் வெளியிட வேண்டும் என்பது என் ஆசைகளில் ஒன்ருகும். அதற்கேற்ப, இந்நூலினை ஒரு வரலாற்று நூலாகக் கொணர்ந்ததில் நான் மிகவும் பெருமைப் படுகிறேன்.

இப்புத்தகம் அச்சாகி முடிந்ததும், இந்நூலை மிகச் சிறப்பான முறையில் வெளியிட வேண்டுமென்று நான் விரும்பினேன். இந்நூலுக்கு உயர்திரு. பொன். பரமகுரு அவர்கள் மிக அழகான முகவுரை ஒன்று அளித்திருப்பது இந்நூலினை மேலும் சிறப்புடையதாக ஆக்குகிறது.

இவ்வெளியீட்டு விழாவினை நம் தமிழக சட்டமன்ற சபாநாயகர் மாண்புமிகு க. இராஜாராம் அவர்கள் தலைமை நடத்த ஏற்பாடு செய்து கொடுத்த எனது குருவாக நான் போற்றி வரும் உயர்திரு. கே. ஆர். வாசுதேவன் எம். ஏ. அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

யாவற்றுக்கும் மேலாக, எனது பிறந்த ஊருக்கு மன்னராக இருந்த திருமிகு. இராஜா இராஜகோபாலத் தொண்டைமான் அவர்கள் இந்நூலின் வெளியீட்டு விழா விற்குத் தம் சார்பாக இராஜ்குமார் ஸ்ரீ விஜயகுமார் தொண்டைமான் அவர்களை அனுப்பித் தந்து, இந்நூலின் முதல் பிரதியைப் பெற்றுக் கொண்டது எனக்குக் கிடைத் தற்கரிய ஒரு பெரும் பாக்கியமாகும்.

சென்னை-1.
23—8—80

கா. பனையப்பன், உரிமையாளர்,
அபிராமி பப்ளிகேஷன்ஸ்.

# என் உரை

நம் பாரத நாடு ஆங்கிலேயரின் அடிமைத் தளையி லிருந்து விடுபட்டு, பண்டித ஜவஹர்லால் நேரு பிரதமராகப் பதவி ஏற்று மத்திய அரசை இயக்கிக் கொண்டிருந்த காலம்...

எல்லோருமே இந்நாட்டு மன்னர்களாகி விட்ட நிலையில் இந்தப் பூமியில் மன்னர்களென்று தனிப்பட்ட ஒரு சிலர் ராஜ தர்பார் நடத்திக் கொண்டிருப்பதாவது?

இப்படியொரு கேள்விக் குறியைப் போட்டு உள்நாட்டு அமைச்சராய் இருந்த சர்தார் வல்லபபாய் பட்டேல் சமஸ் தானங்களை ஒழிக்கத் தீவிர முயற்சிகளை மேற்கொண்டிருந்த நாட்கள்...

ஆண்டாண்டுக் காலமாக அனுபவித்து வந்த அதிகார ஆணவங்களையும் அமோகமான சுகபோகங்களையும், அளவற்ற ஆஸ்திபாஸ்த்திகளையும் அவ்வளவு எளிதில் பறிகொடுக்க மனமின்றி சமஸ்தானாதிபதிகள் அனைவருமே பலத்த எதிர்ப்பைத் தெரியப்படுத்திக் கொண்டிருந்த சந்தர்ப்பம்—

அதாவது 1948-ம் ஆண்டு.

அந்த ஆண்டில் ஒரு நாள்—

பேட்டிக்கு முன் அனுமதி பெற்றிருந்த இளைஞர் ஒருவர் உள்துறை அமைச்சரின் முன்னே வந்தமர்கிறார்.

அந்த இளைஞரை நிமிர்ந்து பார்த்து வரவேற்ற சர்தார் வல்லபபாய் பட்டேல், அவரது உள்ளத்தை ஊடுருவிப் பார்ப்பதில் முனைகிறார்.

இருபத்தாறே வயதுடைய அந்த இளைஞர் யாரென்பது அவருக்குத் தெரியும். அவர் விடுத்த அழைப்பின் பேரில் தான் அந்த இளைஞரும் டெல்லி வந்திருக்கிறார்.

மேலும் கீழுமாக அந்த இளைஞரை நோட்டமிடுகிறார் சர்தார் பட்டேல்.

இளம் இரத்தத்தின் எடுப்பான தோற்றம்! விழிகளைப பார்க்கிறார். அடக்கம் நிறைந்த பார்வை; அந்தப் பார்வை யில் ஒரு குளுமை!

தாம் அழைத்த காரணத்தைக் கூறிப் பேச்சைத் தொடங்க சற்றே தயங்குகிறார் இரும்பு மனிதர்.

எடுத்த எடுப்பிலேயே, "என் அரசைப் பறிப்பதில் உனக்கென்னய்யா மகிழ்ச்சி?" என்று அந்த இளைஞர் வெகுண்டு கேட்டு சீறக்கூடுமோ என்றொரு தயக்கம்!

அதே சமயம் அந்த இளைஞரின் அதரங்கள் விரிகின்றன.

"எனது சமஸ்தானத்தை இன்றிலிருந்தே இந்திய யூனி யனில் ஐக்கியப்படுத்திக் கொள்ளலாம். எனக்கு எந்தவித ஆக்ஷேபனையும் கிடையாது."

இரும்பு மனிதராக விளங்கிய பட்டேலின் புருவங்கள் வியப்பால் உயர்கின்றன. அக்கூற்றை அவராலேயே நம்ப முடியவில்லை. ஆளப் பிறந்தவன், அதுவும் யாவற்றையும் அனுபவித்துவிட கொள்ளை ஆசை கொள்ளக்கூடிய வாலிப வயது; வேண்டாம் எனக்கிந்த மணிமகுடம் என்றல்லவா அலட்சியமாக எடுத்தெறிகிறான்!

இளைஞரின் அதரங்கள் மீண்டும் விரிகின்றன.

"என் பிரஜைகள் தம் மண்ணையும் இந்திய யூனியனில் சேர்த்துக் கொள்ளும்படி தீர்மானங்களை நிறைவேற்றி உங்க ளுக்கு அனுப்பியிருப்பதாகவும் கேள்விப்பட்டேன்."

ஆமாமென்ற பாவனையில் தலையசைத்தார் பட்டேல்.

"மக்களே நான் வேண்டாமென நினைக்கத் தொடங்கி விட்ட பிறகு எனக்கெதற்கு ஆட்சியும் அந்தஸ்தும்? அதனுல் தான் இந்த முடிவுக்கு வந்தேன்..." என்று கூறிய அந்த இள வயது மன்னன், "சமஸ்தான கணக்குப்படி இருப்புத் தொகை கருவூலகத்தில் இருக்கிறது. அத்தொகையையும் ஒப்படைக்கிறேன்" என்முர்.

வல்லபபாய் பட்டேலுக்கு இது மேலும் ஆச்சரியத்தைத் தந்தது. சிறிதுகூடத் தயங்காமல் தம் சமஸ்தானத்தை ஒப்படைப்பதென்ருல்...கனவு போலல்லவா இருக்கிறது!

யாவருமே வியக்கக்கூடிய ஒரு செயல்தான் ராஜா ராஜ கோபாலத் தொண்டைமான் பெரும்போக்குடன் செய்த இக்காரியம். பல இலட்சம் அடங்கிய கஜானுவையும் ஒரு சமஸ்தானுதிபதி ஒப்புவித்தார் என்ருல் அது இந்த ராஜரிஷி ஒருவரேதான்.

எத்தனையோ சமஸ்தானங்கள் இந்திய யூனியனில் ஐக்கியப்படுத்தப்பட்டாலும்கூட எந்த ஒரு சமஸ்தானுதிபதி யும் தம் வசம் இருந்த கஜானுவை ஒப்புவித்தது இல்லை என்பது இங்கே குறிப்பிடத்தக்கதாகும்.

புதுக்கோட்டை திரும்பிய இம் மாமன்னன் ஏனைய சமஸ்தானுதிபதிகளைப் போல சுக போக வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை. திருச்சிராப்பள்ளியில் உள்ள புதுக் கோட்டை அரண்மனையில் தங்கினுர். திருமணம் செய்து கொள்ளவில்லை; பிறப்பிலேயே அவரிடம் பொதிந்திருந்த கலைகளில் மூழ்கி அக்கலைகளில் தன் கவனத்தைச் செலுத்தி அரியதொரு கலைஞராகத் திகழலானுர்.

இவருக்கு முந்திய மன்னரான ராஜா மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான் அவர்களால் கட்டப்பட்ட புது அரண்மனை தமிழக அரசாங்கத்திற்குத் தேவைப்பட்டது. அதைத் தமக்கு விற்றுவிடும்படி தமிழக அரசு கோரியபோது ராஜா ராஜகோபாலத் தொண்டைமான் அவர்கள் 99.9 ஏக்கர் நிலப்பரப்பில் கட்டப்பட்டிருந்த அந்த அரண்மனையை அளிக்கத் தயங்கவில்லை. குறைந்த விலைக்கே அதை அளித்தார்.

இந்த விபரங்களை நான் அறிய வந்தபோது என்னுள்ளே ஒரு ஆர்வம் பிறந்தது. ஏற்கனவே பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மனின் சரித்திர வரலாற்றை ஆதாரப்பூர்வமாக எழுதி, 400 பக்க நூலாக வடித்திருக்கின்ற நிலையில் – மதுரை நாயக்க அரசின் ஆட்சிக் காலம் முதல் அதன் முடிவுக் காலம் வரை ராணி மங்கம்மாள் என்று தலைப்பிட்டு 308 பக்கங்களில் வெளியிட்டிருக்கும் நூலை அடுத்து, புதுக்கோட்டை சமஸ்தான வரலாற்றை ஆராய்ந்து எழுத முற்பட்டேன். அதுவே இந்நூலாகும்.

இந்நூலை வெளிக் கொணருவதில் புதுக்கோட்டை சமஸ்தானம் சம்பந்தப்பட்ட ஆவணங்களையும் மற்றும் பல சரித்திரச் சான்றுகளையும் ஆய்ந்து குறிப்புகள் தந்தவர் இனிய சுபாவம் கொண்ட எனது நண்பர் திரு. க. லக்ஷ்மிநாராயணன், எம்.ஏ. அவர்களாகும்.

இந்நூல் சுருக்கமான பதிப்பேயாகும். அடுத்த பதிப்பில் விரிவான விவரங்களைக் காணலாம்.

சிரஞ்சீவி.

# முகவுரை

அன்பர் திரு. சிரஞ்சீவி அவர்கள் வெகு சிறப்புற எழுதியுள்ள "புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு" எனும் அரும் படைப்பிற்கு முகவுரை எழுதும் அரிய பேற்றினைப் பெற்றமைக்கு நான் பெரிதும் அகமகிழ்கிறேன், பெருமையுறுகிறேன். அதற்குக் காரணமாய் உறுதுணையாய் விளங்கிய எனது கல்லூரித் தோழர், அருமை அன்பர், ஆசிரியர் உயர் திரு. கே. ஆர். வாசுதேவன் அவர்களுக்கு முதற்கண் என் மனமார்ந்த நன்றி.

புதுக்கோட்டைத் தொண்டைமான்கள் தமிழ்ப் பழங்குடிப் பரம்பரையினர். எனினும், தொன்றுதொட்டு வழிவழி வந்த அரச பரம்பரையினர் அல்ல. தமது அரும்பெரும் வீர தீரச் செயல்களால் படிப்படியாக உயர்ந்து, சீரும், சிறப்பும் செல்வாக்கும் பெற்று அரச பதவி அடைந்தவர்கள். மாட்சிமைமிக்க ஆவுடைராயத்தொண்டைமான் காலத்திலிருந்து தான் புதுக்கோட்டை தொண்டைமான் அரசின் வரலாறு தோன்றியதென இந்நூல் ஆசிரியர் தக்க ஆதாரத்துடன் எடுத்துக் கூறுகிறார்.

தற்போதுள்ள ஆந்திரப்பிரதேசத்திற்கு உட்பட்டதாக விளங்கும் திருப்பதி பகுதி கி.பி. இரண்டாவது மூன்றாவது நூற்றாண்டுகளில் தமிழ்நாட்டின் வடக்கு எல்லையாகவும், காடுகள் அடர்ந்த பகுதியாகவும், தொண்டை மண்டலத்தின் ஒரு நாடாகவும் அமைந்திருந்தது. அது பெரும்பாலும் கள்ளர் மரபினர் வாழ்ந்த பகுதியாகவே விளங்கி வந்தது. அப்போது அப்பகுதி குடக்கரை, தொண்டைமான்

கோட்டை, பொற்குப்பி என மூன்று நிலப் பிரிவுகளைக் கொண்டிருந்தது. அவற்றுள் தொண்டைமான் கோட்டைப் பிரிவும், அதில் வாழ்ந்த கள்ளர் மரபுமே புதுக்கோட்டை சமஸ்தான வரலாற்றின் மிக முக்கியமானவையாகும்.

தமிழ்நாட்டை ஆண்ட, தமிழ் மொழியைத் தாய் மொழியாகக் கொண்ட தமிழ் மன்னர்களே மூவேந்தர் என்று அழைக்கப்படும் சேர, சோழ, பாண்டியர்களாகும். மூவேந்தர்கள் எனப்படுவோரை மூவரசர், மூவரசு என்ற சொற்களால் பிற்காலத்தில் குறித்தனர். மூவரசர்கள் என்பதே முக்குலம் என்று மருவியது. முக்குலம் என்கிறபோது இன்றைக்குப் பலர் நினைப்பதுபோல் இது தனித்தனியான மூன்று பிரிவோ, அல்லது மூன்று குலமோ அல்ல. முக்குலம் என்பது ஒரே மரத்தின் மூன்று கிளைகளைப் போன்றதாகும். களப்படை, மறப்படை, அகப்படை என மூன்று வெவ்வேறு தொழில்களை ஆற்றிய காரணத்தாலேயே இது முக்குலம் என்ற பெயரைப் பெற்றது. நாட்டின் அமைப்புக்கும், அதை நடத்திச் செல்லவும் தேவையான மூன்று முக்கியத் தொழில்களை ஆற்றிய அடிப்படையில்தான் கள்ளர், மறவர், அகமுடையார் என்று அழைக்கப்படுகின்றனர். இம்மூன்று பெயர்களும் தொழிலால் வந்தடைந்த பட்டங்களே. இம்முக்குலத்தவர்க்கும் பொதுப் பெயராகத் தேவர் என்ற பெயரே நிலைத்து நிற்கிறது. தேவர் என்றால் மனிதத் தன்மையில், தகுதியில் தேர்ந்தவர்கள் என்பதாகும்.

நாளடைவில் இம் முப்பிரிவில் ஒன்றான கள்ளர் மரபினர் தொண்டைமான் கோட்டைப் பகுதியில் விவசாயத்தைத் தொழிலாகக் கொண்டிருந்ததோடு, யானைகளைப் பிடிப்பதிலும், அவற்றைப் பழக்குவதிலும், யானைப் படைக்கான பயிற்சியினை அளிப்பதிலும் சிறந்து விளங்கினர்.

ஒரு சாதாரணமான குடிமகனாக சிறந்ததொரு குடும்பத் தலைவனாக விளங்கியவர் உயர்திரு. ஆவுடை. அவர் மிகவும் வீரதீரம் மிக்கவர். தமது குலத்தாருடன் ஆதியில் அவர்

அன்புக் கோவிலிலும், பின்னர் பிலாவிடுதியிலும் வாழ்ந்து வந்தார். அப்பகுதி வழியாகத்தான் மக்கள் இராமேசுவரம் செல்லவேண்டும். கள்ளர் குலத் தலைவர் ஆவுடை அவ்வழி வரும் பயணியர்க்கும், பக்தருக்கும் பலவகையில் பாதுகாப்பு அளித்து சாலை ஆபத்துகளைத் தடுத்துக் காத்து வந்தார். ஒரு சமயம் 1639—ம் ஆண்டில் விஜய நகர மன்னர் இரண்டாம் வெங்கிட்டராயர் இராமேஸ்வரம் செல்லும்போது இப் பகுதி வழியே வந்தார். அப்போது அவரது யானைகளில் ஒன்று மதம் பிடித்து, கட்டுக்கு அடங்காமல் போனது. யாராலும் அதை அடக்கமுடியாத நிலையில், ஆவுடை வெகு துணிவோடும், தீரத்தோடும் அந்த மதயானையை அடக்கி ஒடுக்கி அரசர்முன் நிறுத்தினர். அந்த அதிவீரச் செயலைக் கண்டு வியந்த விஜயநகர மன்னர், கள்ளர் குலத் தலைவர் ஆவுடைக்கு 'இராய' என்ற பட்டமும், 'அனுமான்' கொடியும் அளித்தார். அரசருக்கு உரிய அம்பாரி யானை, முரசு யானை, சிங்கமுகப் பல்லக்கு இவை யாவும் வைத்துக் கொள்ள அனுமதியும், பரிசாகப் பல நிலங்களும் அளித்தார். இவ்விதம் அரசுரிமை சுமார் 350 ஆண்டுகளுக்கு முன் இப் பரம்பரைக்கு வழங்கப்பட்டது. மதயானையை அடக்கிய ஆவுடையும், ஆவுடைராயத் தொண்டைமான் ஆனர். அது சமயம் திருச்சியில் சோழரும், மதுரையில் பாண்டியரும் அரசாண்டனர்.

ஆவுடைராயத் தொண்டைமானின் வழித் தோன்றலான 'தந்தையை மிஞ்சிய தனயன்' என இந்நூல் ஆசிரியர் போற்றும், இரகுநாதராயத் தொண்டைமான் மிகவும் ஆற்றலும், ஆண்மையும் கொண்டவர். அவரது பெயரும் புகழும் நாடெங்கும் பரவின. அண்டை நிலத்து அரசர் பலர் அவரது உதவியையும் நட்பையும் நாடினர். நல்ல பல அரசு நெறிகளையும் முறைகளையும், தந்திரங்களையும் கையாண்டு புதுக்கோட்டை மன்னராய் அவர் வெகு மாண்புடன் ஆண்டார். அவரது ஆட்சி சீரோடும் சிறப்போடும் விளங்கிற்று. அவரது ஆட்சிக் காலத்தை புதுக்கோட்டையின் பொற் காலம் எனலாம்.

அதன் பின் அடுத்தடுத்து விஜயரகுநாதராயத் தொண்டைமான், இராய ரகுநாதத் தொண்டைமான், விஜயரகுநாதத் தொண்டைமான், விஜயரகுநாத ராயத் தொண்டைமான், இராஜ ரகுநாதத் தொண்டைமான் பகதூர், இராமச்சந்திரத் தொண்டைமான், மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான், இறுதியாக இராஜகோபாலத் தொண்டைமான், ஆகியோர் முறையே புதுக்கோட்டையை ஆண்டனர். முடிதுறந்த மன்னரான இராஜா ராஜ கோபாலத் தொண்டைமான் திருமணமின்றி அரசத் துறவியாய் தனித்து, தற்போது திருச்சியில் வாழ்ந்து வருகிறுர்,

அகத்துறையில் அன்பும், புறத்துறையில் வீரமும் வித்தாகக் கொண்ட தமிழ் முதுகுடி மக்களின் அரச பரம்பரையைச் சேர்ந்த புதுக்கோட்டை மன்னர்களின் வரலாற்றைத் தெள்ளத் தெளிந்த நடையில், சிறிதும் நயம் குன்ருது வெகு அருமையாய் ஆராய்ச்சி ஆதாரத்துடன் படைத்து அளித்துள்ளார் ஆசிரியர். அன்பர் திரு. சிரஞ்சீவி அவர்களின் அரிய படைப்பான இவ்வரலாற்று நூல் என்றென்றும் ‘சிரஞ்சீவித் தன்மை’ பெற்று விளங்கும் என்பதில் ஐயமில்லை.

அன்பன்,

**பொன். பரமகுரு**

தமிழக இன்ஸ்பெக்டர்
ஜெனரல் ஆஃப் போலீஸ்

சென்னை
5–8–1980

# சிறப்புரை

தமிழகத்தில் சென்னைக்குப் பிறகு மற்ற பகுதிகளில் புதுக்கோட்டையில்தான் மிக மிகப் பழைய மியூசியம் இருக்கிறது. இது அப்படி ஒன்றும் பிரமாதமானதில்லை என்று தோன்றினாலும், ஆழ்ந்து நோக்குங்கால், அம்மாநிலத்தில் இருக்கக்கூடிய கலைப்பொக்கிஷங்கள், மக்களுக்கு எளிதில் காணக் கிடைக்கக் கூடியதாக இருக்கவேண்டும் என்று விரும்பிய அம்மாநில மன்னர்களின் மனவளர்ச்சிக்கு சான்று கூறுவதாக உள்ளது. அரிய பல தொன்மையான நினைவுச் சின்னங்களைக் கொண்டதும் கலைத்துறையில் சிறந்த சாதனையைப் பெற்றிருந்ததுமான புதுக்கோட்டை அண்மை நூற்றாண்டுகளில் தொண்டைமான்கள் என்கிற அரச பரம்பரைப் பெற்ற பேறு கொண்டதாகும். அப்பரம்பரையினர் அம்மாநிலத்திற்கு அரசியல் ஸ்திரத்தன்மையையும், பொருளாதார மேம்பாட்டையும் அளித்தனர்.

காஞ்சிபுரம் வழியாக திருப்பதியைச் சுற்றியதொரு வடக்குப் பகுதியிலிருந்து அப்பரம்பரையினர் புதுக்கோட்டைக்கு வந்து, அதனை ஆளத் தொடங்கினர். ஆட்சிக் காலத்தில் மிகவும் உறுதியுடனிருந்து கொண்டு அவர்களின் ஆளுகையை அச்சுறுத்திய அத்தனை இடையூறுகளையும் சமாளித்து அடக்கினர். அவர்கள் நியாய உணர்வுடன் வாழ்ந்து, தவிர்க்க முடியாது போனாலொழிய போருக்குப் போனதில்லை. தங்களுடைய நண்பர்களைக் கவனமாகத் தேர்ந்தெடுத்து, எப்போதும் வெற்றியே கண்டனர். எனவே புதுக்கோட்டையைச் சுற்றியுள்ள இதர சிற்றரசுப் பரம்பரைகள் வீழ்ச்சியுற்ற போதிலும், இவர்கள் மாத்திரம் 1686 ல் இருந்து 1951 வரையில் சீராக புதுக்கோட்டையை ஆண்டு வந்தனர். கடைசியாக வந்த அரசரான ராஜ ராஜகோபால தொண்டைமான் இந்திய யூனியனுடன் தம் பகுதியை இணைத்துவிடவே தொண்டைமான் ஆட்சி முடிவுற்றது. அத்தகையது செயல் கண்ணியம் மிக்கதொன்றாகும்.

1812 ல் புதுப்பிக்கப்பட்ட புதுக்கோட்டை நகரம், இன்றுவரை அழியாமல் நீடித்து ஆழ்ந்த சிந்தனையுடனும் கவனத்துடன் திட்டமிட்டு நிர்மானம் செய்யப்பட்ட நகரம்

என்பதை மெய்ப்பித்துள்ளது. 19—ம் நூற்றுண்டின் இறுதியில் ஆண்டு வந்த ராமச்சந்திரத் தொண்டைமானின் எல்லை மீறிய கலையார்வத்தால் இம்மாநிலத்தின் பொருளாதார நிலை ஒரு சிறிது காலத்துக்கு சோதனைக்குட்பட்டது. 1886 முதல் 1928 வரை ஆண்டுவந்த முற்போக்கு மனம் படைத்த மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான், மாநிலத்தை மேம்படச் செய்தார். சேஷய்ய சாஸ்திரி, ஸர் அலெக் சாண்டர் டாட்டான் ஹாம் போன்ற திறமை வாய்ந்த நிர் வாகிகள் அமையப்பெற்று, மாநிலம் நல்ல முன்னேற்றத்தை அடைந்தது. அவ்வாறு பரம்பரையில் கடைசியாக வந்த ராஜகோபால தொண்டைமான் அவர்கள் 1928 முதல் 1951 வரையில் ஆட்சி செய்து வந்தார். 1951—ல் இந்திய யூனியனுடன் இணைந்தபிறகு அவர் தமது திருச்சி அரண் மனையிலேயே தங்கிவிட்டார்.

இந்த அரிய நூலில் புதுக்கோட்டை அரச பரம்பரை யினரைப் பற்றிய வரலாற்றை பழம்பெரும் எழுத்தாளர், திரு. சிரஞ்சீவி அவர்கள் புதுக்கோட்டை மியூசியத்தில் சிறிது காலம் தலைமையாளராக விருந்த திரு. கே. லக்ஷ்மிநாரா யணன் அவர்களின் பேருதவியுடன் மிகத் தெளிவாகவும், கோர்வையாகவும் எழுதியிருக்கிறுர். திரு. லக்ஷ்மி நாரா யணன் மியூசியத்தில் பணியாற்றிய வாய்ப்பினுல் இந்த அரச பரம்பரையின் வரலாற்றில் ஈர்ப்பு கொண்டனர். இந்தியத் துணைக்கண்டத்தின் வரலாற்றுக்கு, இத்ததகைய பிராந்திய வரலாறுகள் நல்லதொரு கண்ணேட்டத்தைச் சேகரிக்கின்றன.

இந்நூலாசிரியர்கள் தொண்டைமான் அரசர்களைப் பற்றி விமரிசனக் கண்ணேட்டத்துடன் நன்கு ஆராய்ந்து அவர்களுடைய ஆட்சியைப் பற்றி தக்க கருத்துக்களை தெரி வித்திருக்கின்றனர். அந்த அரியதொரு பணியைச் செய்த இந்நூலாசிரியர்கள் மிகவும் பாராட்டத்தக்கவர்கள்.

சென்னை
15—7—1980

என். ஹரிநாராயணன்
M.A., BSc., (Tech)
இயக்குனர், மியூசியம்.

# வாழ்த்துரை

'புதுக்கோட்டை சமஸ்தான வரலாறு' என்னும் இந் நூல் வட்டார வரலாற்றினைப் பொதுமக்களுக்கு எளிய முறையில் தருகின்ற வகையில் எழுதப்பட்டுள்ளது. இதில் தொண்டைமானின் அரசினைத் தோற்றுவித்த ராயத் தொண்டைமானின் தந்தையாகிய ஆவுடைராயத் தொண்டைமான் காலந் தொட்டு புதுக்கோட்டை சமஸ் தானத்தை இந்திய அரசிற்கு ஒப்புவித்த ஒன்பதாவது மன்னரான இராஜகோபாலத் தொண்டைமான் காலம் வரை நடைபெற்ற வரலாற்று நிகழ்ச்சிகள் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

புதுக்கோட்டை தொடர்பான வரலாற்று நூல்களையும் மற்ற ஆவணங்களையும் ஆதாரமாகக் கொண்டு இந்நூல் ஆக்கப்பட்டுள்ளது. இந்நூலின் இணையாசிரியரான திரு. இலக்குமி நாராயணன், வரலாற்றுத் துறையில் முழு கலைப் பட்டம் பெற்றுள்ளதும், கலைக்கூடங்களின் காப்பாளராகப் பணியாற்றி வருவதும் இத்தகைய பணியில் ஈடுபட அவருக் குப் பெரிதும் உதவியுள்ளன. இந்நூலாசிரியரின் முயற்சி மென்மேலும் பெருக என் வாழ்த்துக்கள்.

**டாக்டர் சி. இ. ராமச்சந்திரன்,** M.A.,M. Litt.Ph.D.
பேராசிரியர்,

இந்திய சரித்திரத் துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

ஆசிரியர் சிரஞ்சீவி

தரும்

அடுத்து வரும்

இரு வரலாற்று நூல்கள்

**மறவர் சீமை**

1. **சேதுபதிகள் வரலாறு**
2. **சிவகெங்கைச் சீமை**

# 1. தொண்டைமான்களின் தொன்மை

தொண்டைமான்கள் மிகமிகத் தொன்மையானதொரு பழங்குடிப் பரம்பரையினர் ஆவர். ஆயினும் தொன்று தொட்டு வழிவந்த அரச பரம்பரையினர் அல்ல. தமது வீர தீர பராக்கிரமங்களாலும் வீர சாகஸங்களாலும் படிப்படியாக செல்வாக்குப் பெற்று அரச அந்தஸ்துக்கு உயர்ந்தவர்களாகும் என்பது பெருமைக்குரியதாகும்.

இன்று ஆந்திர மாகாணத்திற்கு உட்பட்டதாக இருக்கும் திருப்பதி பகுதி பழங்காலத்தில் அதாவது கி. பி. இரண்டாவது மூன்ருவது நூற்ருண்டுகளில் தமிழ்நாட்டின் வடக்கு எல்லேயாகவும், காடுகள் அடர்ந்த பகுதியாகவும், தொண்டை மண்டலத்தின் ஒரு நாடாகவும் பிரிந்திருந்தது. இது பெரும்பாலும் கள்ளர் மரபினர் வாழ்ந்த பகுதியாகவே விளங்கி வந்தது. அப்போது இப்பகுதி குடக்கரை, தொண்டைமான் கோட்டை, பொற்குப்பி என மூன்று நிலப் பிரிவுகளேக் கொண்டிருந்தது. இவற்றுள் தொண்டைமான் கோட்டைப்பிரிவும், அதில் வாழ்ந்த கள்ளர் மரபினர்களும் இந்நூலுக்கு மிகவும் முக்கியமான தாகும்.

தொண்டைமான் கோட்டைப் பகுதியில் வாழ்ந்துவந்த கள்ளர் மரபினர் அங்கு விவசாயத்தை மேற்கொண்டிருந்த தோடு, யானேகளேப் பிடிப்பதிலும், அவற்றைப் பழக்கு வதிலும், யானேப் படைகளுக்கேற்ப அவற்றிற்கு சிறந்த பயிற்சிகளேத் தருவதிலும் சிறந்து விளங்கி வந்தனர். இவர் களது திறமையைப் பல்லவ மன்னர்களும் மற்ற தமிழக

மன்னர்களும் நன்கு பயன்படுத்திக்கொண்டவர். இவர்களுள் சிறந்தவர்களை தங்களது யானைப் படைக்குத் தலைவர்களாக வும் அமர்த்திக் கொண்டனர். இப்படிப் பணியாற்றிய தொண்டைமான் கோட்டை கள்ள மரபினர் காஞ்சியிலும் மற்றும் பல்லவ நாட்டின் பல பகுதிகளிலும் பரவினர். இவர்களுள் சிலர் பிற்காலத்தில் அதாவது சோழர்கள் தலை யெடுத்திருந்த பத்தாம் பதினோராம் நூற்றாண்டுகளில் மேலும் தெற்கு நோக்கிச் சென்று தமிழகத்தின் பல பகுதி களில் குடிபெயர்ந்தனர். அவ்வாறு குடியேறிய இடங்களில் திருச்சிக்கு அருகில் இன்று அன்பில் என்றழைக்கப்படும் கிராமம் மிகவும் முக்கியமானதாகும்.

காஞ்சியிலிருந்து அன்பிலுக்கு வந்து இம்மரபினர் அங்கு சிறிது காலம் இருந்து பிறகு புதுக்கோட்டையில் தற்போது ஆலங்குடி தாலுக்கா பிரிவாக விளங்குகின்ற பல பகுதிகளில் குடியேறினர். இவ்வாறு அவர்கள் குடியேறிய இடங்களில் ஒன்பது பகுதிகள் முக்கியமானவை.

1. பிலாவிடுதி. 2. வடக்கலூர், 3. கல்லாக்கோட்டை, 4. கரம்பக்குடி, 5. நெய்வேலி, 6. நரங்கியம்பட்டு, 7. அம்மணிப்பட்டு, 8. பந்துவாக்கோட்டை, 9. மங்கள வெள்ளாள விடுதி—ஆகியனவையாகும்.

மேற்கண்ட ஒன்பது இடங்களில் கரம்பக்குடியில் குடி யேறிய கள்ளர் வகுப்பினர், வீரத்திலும் கடின உழைப் பிலும் சிறந்து விளங்கினர். இவர்கள் தம் முன்னோர்கள் செய்து வந்த தொழிலாகிய யானைகளைப் பிடித்தல், அடக்கு தல், பழக்குதல் போன்றவற்றில் தனிச் சிறப்பு பெற்றிருந்த துடன் விவசாயத்திலும் கண்ணும் கருத்துமாய் இருந்து வளர்ச்சியும் வியாபகமும் பெற்றனர். இந்தப் பிரிவினரி லிருந்து தோன்றி புகழுடன் விளங்கியவர்களே நமது புதுக் கோட்டை தொண்டைமான் பரம்பரையினர் ஆவர்.

புதுக்கோட்டை தொண்டைமான்களின் வரலாற்றைப் பற்றி பராபரிச் செய்திகளும் கர்ண பரம்பரைக் கதைகளும் சில உண்டு. கி.பி. 1750 ஆம் வருட வாக்கில் புதுக்கோட்டை சமஸ்தானத்தின் அரசவை கவிஞனாயிருந்த வெங்கண்ண

என்பவர் தொண்டைமான் வம்சாவளி என்கிற ஒரு தெலுங்கு காவியத்தை இயற்றியிருக்கிருர். அதில் கீழ்க் கண்டவாறு ஒரு கதையைக் கூறுகின்ருர்.

ஒரு சமயம் இந்திரன் பூலோகத்தைச் சுற்றிப் பார்க்க வந்தானும். வழியிலே அழகியதோர் இளம் கன்னியைக் கண்டானும். அந்த மங்கையின் மதிவதன அழகிலே தம் மனதைப் பறி கொடுத்த அவன் அப்பெண்ணை காந்தர்வ விவாகம் செய்து கொண்டானும். அவர்களுக்குப் பிறந்தவர் களின் வழித்தோன்றல்களே புதுக்கோட்டை தொண்டை மான் வம்சத்தவர்களாம்.

இப்படி ஒரு கதையைக் கூறுகின்ற அக் காவியம் முதல் வழித் தோன்றலிலிருந்து அடுத்தடுத்து பதினைந்து பெயர் களை வரிசைப்படுத்திக் கூறி வம்சா வழியை விவரிக்கின்றது. அவைகளாவன.

1. திருமால், 2. நமனு, 3. பச்சை, 4. தண்டகா, 5. நமனு, 6. திருமா, 7. நமனு, 8. பச்சை, 9. நமனு, 10. பச்சை, 11. கிண்கிணி, 12. தண்டகா, 13. திருமா, 14. பச்சை, 15. **ஆவுடைராயத் தொண்டைமான்.**

ஆஸ்தான கவிஞர்கள், பொதுவாக அரச பரம்பரை யினர்களைப் பெருமைப்படுத்தும் வகையில் மிகைப்படுத்தி எப்படியெல்லாமோ வர்ணிப்பதுண்டு. ஆனுல் பரம்பரை வழித்தோன்றல்களை குறிப்பிடுவதில் பிசகிருக்காது என்பதை உறுதியாக நம்பலாம்.

கரம்பக்குடி கள்ளர் மரபினரான மேற்கண்ட பதினைந்து வழித்தோன்றல்களில் பதினுன்காவது வாரிசான **பச்சைத் தொண்டைமான்** செல்வச் செழிப்புடன் மிகச் சிறப் பாக தமது குடும்பத்தை நடத்தி வந்தார். அக்குடும்பத்துக்கு மேலும் சிறப்பைத் தேடி வைத்தவர் அவருடைய மகனுன ஆவுடைராயத் தொண்டைமானேயாகும். இவர் வீர சாகஸச் செயல்களே காலப் போக்கில் பிற்காலச் சந்ததியின ரால் அரச அந்தஸ்தைப் பெற வித்திட்டன என்றுகூடச் சொல்லலாம்.

ஏறத்தாழ 350 ஆண்டுகளுக்கு முன்பு 1639ம் வருட வாக்கில் விஜய நகரப் பேரரசர் ஒருவர் தமது பரிவாரங்களுடன் இராமேஸ்வர யாத்திரையை மேற்கொண்டார். கரம்பக்குடி பகுதி வழியாகவே அவர் செல்ல வேண்டியிருந்தது. அப்போது அவரது யானைகளில் ஒன்றிற்கு மதம் பிடித்து விட்டது. யாராலும் அதை மடக்கி அடக்க முடியாத நிலையில் ஆவுடைராயத்தொண்டைமான் வெகு துணிச்சலுடன் பாய்ந்து வேகமாகச் செயல்பட்டு தீரத்தோடும், வீரத்தோடும் அந்த மதம்பிடித்த யானையை அடக்கி ஒடுக்கி அதனை அரசர் முன் நிறுத்தினர்.

ராயத் தொண்டைமானின் தீரம் விஜயநகரப் பேரரசரை வியக்க வைத்தது. அவரது வீர தீரத்தை மெச்சி "ராய ராகூத்த ராய வஜ்ரிடு ராய மன்னிடு ராய" என்ற பட்டத்தை அளித்து, அரசர்களுக்கு மட்டுமே உரிய அம்பாரி யானை, முரசு யானை, சிங்கமுகப் பல்லக்கு ஆகியவற்றை வைத்துக் கொள்ளவும் அனுமதி அளிக்கப்பட்டது. மேலும் பல நிலங்களும் பரிசாகக் கொடுக்கப்பட்டது. அதோடு அவரது அந்தஸ்தை உயர்த்துகின்ற முகமாக உலா வருகின்றபோது கட்டியக்காரர்களை வைத்துக்கொள்ளவும், பகலிலே பவனி வருகிறபோது தீப்பந்தங்களை உபயோகித்துக் கொள்ளவும், சிற்றரசர்களுக்குரிய கண்ட பேருண்டக் கருவியை முழங்கிடவும் உரிமையளிக்கப்பட்டது. இவரது சின்னங்கள் விளக்கும் வகையில் சிம்மம், மீனம், அனுமான் ஆகிய துவஜங்களை வைத்துக் கொண்டு உலா வரும் சிறப்பும் அளிக்கப்பட்டது. இப்படியாக ராஜ மரியாதைகள் அனைத்தும் அரசுரிமை கிடைப்பதற்கு முன்பாகவே ஆவுடையராய தொண்டைமானுக்குக் கிடைத்து விட்டது.

இத்தனை சிறப்புகளையும் தந்த விஜயநகர மன்னர் யார் என்பதைப் பார்க்கின்றபோது விஜய நகரப் பேரரசின் கடைசி மன்னரான ஸ்ரீரங்கராயர்தான் அளித்தார் என்பதாக புதுக்கோட்டை மானுவலும் (Pudukottai Manual) புதுக்கோட்டை சமஸ்தானத்துப் பொது

வரலாறு (A General History of Pudukottai State) என்று திரு. இராதாகிருஷ்ணன் அவர்களால் எழுதப்பட்ட நூலும் குறிப்பிடுகின்றன.

ஆனுல், வரலாற்றின் கால கட்டங்களை ஆராய்ந்து பார்க்கின்றபோது இந்தக் கூற்று உண்மைக்குப் புறம்பான தாக முரண்படுகின்றது.

ஆவுடையராயத் தொண்டைமான் 1639-ம் ஆண்டில் தான் விஜயநகரப் பேரரசால் கௌரவிக்கப்பட்டாரென்ப தாக ஒப்புக் கொள்ளப்பட்டால், அந்தச் சிறப்பை அளித்த அரசர் இரண்டாம்வெங்கிட்டராயர் என்பதுதான் உண்மை. காரணம் 1630 முதல் 1642 வரை விஜயநகரப் பேரரசராக மேற்கூறப்பட்டவரே இருந்திருக்கிருர். எனவே 1639 ஆம் வருடத்திய நிகழ்ச்சி இந்த அரசரின் ஆட்சி காலத்திற்கு உட்பட்டதாகும்.

மேலும் 1642ம் ஆண்டு வாக்கில்தான் மூன்ரும் ஸ்ரீரங்கராயர் விஜயநகரப் பேரரசராகப் பட்டம் ஏற்றிருக்கிருர். எனவே ஆவுடைத் தொண்டைமானுக்கு 1639ல் விஜயநகர மன்னரால் விருதுகள் வழங்கப்பட்டிருக் கிறதென்ருல், அது இந்த மூன்ரும் ஸ்ரீரங்கராயரால் அளிக்கப்பட்டதல்ல என்பது தெள்ளத் தெளிவாகிறது. மேலும், சரித்திர சம்பவங்களை ஆராய்கின்றபோது 1638 முதல் 1642 வரையிலான கால கட்டத்தில் இந்த ஸ்ரீரங்கராயர், விஜயநகரப் பேரரசின் மன்னராக விளங்கிய இரண்டாவது வெங்கிட்டராயருக்கு எதிராக தமிழகத்தின் வடமேற்குப்பகுதியில் — அதாவது கர்நாடகப் பகுதியில் கிளர்ச்சிகளையும் எதிர்ப்பு இயக்கங்களையும் நடத்தி வந்திருக்கிருர் என்பது தெளிவாகத் தெரிகிறது.

ஆவுடையராயத் தொண்டைமான் விஜயநகர அரசால் தான் சிறப்பிக்கப்பட்டார் என்பதை நோக்குமிடத்து, அந்தச் சிறப்பை அளுத்த மன்னர் ஸ்ரீரங்கராயராக இருக் கவே முடியாது என்பதற்கு மற்ருெரு அனுமானமும் உள்ளது. தமது ஆட்சி காலத்தில் இரண்டாம் வெங்கிட்ட

ராயர் தமிழகத்தில் மதுரை நாயக்க மன்னர்களுடனும், மற்றும் இதரச் சிற்றரசர்களுடனும் நல்ல உறவு முறைகளுடன் சுமுகமாக நடந்து வந்திருப்பதாகச் சரித்திரம் கூறுகின்றது. ஆனால், மூன்றும் ஸ்ரீரங்கநாயரின் போக்கை வர்ணிக்கையில் அவர் தமிழகச் சிற்றரசர்களைஎவ்வாறேனும் அடக்கி ஒடுக்கிவிட வேண்டுமென்ற ஆவேசத்துடன் செயல்பட்டதாகக் கூறுகின்றது. இத்தகைய மனப்போக்குடைய மன்னன், அரச அந்தஸ்து ஏதுமின்றிருந்த ஆவுடைராயத் தொண்டைமானை மெச்சி அவருக்கு ராஜ அந்தஸ்துகளை எப்படி அளித்திருக்க முடியும் என்பதும் சிந்திப்பதற்கு உரியதாகும்.

எனவே, இவற்றையெல்லாம் கொண்டு ஆராய்கின்றபோது ஆவுடைராயத் தொண்டைமானுக்கு விருதுகள் அளித்துப் பாராட்டி, சிறப்பித்த விஜயநகர மன்னர் இரண்டாம் வெங்கிட்டராயராகவே இருக்க வேண்டுமெனத் தோன்றுகிறது.

இந்நூல் சம்பந்தப்பட்ட மட்டில் ஆவுடைராயத் தொண்டைமான் காலத்திலிருந்துதான் இன்றைய புதுக்கோட்டைத் தொண்டைமான்களின் அரசு பற்றிய வரலாறு தோன்றியது எனலாம்!

## 2. தந்தையை மிஞ்சிய தனயன்

சாதாரணமான ஒரு குடிமகனாக—சிறந்ததொரு குடும்பத் தலைவனாக தன்னைச்சார்ந்த கரம்பக்குடி மரபினர்களுக்கு மத்தியில் தலைவனாக விளங்கி விஜயநகர அரசினால் பெரிதும் கௌரவிக்கப்பட்டிருந்த ஆவுடைராயத் தொண்டைமான் 1661-ஆம் ஆண்டு இயற்கையெய்தியதாக புதுக்கோட்டை மானுவலும், இதர வரலாற்று நூல்களும் கூறுகின்றன. அவர் சிறப்போடு வாழ்ந்த காலத்தில் விருதுகள் பெற்ற ஆண்டுக்கு அடுத்த இரண்டு ஆண்டுகளில் அவருக்கு ஓர்

ஆண் குழந்தை பிறந்து அதற்கு ரகுநாத தொண்டைமான் என பெயரிடப்பட்டது. ரகுநாதனை அடுத்து நமனு, பச்சை, பெருமா என்ற மூன்று பிள்ளைகள் அடுத்தடுத்து ஆவுடை ராயத் தொண்டைமானுக்குப் பிறந்தன. இந்த நான்கு பிள்ளைகளைப் பற்றியும் தொண்டைமான் வம்சாவளி சந்தேகத்திற்கு இடமின்றி உறுதிப்படுத்துகிறது. இது தவிர 'காதலி' என்ற பெயருடைய ஒரு பெண்ணையும் ஆவுடை ராயத் தொண்டைமான் பெற்றிருந்ததாக சில சரித்திரக் குறிப்புகளில் இருந்து அறிய முடிகிறது.

ஆவுடைராயத் தொண்டைமான் மரித்தபோது அவரது மூத்த புதல்வனான ரகுநாதராயத் தொண்டைமான் இருபது வயது வாலிபனாக இருந்தான். தந்தை இறந்ததுமே அவரது வாரிசாக பொறுப்பேற்றார் ரகுநாதராயத்தொண்டைமான்.

அது 1661-ம் வருடமாகும்.

அவர் பொறுப்பேற்றபோது தமிழகத்தின் தென்பகுதியில் குறிப்பிடத்தக்க அரசுகளாக தஞ்சை, மதுரை, இராமநாதபுரம் ஆகியவை மட்டுமே விளங்கின. தஞ்சையை அச்சுத விஜயராகவ நாயக்கரும், மதுரையை சொக்கநாத நாயக்கரும் ஆண்டு வந்தனர். இராமநாதபுரம் ரகுநாதத் தேவர் என்றழைக்கப்பட்ட திருமலைச்சேதுபதியின் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது.

தஞ்சையும், மதுரையும் விஜயநகரப் பேரரசுக்கு உட்பட்டதாக இருக்க, மதுரைக்கு உட்பட்டதாக இராமநாதபுரம் இருந்து வந்தது.

இது பெயரளவில் அமைந்ததொரு அரசு நிலை. உண்மையைச் சொல்லப் போனால் ஒவ்வொரு அரசும் இயன்ற அளவில் அதிகாரங்களைக் காட்டிக் கொண்டிருந்தது.

இந்நிலையில் விஜயநகரப் பேரரசு தமிழகத்தில் தமது நிலையை உறுதியாக நிலைநிறுத்திக்கொள்ள முயற்சித்துக் கொண்டிருந்த கோல்கொண்டா, பீஜப்பூர், மொகலாயர் ஆகிய முகம்மதிய அரசர்களும் தமிழகத்தை கபளீகரம் பண்ண எத்தனித்துக் கொண்டிருந்தனர். தெக்கண



முகம்மதிய படையெடுப்புகளில் படைத் தலைவர்களாக வந்த மராட்டியர்களும் தங்களுக்கென்று ஒரு ஆளுகைப் பிரதேசத்தை தமிழகத்தில் தேடிக்கொள்வதில் முனைந்து இருந்தனர். இப்படி குறிப்பிடத்தக்க அரசுகள் அத்தனையும் தமிழகத்தைச் சூறையாட முயற்சித்துக்கொண்டிருந்தன.

இது பதினேழாம் நூற்றுண்டின் ஆரம்ப கால நிலையாகும்.

குழப்பமும், கலவரமும் மிகுந்த இந்தக் காலப் பகுதியில்தான் புதுக்கோட்டை தொண்டைமான்களின் அரசு தோன்றியது எனலாம். அது எவ்வாறு என்பதை ஆராய்வோம்.

ஆவுடைராயத் தொண்டைமானுக்கு வாரிசாகப் பொறுப்பேற்ற சிறிது காலத்திற்குள் தந்தை வைத்துச் சென்ற ஆஸ்தி, பாஸ்திகளையும், அந்தஸ்துகளையும் மேலும் பெருக்கிக்கொள்ள வேண்டுமென்ற துடிப்பு ரகுநாதராயத் தொண்டைமானுக்கு ஏற்பட்டது. தமது திறமையைக் காட்டி அந்தஸ்தில் உயர்வதற்கு ஏற்ற இடமாக தஞ்சை இருக்கும் என்ற கருத்தும் அவரது சிந்தையில் உருவாகியது.

ரகுநாதராயத் தொண்டைமானின் இந்த விருப்பம் நிறைவேறத்தக்க விதத்தில் எதிர்பாராததொரு வாய்ப்பு கிடைத்தது.

தஞ்சை அரண்மனையில்—அச்சுத விஜயராகவரின் அரசவையில் ஒரு ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது. அரச குடும்பத்தினர் சேதுக்கரைக்கு தீர்த்தமாடச் சென்று திரும்புகிற வழியிலே கொள்ளைக்காரர்களின் தாக்குதலுக்கு இலக்காகி தப்பி வந்திருந்தனர். அரச குடும்பத்தினர் மட்டும் இதுபோன்ற தாக்குதலுக்கு ஆளாகவில்லை; சேது, இராமேஸ்வரம் செல்லுகின்ற யாத்திரீகர்களும் வழிப்பறி செய்யப்பட்டு வருவது வெகு சகஜமாகி விட்டது. இதைத் தடுப்பதற்கென எவ்வளவோ பந்தோபஸ்துகளை ஏற்படுத்தியும் பலனில்லை. சதா காலமும் விழிப்புடனிருக்கும் தஞ்சை வீரர்களின் கண்களில் மண்ணைத் தூவுவது என்பது சாதா

ரணத் திருடர்களுக்கு எளிதானதல்ல. எனவே சாமர்த்திய மாக வழிப்பறி செய்ய வல்லவர்கள் கள்ளர் வகுப்பின ராகவே இருக்க வேண்டுமென்று தோன்றியது.

ஆலோசனைக் கூட்டம் இதுபற்றி விவாதித்து ஒரு முடி வுக்கு வந்தது. யாத்ரீகர்களின் பாதுகாப்புப் படை ஒன்றை பிரத்தியேகமாக அமைப்பது என்று ஒரு முடிவெடுத்தனர். இப்படைக்கு கள்ளர் குலத்தைச் சேர்ந்த வல்லவன் ஒருவனையே தலைவனாகத் தேர்ந்தெடுத்து பொறுப்பை ஒப்படைக்கலாம் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

இதற்கு ஏற்றவர் யார் என்பது பற்றி விவாதிக்கப் பட்டது.

பட்டுக்கோட்டைக்குப் பக்கத்திலுள்ள கரம்பக்குடியில் கள்ளர் குலத் தலைவனாயிருக்கும் ரகுநாதராயத் தொண்டை மானே இப்பதவிக்கு ஏற்றவரென்றும், தெய்வ பக்தி மிகுந்த வராகவும் வேட்டையாடுவதிலும் வேல் கம்பு சுற்றுவதிலும் இணையற்ற வீரராகத் திகழ்வதாகவும் பலர் பெருமையாகக் கூறவே, அந்த ஆலோசனை அரசால் ஏற்கப்பட்டு ரகுநாத ராயத் தொண்டைமானுக்கு உடனடியாக அழைப்பு அனுப்பப்பட்டது.

அச்சுத விஜயராகவ நாயக்கரின் ஆணையை ஏற்று தஞ்சைப் படையில் சேர்ந்த ரகுநாதராயத் தொண்டை மான் வழிப்பறி செய்துவந்த கொள்ளைக்காரர்களை வேட்டை யாடி அடக்கி, யாத்திரீகர்களின் பிரயாண பயத்தைப் போக் கினார். இவரது தீரத்தையும் திறமையையும் கண்டு வெகு வாக அதிசயித்தார் தஞ்சை மன்னர். அத்தொண்டைப் பாராட்டுகிற வகையில் தொண்டைமான் பாராட்டப்பட் டார். தீரத்திற்குப் பரிசாக 'இராம மடம்' வகையைச் சேர்ந்த வைரம் பதித்த—விலையுயர்ந்த கழுத்து மாலை ஒன் றும் மன்னரால் அவருக்கு வழங்கப்பட்டது. மேலும் சிறிது நாட்களுக்குப் பின், மற்றொரு சந்தர்ப்பத்தில் இரகுநாத ராயத் தொண்டைமான் காட்டிய வீரச் செயலைப் போற்று கின்ற வகையில் விருது வாள் ஒன்றும் மன்னரால் அளிக்கப் பட்டது. 'பெரிய இராம பாணம்' என்று கூறப்படும் இந்த

வாளும், அதற்கு முன்னதாகக் கிடைக்கப்பெற்ற விலை உயர்ந்த வைர மாலையும் இன்னமும் தொண்டைமான் அரச குடும்பத்தினரால் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வரு கிறது.

இவ்வாறாக, தஞ்சை அரண்மனையில் யாவரும் மெச்சு கின்ற முறையில் சிறப்புடன் பணியாற்றி வந்த இரகுநாதர் சில காலத்திற்கெல்லாம் தம் ஊரான கரம்பக்குடிக்குத் திரும்பிவிட்டார். இதற்கான காரணங்கள் இரண்டை புதுக்கோட்டை சமஸ்தானத்து வரலாற்றை எழுதியுள்ள தி. இராதாகிருஷ்ணன் அவர்கள் அடுத்தடுத்துக் கூறு கின்றார்.

1673-ல் தஞ்சைமீது மதுரை சொக்கநாத நாயக்கரால் போர் தொடுக்கப்பட்டு, அது வீழ்ச்சியுற்றதால் தொண்டை மான் கரம்பக்குடிக்குத் திரும்பி விட்டார் என்பது ஒரு காரணம்.

தஞ்சை நாயக்கர் தீவிர வைணவ பக்தரென்றும், இரகு நாதத் தொண்டைமான் பழுத்த சிவ பக்தரென்றும், தஞ்சை நாயக்கரின் வைணவ பக்தி நாளுக்கு நாள் அதிகரித்து வைஷ்ணவ வெறியில் போய்க் கொண்டிருந்த தால், அப்போக்கு பிடிக்காமல் இரகுநாதத் தொண்டை மான் தஞ்சையைவிட்டு கரம்பக்குடிக்குத் திரும்பிவிட்ட தாகவும் இரண்டாவது காரணம் கூறப்பட்டுள்ளது.

மேற்கண்ட இரண்டு காரணங்களும் அடுத்தடுத்துக் கூறப்படுவதால் ஒன்றுக்கொன்று முரண்படுவதாக உள்ளது. ஆனால் இந்த முரண்பாடுகளை நுணுக்கமாக ஆராய்கின்ற போது 1673-ல் தஞ்சை வீழ்ச்சியுறுவதற்கு முன்னதாகவே இரகுநாதத் தொண்டைமான் கரம்பக்குடிக்குத் திரும்பிவிட் டார் என்பதே ஊர்ஜிதமாகிறது.

தஞ்சையிலிருந்து கரம்பக்குடிக்குத் திரும்பி இரகு நாதத் தொண்டைமான் ஏறக்குறைய பத்து ஆண்டுகள், வேறு எந்த அரசுப் பணிகளிலும் சேராமல் தமக்குரிய நில புலன்களைக் கவனித்துச் செம்மைப்படுத்துவதில் ஈடுபட்டிருந் ததாகத் தோன்றுகிறது. அதன்பிறகு தமது வீரத்தையும்

சேவையையும் மதுரை அரசுக்கு சமர்ப்பிக்க வாய்ப்பு ஏற்பட்டது. இதற்குக் காரணம் இடையே மதுரை அரசில் ஏற்பட்ட ஒரு குழப்பமான நிலையேயாகும்.

மதுரை சொக்கநாத நாயக்கரால் மிகவும் விரும்பப்பட்ட தம் மகளான மோகனங்கியை தஞ்சை அரசரான விஜயராகவர் மணம் செய்து கொடுக்க மறுத்த காரணத்தாலும், சொக்கநாதர் மதுரை அரசனாக இருந்தபோதிலும் அவர் குடும்பம் அரச குடும்பமானதல்ல என்று இளக்காரமாக ஏசியதாலும், படையெடுத்தாவது பணியவைத்து மோகனங்கியை மணந்தே தீருவதென்றுதான் சொக்கநாதர் தஞ்சைமீது படையெடுத்தார். அப்போரில் மதுரை வெற்றி கண்டபோதிலும் தஞ்சை மன்னரைப் பணியவைக்க முடியவில்லை. விஜயராகவர் போர் புரிந்து வீர மரணமடைந்ததோடு, அந்த ராஜ குடும்பத்தில் பெண்டிர் அனைவருமே தீக்குளித்து உயிரை விட்டுவிட்டனர். சொக்கநாதர் ஆசைப்பட்ட மோகனங்கியும்கூட நெருப்பிலே விழுந்து உயிரை மாய்த்துக்கொண்டாள்! இப்படியாக சொக்கநாதரின் உள்ளத்திலே வியாபித்திருந்த மோகனங்கியின் உருவம் அவரைப் பார்த்து ஏளனமாகச் சிரித்துக்கொண்டேயிருந்தது தமது மனம் கவர்ந்த மோகனங்கியை மறக்கமுடியாதவராய் மதுராதிபதி மீளாத துயரத்தில் ஆழ்ந்துவிட்டதால் அரசாங்க அலுவல்களில் அவரால் அதிகமாக அக்கறை காட்ட முடியவில்லை. மங்கம்மாளை மணந்தபின்பும் இந்த மனோ வியாதி தீராமலே இருந்ததாலோ என்னவோ, பித்துப் பிடித்தவர்போல இருக்கவே, அவருடைய அரசியல் விரோதிகளிடமிருந்து எதிர்ப்பு தோன்றத் தொடங்கியது. அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாக வதந்தியைப் பரப்பி அவருக்குப் பதிலாக அவரது சகோதரனை முத்து அழகாத்திரி எனப்படும் முத்துலிங்க நாயக்கரை 1678-ம் ஆண்டில் அரச பீடத்தில் அமர்த்தினர். சொக்கநாதர் அரண்மனைக்குள்ளேயே காவலில் வைக்கப்பட்டார்.

முத்து அழகாத்திரியால் நாட்டைச் சரிவர ஆளமுடியவில்லை. சொக்கநாதரை அதிகாரத்திலிருந்து நீக்கியதை

மக்களில் பெரும்பாலோர் விரும்பவில்லை. நாட்டிலே எங்கும் குழப்பம் மிகுந்திருந்தது. இந்த சூழ்நிலையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு சொக்கநாதரை மீட்டு அவரிடம் அரசை ஒப்புவிக்க முன்வந்தது போன்று போக்குக் காட்டி ருஸ்தம்கான் என்பவன் நடுவில் புகுந்து தமது குதிரைப் படையின் பலத்தால் அதிகாரத்திலிருந்த அழகாத்திரியை அகற்றி அரசைக் கைப்பற்றிக்கொண்டான்!

மதுரை அரசைக் கைப்பற்றிக்கொண்ட ருஸ்தம்கான் சொக்கநாதரை அரண்மனைக் காவலிலிருந்து விடுவித்தான். ஆனால் நாட்டை அவரிடம் ஒப்படைக்கவில்லை. தாமே மதுரை மன்னனெனப் பிரகடனப்படுத்திக்கொண்டான்! ஆட்சியும் புரியத் தொடங்கினன்.

இத்தனைக்கும் ருஸ்தம்கான் அன்னியனல்ல; மதுரைச் சேனையில் குதிரைப் படைக்குத் தலைவனாக இருந்தவனாகும்.

மதுரையின் ஆட்சி ஒரு முகம்மதியப் போர் வீரனிடம் சிக்கிவிட்டதே என்பதை சொக்கநாதருக்கு எதிராக இருந்தவர்களும் உணரத் தலைப்பட்டனர். ருஸ்தம்கானின் அதிகாரத்தில் தளவாயாக இருந்த கோவிந்தப்பையரும்கூட இதற்காக வருந்தினர். ராணி மங்கம்மாளும் வாளாயிருக்கவில்லை. ருஸ்தம்கானின் பிடிப்பிலிருந்து மதுரையை விடுவிக்க இராமநாதபுரம் மன்னரான கிழவன் சேதுபதி, கன்னிவாடி போன்ற சில நம்பிக்கையான பாளையக்காரர்களின் உதவியை வேண்டினள். தகுந்த தருணம் பார்த்து சேதுபதியும் கன்னிவாடி பாளையக்காரர் போன்றவர்களும் ருஸ்தம்கானுக்கு எதிராகக் கிளம்பி மதுரையை மீட்டு சொக்கநாதரிடம் ஒப்படைத்தனர்.

இந்த முயற்சியில் ரகுநாதத் தொண்டைமானும் பெரும் பங்கெடுத்துக்கொண்டார் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

சமயத்தில் செய்த உதவிக்கு நன்றியாக 12 கள்ளர் குடிகளுக்குத் தலைமையாக இருக்கும் உரிமையும், திருச்சியின் அரசு காவலராக இருக்கும் சிறப்பும் இரகுநாதராயத் தொண்டைமானுக்குக் கிடைத்தது!

## 3. உறவு தந்த உயர்வு

திருச்சியின் அரசு காவலராகப் பொறுப்பேற்ற இரகுநாதராயத் தொண்டைமான், திறம்படச் செயலாற்றி வந்தது கிழவன் சேதுபதியை வியப்புற்ற வைத்தது. அதோடு மற்ருெரு ஆவலும் துளிர்த்தது. அசகாய சூரத்தனமும் துணிவும் கொண்ட இரகுநாதத் தொண்டைமானை தமது படையில் சேர்த்துக் கொள்ளப் பெரிதும் விரும்பினர். அதன் விளைவாக இரகுநாதத் தொண்டைமானும் அவரது சகோதரரும் இராமநாதபுரத்து படைப் பிரிவுகளுக்கு தலைவர்களாயினர். அவர்களுடைய தலைமை இராமனுத புரத்துக்குப் பல வெற்றிகளை ஈட்டுத் தந்தது.

இரகுநாதராயத் தொண்டைமான் சேதுபதிக்கு ஆற்றிய சேவைகளில் குறிப்பிடத் தகுந்தவை மூன்ருகும்.

சேதுபதிக்கு அவ்வப்போது தொல்லைகள் கொடுத்துக் கொண்டிருந்த அக்கம் பக்கத்து எதிரிகளை அடக்கி ஒடுக்கினர்.

இராமனுத புரத்துக்கும் தஞ்சைக்கும் அப்போது பகைமை இருந்தது. தஞ்சை மராட்டிய மன்னனின் ஆணவத்தை சிதைக்கின்ற வகையில் அவரது பட்டத்து யானை தந்திரமாகக் கடத்தப்பட்டு சேதுபதியின் முன்னே நிறுத்தப்பட்டது!

சேதுபதியை எதிர்த்து எட்டயபுரத்து பாளையக்காரர் போர்க்கொடி தூக்கி ஆர்ப்பரித்த போது எட்டய புரத்தரின் கலகத்தை அடக்க இரகுநாதராயத் தொண்டைமான் அனுப்பப்பட்டார். படையுடன் சென்று கலகத்தை ஒடுக்கிய இரகுநாதத் தொண்டைமான் எட்டயபுரத்துப் பாளையக்காரரின் தலையைக் கொய்து வந்து வெற்றிச் சின்னமாக சேதுபதியின் காலடியில் கிடத்தினர்!

இத்தகைய வீரசாகஸங்களால் சேதுபதியின் நன் மதிப்பை இரகுநாதராயத் தொண்டைமான் பெற்றதோடு அவரது நம்பிக்கைக்குகந்த படைத் தலைவராகவும் விளங்கி வந்தார். இப்படியாக சேதுபதியின் வலக்கரம் போன்று

விளங்கி வந்த இரகுநாதராயத் தொண்டைமானுக்கு ராஜ யோக காலம் ஆரம்பமாகியது.

சேதுபதிக்கு அடைமொழியாகக் கிழவன் என்ற சொல் பெயருக்கு முன்னதாக இடம் பெற்று கிழவன் சேதுபதி என அழைக்கப்பட்டு வந்தாலும்கூட, சேதுபதியை மூப்படைந்த கிழவனாக மதிப்பிட்டு விடுவதற்கில்லை! பெருமையைக் குறிக்கும் கிழார் என்ற சொல்தான் கிழவன் என மருவுற்று, சேதுபதியைப் பெருமைப்படுத்தும் வகையில் கிழவன் சேதுபதி என்று குறிப்பிடப்பட்டு வந்தது. சேதுபதி மன்னர்களிலேயே பெரும் செல்வாக்கும் பலமும் பொருந்தியவராக விளங்கிய தலைவர் என்ற பொருளில் மறவர்களால் கிழவன் என்று அழைக்கப்பட்டு வந்ததாகவும் கொள்ளலாம்.

இரகுநாதராயத் தொண்டைமானுக்கு 'காதலி' என்ற பெயருடைய உடன்பிறப்பு ஒருத்தி உண்டு என்பதை ஏற்கனவே கூறியுள்ளோம். அப்பெண்ணை கிழவன் சேதுபதி பார்க்க நேர்ந்தது. பேசிப் பழக பல சந்தர்ப்பங்களும் வாய்த்தன. உள்ளங்கள் அவர்களிடையே மாறிப் புகுந்தன. அதன் பயனாய் காதலியைத் திருமணம் செய்து கொண்டார் சேதுபதி; இத் திருமணத்தின் விளைவாக சேதுபதியின் அபிமானத்துக்குரியவராயிருந்த தொண்டைமான் நெருங்கிய உறவிற்கும் உரியவரானார். இதையொட்டி சேதுபதியின் மனதில் திட்டமொன்று உருவாகியது. தமது மைத்துனர்களாகிவிட்டவர்களையும் தம்மைப் போல் ஓர் அரசிற்கு உரிய தலைவராக ஆக்கிவிட வேண்டுமென்பது அவரது விருப்பமாயிருந்தது. இந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள தெற்குப் பகுதி கள்ளர் படைக்குத் தலைவனாயிருந்த இளந்தரி முத்துலிங்க அம்பலக்காரன் என்பவர் ஓர் ஆலோசனையைக் கூறினார்.

அச் சமயத்தில், இப்போதைய புதுக்கோட்டை மாவட்டத்தின் குளத்தூர், திருமயம் ஆகிய பகுதிகளை பல்லபராயர் மரபினர் ஆண்டு வந்தனர். கி.பி.14—ம் நூற்றாண்டிலிருந்து தொடர்ந்து இப் புதுக்கோட்டை பகுதிகளை இம்மரபினர் தான் ஆண்டு வந்திருக்கின்றனர்.




சேதுபதிக்கு இணையாக அந்தஸ்துடையவர்களாயும் இருந்திருக்கின்றனர். அரசக் குலத் தொன்மையை என்பதைப் பார்க்கையில் 1603—ல் தோன்றிய சேதுபதி மரபினரை விட பல ஆண்டுகள் இவர்கள் பழமை மிக்கவர்கள். இவ்வழிவந்த சிவந்தொழு பல்லவராயர் தான் இப்பகுதியின் அரசராய் இருந்தார். ஆனாலும் இவரது ஆட்சி சேதுபதி உட்பட்ட தாகவே இருந்தது. இவரை ஓட்டிவிட்டு, அந்த இடத்தில் இரகுநாதராயத் தொண்டைமானை அரசராக்கி விடலாமே என்பது இளந்தரி முத்துலிங்க அம்பலகாரரின் யோசனை யாகும்.

இப்படிப்பட்டதொரு யோசனையை அம்பலக்காரர் எடுத்துக் கூற மற்றொரு முக்கிய காரணமும் இருந்தது. மதுரை மன்னரான சொக்கநாதர் இறந்துவிட்ட நிலையில் மதுரை அரசிலிருந்து விடுபட்டு சுயேச்சை மன்னராக விளங்க கிழவன் சேதுபதி விரும்பியது போலவே, சேதுபதி யின் ஆட்சியிலிருந்து விலகி சுயேச்சை மன்னனாக இருக்க விரும்பினார் சிவந்தெழுந்த பல்லவராயர். இதற்கு உதவுமாறு அப்போது தஞ்சை மன்னராயிருந்த எக்கோஜியையும் வேண்டினார். இது சேதுபதிக்கு எதிரானதொரு போக்கு என்பதைச் சுட்டிக் காட்டினான் முத்துலிங்க அம்பலக்காரர்.

சிவந்தெழுந்த பல்லவராயர் மீது சினம் கொண்ட சேது பதி, உடனடியாகத் தன்னை வந்து காணுமாறு அவருக்குச் செய்தி அனுப்பினார். பல்லவராயர் அப்போது தலைநகரி லில்லை. தெய்வ வழிபாட்டில் கண்டதேவியில் தங்கியிருந்தார் செய்தி கிடைத்ததும் தமது சிவபூஜையை முடித்துக் கொண்டு நேரில் வந்து பார்ப்பதாக பல்லவராயர் பதில் செய்தி அனுப்பினார்.

கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து நிற்கவில்லையே என்று சேதுபதி மிகுந்த ஆவேசத்திற்கு ஆளானார். தனது புதல்வர்களில் ஒருவனை ஏவி சிவந்தெழுந்த பல்லவராயரைக் கொன்றுவிட்டு வருமாறு ஆணையிட்டார். பரிவாரங்களுடன் புறப்பட்டான் அந்த இளவரசன். கண்டதேவி குளக்கரை யில் சிவபூஜையில் ஈடுபட்டிருந்த பல்லவராயரை படை

வீரர்கள் கைது செய்தனர். தந்தையிட்ட உத்திரவை நிறை வேற்றுகிற முகமாக அவரைக் கொன்று தீர்த்தான் மகன்!

பல்லவராயரின் மெய்க்காப்பாளர்களுக்கு இது திடுக்கிட வைப்பதாய் இருந்தது. கட்டாரி வீசி யானையின் மீதிருந்த சேதுபதியின் மகனைக் கொன்றனர்.

சிவந்தெழுந்த பல்லவராயருக்கு ஏற்பட்ட அவல முடிவைக் கேள்வியுற்ற அவருடைய மனைவி மக்கள் துயரம் தாளாமல் அரண்மனைக்குஅருகே இருந்த பல்லவன் குளத்தில் விழுந்து உயிர் நீத்தனர்.

பல்லவராயரின் சந்ததியினர் அனைவருமே அழிந்து விட்டனர். இப்பகுதிக்கு ரகுநாதராயத் தொண்டைமானை அரசராக நியமித்தார் கிழவன் சேதுபதி. பல்லவராயர் சீமையிலேயே ரகுநாதராயத் தொண்டைமானுக்கு முடிசூட்டு வைபவம் நடந்தேறியது. தொண்டைமானுக்கு ஒரு தங்கப் பல்லக்கு, வலம்புரிச் சங்கு, 'சின்ன ராமபாணம்' என்ற வாள் ஆகியவற்றைப் பரிசாக சேதுபதி அளித்தார்.

இவ்வாருக இராமனுதபுரத்து கிழவன் சேதுபதியின் உதவியோடு ரகுநாதராயத் தொண்டைமான் 1686—ல் புதுக்கோட்டையின் மன்னரானுர்.

ரகுநாதராயத் தொண்டைமானை அரியணையில் ஏற்றியதன் மூலம் கிழவன் சேதுபதி ஒரே கல்லில் இரண்டு மாங்காயை வீழ்த்தியதாகக் கொள்ளலாம். (1) தமது மைத்துனரைஅரசனுக்கிவிடவேண்டும் எனஅவர் விரும்பியது நிறைவேறியது (2) இராமனுதபுரத்தை அடுத்து இருந்த தஞ்சை நாயக்கர் வம்சம் விஜயராகவ நாயக்கரோடு மறைந்து விட்டது. மதுரை நாயக்கர் அரசும் ஆட்டம் காணத் துவங்கி விட்டது. இந்த நிலையில் தஞ்சை நாயக்கர் அரசுக்கு அடுத்து பழமை பாராட்டிக்கொள்ளதக்க மரபாக இருக்கும் பல்லவராயர்களை அழித்து, தம் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒருவரை அந்த இடத்தில் அமர்த்திவிட்டால் அவரது மேலாண்மையைக் குரோதமின்றி ஏற்றுக் கொண்டு நன்றியுடன் அம்மரபு பணிந்து நடந்து கொள்ளுமல்லவா!

# 4. கிடைத்ததொரு அரசை நிலைநிறுத்திய முதல்வர்

ரகுநாதராய தொண்டைமான் புதுக்கோட்டை மன்னராகியதும் தனக்கு உதவியவர்களையும் உற்றவர்களையும் தகுந்த பதவிகளில் அமர்த்திச் சிறப்பித்தார்.

தமது மைத்துனராகிவிட்ட ரகுநாதராயத் தொண்டைமானை அரச அந்தஸ்துக்கு உயர்த்த வேண்டுமென்று அதற்கான வழியை கிழவன் சேதுபதி தேடிக்கொண்டிருந்தபோது, புதுக்கோட்டை அரசை அளித்துவிடலாமே என்று யோசனை கூறியவர் இளந்தறி அம்பலக்காரர் ஆகும். எனவே அதற்கு நன்றி தெரிவிக்கும் வகையில் ஒரு ஜாகீரை ஒதுக்கி அம்பலக்காரருக்குக் கொடுத்தார் தொண்டைமான்.

தமது முடிசூட்டு விழாவை முன்னின்று நடத்தி வைத்த திருமயத்து தர்மபிள்ளை என்பவரை தமது படைக்கு தலைவராக்கிக் கொண்டார்.

ஆரம்ப நாளிலிருந்து தம்பால் அக்கறை காட்டி உற்றவராயிருந்து மிகவும் உதவி வந்த நல்லகுட்டி வளம் கொண்டார் என்பவருக்கு நிலபுலன்கள் அளித்து அவர் நிலையை உயர்த்தினார்.

இராமநாதபுரத்திலிருந்து வரவழைத்துக் கொண்ட அண்ணு அய்யர் என்பவரை அரசவை வித்வானாகவும், குருந்தபிள்ளை என்பவரை தமது காரியக்காரராகவும் அமர்த்திக் கொண்டார்.

புதுக்கோட்டையை அரசாளத் தொடங்கினார். அவரது இனிமையான சுபாவத்தாலும் நல்ல மனதாலும் தமது குடிமக்களுக்கிடையே நன்மதிப்பும் பெற்றார். அக்கம் பக்கத்து அரசுகளுக்கு அவ்வப்போது அந்தந்த நிலைக்குத் தகுந்து உற்றதொரு நட்பு நாடாகவும் விளங்க வைத்தார். குறிப்பாக ...துரை அரசுக்குப் பெரிதும் பக்க பலமாக இருந்து வந்திருக்...

கிருர். அவற்றில் முக்கியமானதாக திருவிதாங்கூர் படையெடுப்பு குறிப்பிடத்தக்கதாகும்.

சாம்ராஜ்ய அந்தஸ்தை மதுரை மிகவும் இழந்திருந்த சமயம் அது. ரங்ககிருஷ்ண மன்னன் மரணத்திற்குப் பிறகு மதுரைக்கு தாம் செலுத்தி வந்த திறைப் பணத்தை மேலும் செலுத்தி வர. திருவிதாங்கூர் மன்னனுன ரவிவர்மன் மறுத்துவிட்டான். ராணி மங்கம்மாள் அவனிடமிருந்து திறைப் பணத்தை வசூலித்து வர பலம் பொருந்திய படை ஒன்றை அனுப்பி வைத்தாள். அப்போது பெயரளவுக்கு முடி சூடிய மன்னனுக ரவிவர்மன் இருந்தானே தவிர அரசு அதிகாரம் முழுமையும் எட்டு வீட்டுப் பிள்ளைமார் எனப்பட்ட மந்திரிகளிடமே இருந்து வந்தது. மதுரைப் படையை எதிர்த்துத் துரத்த இந்தப் பிள்ளைமார்களும் ஆயத்தமாயினர். ரவிவர்மன் தலைமையில் படை அனுப்பப்பட்டது.

மதுரைப் படை கொர்க்குளத்திற்கு அருகில் தண்டு இறங்கியிருந்தது. அரசு அதிகாரம் கிஞ்சிற்றுமிருந்த ரவிவர்மன் மனதிலே ஒரு யுக்தி தோன்றியது. இரகசியமாக மதுரைப் படைத்தலைவனைச் சந்தித்தான். தன் நிலைமையை விரிவாக எடுத்துரைத்தான். பெயரளவுக்கு தாம் போரிடுவது போல போக்குக் காட்டி தாமும் தம் படையினரும் மலைப் பகுதிக்கு பின்வாங்கிச் சென்றுவிடுவதாகவும், மதுரைப் படை எளிதில் முன்னேறி, நகரைக் கைப்பற்றி விடலாம் என்றும், அச்சமயத்தில் எட்டு வீட்டுப் பிள்ளைமார்களைப் பிடித்து ஒழித்துவிட்டால் திறைப் பணம் முழுதையும் கட்ட தயாரென்றும் உறுதி கூறினுன்.

மதுரைக்கு வேண்டியது திறைப் பணமே தவிர, திருவிதாங்கூர் மண் அல்ல! படைத் தலைவன் இசைந்தான். போர் போலியாக நடைபெற்றது. தோற்றுப் போய் பின் வாங்குவது போன்று ரவிவர்மன் மலைப் பகுதிக்கு நகர்ந்தான். நகரைக் கைப்பற்றிக் கொண்ட மதுரைப் படை எட்டு வீட்டுப் பிள்ளைமார்களில் நாலைந்து பேரைக் கொன்றனர். மற்றவர்கள் தலை தப்பினுல் போதுமென்று நாட்டை விட்டே ஓடிவிட்டனர்.

போர் முடிந்தது என்று மதுரைப் படை ★கொர்க்குலத்தைக் கைப்பற்றிக்கொண்டு ரவிவர்மனின் வரவுக்காகக் காத்திருந்தபோது, சில நாட்கள் கழித்து, மதுரைப் படை ஓய்ந்திருந்த சமயம் பார்த்து மலைப் பகுதிக்குப் படையுடன் பின்வாங்கியிருந்த ரவிவர்மன் திடீர் என வந்து மதுரைப் படையைத் தாக்கிச் சிதறடித்தான். ஏறத்தாழ மதுரைப் படை முற்றுமே அழிந்துவிட்டது!

ரவிவர்மன் செய்த வஞ்சகமான துரோகத்தைத் தெரிய வந்த மங்கம்மாள் கொண்ட சீற்றம் சொல்லி முடியாது. தீரமிக்க தளவாய் நரசப்பையா தலைமையில் பலம் பொருந்திய படை அனுப்பப்பட்டது. அப்படைக்கு பெரும் துணையாக புதுக்கோட்டைப் படையும் பிரதானம் வகித்தது. திருவிதாங்கூர் படை தோற்று ஓடியது. மதுரைப் படை ரவிவர்மன் செய்த நயவஞ்சக துரோகத்தினால் பெரிதும் கொதிப்படைந்திருந்ததால் கோட்டை கொத்தளங்களை இடித்துப் பாழாக்கினர். தோட்டங்களும் வயல்களும் அடியோடு அழிக்கப்பட்டன. ரவிவர்மன் பணிந்து தாம் செலுத்த வேண்டிய திறைப் பணம் முழுதையும் பாக்கியில்லாமல் கொண்டு வந்து கொட்டினான்.

இப்போரில் ரகுநாதராயத் தொண்டைமானின் போர் திறன் மிக மிக வியக்கத்தக்கதாய் இருந்தது, இவர் தலைமையில் இயங்கிய படைப் பிரிவு கம்பம் கூடலூர் ஆகிய பகுதிகளை வென்றது. இதன் பலனாகத் தொண்டைமானின் புகழ் மேலும் சிறப்புற்றது.

திருவிதாங்கூர் போருக்கு மூன்று ஆண்டுகளுக்குமுன் தமிழகத்தை ஆக்ரமிக்க முற்பட்ட மைசூர் படைகளை விரட்டியடித்த மதுரைப் படையிலும் ரகுநாதராய தொண்டைமான் பெரிதும் பங்கேற்றிருக்கிறார்.

தஞ்சை மராத்திய அரசுக்கும் மதுரைக்கும் திருக் காட்டுப்பள்ளி கிராம உரிமை சம்பந்தமாக ஏற்பட்ட

---

★ கொர்க்குலம் என்பது கொல்லமாகவே இருக்க வேண்டுமென்று ஆய்வாளர்களால் கருதப்படுகிறது.

தகராறுகளில் ரகுநாதராயத் தொண்டைமான் மதுரையின் பக்கம் இருந்து தஞ்சையுடன் ஏற்பட்ட பல மோதல்களில் பங்கேற்ருர்.

ரகுநாதராயத் தொண்டைமான் ஒரு சமயம் மைசூருக்கும் ஆதரவாய் இருந்திருக்கிருர். இதில் பாலாஜிபந்த் என்னும் தஞ்சைத் தளபதிக்கு மிகமிகக் கோபம். தொண்டைமானைத் தண்டிப்பதற்காக புதுக்கோட்டையின் மீது படையெடுத்தான். பண்டாரம் பன்றி கொன்ருன், சிங்கப்புலி ஆகிய இரு படைத் தலைவர்களின்கீழ் தஞ்சைப் படையெடுப்பை முறியடிக்க தம் படையை அனுப்பினுர் ரகுநாதராயத் தொண்டைமான். ஆனுல் புதுக்கோட்டை படை தோல்வியுற்றது. இதனை அறிந்த ரகுநாதராயத் தொண்டைமான் தாமே தலைமை தாங்கி பாலாஜிபந்த் தங்கியிருந்த பட்டுக்கோட்டைக்குப் படை நடத்திச் சென்ருர். தொண்டைமானின் வீராவேசத் தாக்குதலைத் தாக்குப் பிடிக்க முடியாமல் பட்டுக்கோட்டையிலிருந்து பின்வாங்கி ஓடினுன் பாலாஜி பந்த்.

1709-ல் இராமநாதபுரத்து கிழவன் சேதுபதி இறந்து விட்டார்; அவருக்குப்பின் அவரது புதல்வரான திருவுடைத் தேவர் சேதுபதியானுர். இவரது ஆட்சிக் காலத்தில் புதுக்கோட்டைக்கும் இராமநாதபுரத்துக்கும் இடையே உறவு சுமுகமானதாக இல்லை.

திருக்காட்டுப்பள்ளியை இழப்பதற்குக் காரணமாயிருந்த ரகுநாதராயத் தொண்டைமானை பழி வாங்குவதற்குக் காத்திருந்த தஞ்சை மன்னன் திருவுடை சேதுபதியுடன் ஓர் உடன்படிக்கையைச் செய்து கொண்டான். அதன்படி தஞ்சை ராமநாதபுரம் படைகள் புதுக்கோட்டையை நோக்கி நகர்ந்தன. தஞ்சைப் படை இந்து ராவ் என்பவரின் தலைமையில் பெருமளவில் திரண்டது. இந்திரத் தேவன் தலைமையில் இராமநாதபுரத்து மறவர் படை திருமயம் வழியாக புதுக்கோட்டையை நோக்கி வந்தது. தஞ்சைப் படை பேரையூரிலும், மறவர் படை கவிநாடு கண்மாய் அருகிலும் பாடி இறங்கின. இருபுறத்

தாக்குதலுக்கு ரகுநாதராயத் தொண்டைமான் கலங்கிவிட வில்லை. தனது குமாரர்களில் வீரம் செறிந்த பெரிய ராய தொண்டைமான், விஜய தொண்டைமான், திருமலை தொண்டைமான், முத்துவிஜய தொண்டைமான் சின்னராய தொண்டைமான் ஆகியவர்களுடன் படை நடத்தி மராத் தியர் — மறவர் படைகளைச் சிதறடித்தார். இப்போரில் இராமனுதபுரத்து மறவர் படைத் தளபதியான இந்திர தேவன் கொல்லப் பட்டான். எதிரிப் படையின் பல யானை களும், குதிரைகளும், பல்லக்குகளும், போர் முரசுகளும் ரகுநாதத் தொண்டைமானுல் கைப்பற்றப் பட்டன. இப் போரில் தந்தைக்குத்துணை ென்ற திருமலை தொண்டைமான் மிக தீரத்துடன் போராடி பெரும் வீரப்புகழ் ஈட்டினுர்.

தஞ்சாவூர் உருட்டு பொம்மை இன்று கூட பேர் போனது! அப்பொம்மை போன்றே அந்த அரசும் நிலையான போக்கில் இருந்ததில்லை.

தஞ்சைக்கு மன்னனுயிருந்த முதலாம் சரபோஜி இராமநாத புரத்திற்கும் புதுக்கோட்டைக்கு மிடையே நிலவியிருந்த மனக் கிலேசத்தை தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு ஏற்கனவே கிழவன் சேதுபதியால் கைப்பற்றப் பட்டிருந்த தஞ்சைப் பகுதியை எப்படியாவது மீட்டுக் கொள்ள வேண்டுமென்ற ஆவலில் தொண்டைமானின் உதவியைக் கோரினுன். இருவருக்கும் இடையே ஒப்பந்தம் மொன்று ஏற்பட்டது. இந்த ஒப்பந்தத்தை தொடர்ந்து சரபோஜி இராமநாதபுரத்தின் எதிராகப் போர் முரசு கொட்டி தஞ்சை, புதுக்கோட்டை, இராமநாதபுரம் ஆகிய மூன்று அரசுப் பகுதிகளும் சந்திக்கின்ற இடமாக விளங்கிய அறந்தாங்கியை வந்தடைந்தான். இராமதாதபுரமும் தம் படைகளுடன் எதிர்த்து வந்தன. துரதிருஷ்டவசமாக — துரதிருஷ்டம் யாருக்கு என்பது புரியாததொரு புதிரில் — பெரும்போர் எதுவும் நடைபெற முடியாது அம்மைநோய் குறுக்கே நின்றது. இராமநாதபுரத்துப் படைவீரர் களிடையே பரவியது. அதோடு அந்நோய் சேதுபதி திருவுடையத் தேவரையும் தொற்றிக் கொள்ளவே, தமது

படைகளுடன் தலைநகருக்குத் திரும்பவேண்டியதாகி விட்டது.

சேதுபதி திருவுடைத் தேவர் அறந்தாங்கியிலிருந்து திரும்பி வந்த சிறிது காலத்திற்கெல்லாம் 1723ல் மரண மடைந்தார். அவர் இறக்கும் தருவாயில் தண்டத்தேவர் என்பவரே தனது வாரிசுதாரர் என்பதாக அறிவித்திருந்தார். ஆனால் கிழவன் சேதுபதியின் காமக்கிழத்தி ஒருத்தியின் மகனாக பவானி சங்கர் என்பவன் அரியாசனத்துக்கு உரிமை கொண்டாடி கலகம் செய்யலானான். இதனால் இராமநாத புரத்தில் தண்டதேவல் கட்சியென்றும் பவானி சங்கர் கட்சியென்றும் இரு கட்சிகள் தோன்றின. தமக்குரிய அரசுரிமையைப் பெற உதவுமாறு மதுரை அரசையும் புதுக்கோட்டை ரகுநாதராயத் தொண்டைமானையும் தண்டத்தேவர் வேண்டிக் கொண்டார். இவ்வாரிசுப் போட்டியில் தமக்குப் பக்கபலமாக தொண்டைமான் இருப்பாரேயானால் திருமயம் கோட்டையையும் கீழாநிலைப் பகுதியையும் தொண்டைமானுக்குத் தருவதாக தண்டத் தேவர் ஒப்பந்தமும் செய்து கொண்டார்.

மதுரைப் படையும் புதுக்கோட்டைப் படையும் பவானி சங்கர் தங்கியிருந்த அறந்தாங்கியை நோக்கி நகர்ந்தன. பெரும்படையாக வருவதை அறிந்த பவானி சங்கர் திகைத்து அறந்தாங்கியை விட்டு வெளியேறினான். ஒப்பந்தப்படி திருமயம் கோட்டையும் கீழாநிலைப் பகுதியும் புதுக்கோட் டைக்குக் கிடைத்தன.

அறந்தாங்கியை விட்டு ஓடிய பவானி சங்கர் தஞ்சை மன்னனிடம் அடைக்கலம் புகுந்தான். வாரிசுப் போராட்டத் தில் தஞ்சை மன்னன் தமக்கு உதவுவானேயாகில் ஏற்கனவே கிழவன் சேதுபதியால் கைப்பற்றப்பட்ட தஞ்சை பகுதிகளை கைமாறாகத் தந்து விடுவதாக உறுதியும் அளித்தான். கைமாறிப் போன அப்பகுதிகளை எப்படி யேனும் மீண்டும் கைப்பற்றியாக வேண்டுமென்று வெறி யோடு இருந்த தஞ்சை மன்னன், பவானி சங்கருக்கு உதவியாகத் தம் படைகளை அனுப்பிவைத்தான்.

ஆனந்தராவ் என்ற தளபதியைத் தலைவனுகக் கொண்டு கிளம்பிய பெரும்படை தண்டத் தேவனுக்கு உதவியாக வந்த மதுரைப் படையைச் சிதறடித்து விட்டு, புதுக் கோட்டையைத் தாக்கத் துவங்கின. இதில் புதுக்கோட்டைப் படையும் தோற்கடிக்கப் பட்டது. எதிலும் வெற்றிவாகை சூடிவந்த தொண்டைமானுக்கு இத் தோல்வி திருஷ்டிப் பரிகாரமாகி விட்டது!

இப்போரில் ரகுநாதராயத் தொண்டைமானின் இரு புதல்வர்கள் எதிரிகளால் சிறைப் பிடிக்கப்படவே, தஞ்சையுடன் சமாதானமாகப் போக வேண்டிய நிர்ப்பந்தம் ரகுநாதராயத் தொண்டைமானுக்கு ஏற்பட்டது. இதன் விளைவாக தண்டத் தேவரிடமிருந்து பெற்ற கீழா நிலைப் பகுதியை தஞ்சைக்குக் கொடுக்க வேண்டியதாகி விட்டது!

திருமயம் தம் ஆளுகைக்குள் இருந்த நிலையில் அதை அடுத்துள்ள பொன்னமராவதி' விராலிமலையின் மேற்குப் பகுதி ஆகியவற்றையும் தமது அரசின் கீழ் கொண்டு வந்து விடப் பெரிதும் ஆவலுற்றிருந்தார் ரகுநாதராயத் தொண்டைமான். ஏற்கனவே பொம்மி நாயக்கன் என்பவரின் நிர்வாகத்திலிருந்த பொன்னமராவதி கிழவன் சேதுபதியால் பறிக்கப்பட்டு இராமநாதபுரத்திற்கு உட்பட்டிருந்தது. அது தண்டதேவன் காலத்தில் இராமநாதபுரத்திலிருந்து பிரிக்கப்பட்டு புதுக்கோட்டையுடன் இணைந்தது. விராலி மலை மேற்குப் பகுதியை எவ்வாறு கொணர்வது என்பதில் தீவிர சிரத்தை காட்டினர் ரகுநாதராயத் தொண்டைமான்.

விராலிமலையின் மேற்குப் பகுதியான ஒலியமங்கலம் மருங்காபுரி பூச்சிநாயக்கன் வசமிருந்தது! அதுவும் சீக்கிரமே ரகுநாதராயர் வசமாகியது!

ஒலியமங்கலம் எவ்வாறு புதுக்கோட்டையுடன் ஐக்கியமாகியது என்பது ஆச்சரியத்தில் ஆழ்த்தக் கூடியதாகும். அதனை கர்ண பரம்பரையான ஒரு கதை சுவைபட விவரிக்கின்றது.

ரகுநாதராயத் தொண்டைமான் மருங்காபுரி பூச்சி நாயக்காரருக்கு ஒரு குறிப்பிட்ட நாளைத் தெரிவித்து, அத் தினத்தில் ஒலியமங்கலம் கிராமத்திலுள்ள அத்தனை பசுக்களை யும் கவர்ந்து செல்லப் போவதாகவும், தமது வெற்றிக்குச் சின்னமாக ஆங்கு தம் கொடியை நாட்டி, அதனைத் தம் நாட்டுடன் இணைத்துக் கொள்ளப் போவதாகவும் முன் கூட்டியே செய்தி அனுப்பினாராம். செய்தியை அறிந்த பூச்சி நாயக்கர் ஒலியமங்கலம் கிராமத்தைப் பாதுகாக்க ஐம்பது பேர் அடங்கிய ஒரு சிறு படையை முன்கூட்டியே ஆங்கு அனுப்பி வைத்தாராம், காவலுக்கு வந்த படைத் தலைவன் கணிகைகளோடு களியாட்டங்களில் ஈடுபட்டானும் தாஸி ஒருத்தியின் தாளக்கட்டில் அவன் தன் நினைவின் லயம் இழந்து இருக்கும் வேளையில் ரகுநாதராயத் தொண்டை மானின் ஆட்கள் தந்திரமாக அந்தக் கிராமத்திற்குள் நுழைந்து பசுக்கூட்டங்களைக் கவர்ந்து, கொடியையும் நட்டு விட்டனராம். இதை அறிந்த பூச்சி நாயக்கர் ரகுநாதராயத் தொண்டைமானை மெச்சுகின்ற வகையில் ஒலியமங்கலத்தை புதுக்கோட்டையுடன் இணைத்துக் கொள்ள மனதார அனுமதித்தாராம்!

இக்கர்ண பரம்பரைக் கதைக்கேற்பவே ஒலியமங் கலத்தை புதுக்கோட்டை பெற்றிருக்க வேண்டுமென்று முடிவு கட்டுவதற்கில்லை. ஏனெனில் ரகுநாதராயத் தொண்டைமானைப் போலவே மதுரை மன்னருக்கு அடங்கிய ஒரு சிற்றரசராக பூச்சி நாயக்கர் விளங்கி வந்திருக்கிறார். அப்படியிருக்க ஒலியமங்கலத்தை அவ்வளவு எளிதாக அவர் விட்டுக் கொடுத்திருப்பாரா என்பது ஆய்வுக்குரியதாகும்.

இந்நிகழ்ச்சி நடந்த காலம் சரியாகத் தெரியாததால் இது பற்றிசரிவர ஆராயமுடியாமலிருக்கிறது.

தொண்டைமான் அரச பரம்பரையில் முதல் மன்னராக புதுக்கோட்டையை அரசாண்ட ரகுநாதராயத் தொண்டை மான், தம் ஆயுட்காலத்தில் தொண்டைமான் அரசை உறுதியாக நிலைபெறச் செய்து விட்டார்! அதோடு

மட்டுமல்ல, தலைநகராகக் கொண்டுவிட்ட புதுக்கோட்டையை புனருத்தாரணம் செய்வதில் மிகுந்த அக்கரை காட்டினர். புதுக்கோட்டை அவர் காலத்தில் நிர்மானிக்கப்பட்ட நகர் என்பதாக 'தொண்டைமான் வம்சாவளி' என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. ஆனல் இதை முழுமையாக ஏற்பதற்கில்லை. பண்டையில் இப்பகுதி கலசமங்கலம், சீயமங்கலம் என்பதாக மக்கள் வாழ்ந்த பகுதியாக இருந்திருக்கிறது. அதை நகரமாக்கும் விஸ்தரிப்பில் பல புதிய பெரிய கட்டிடங்களைத் தொண்டைமான் எழுப்பியிருக்கிறர் என்றே கொள்ள வேண்டும். நகரின் மையத்தில் இடம் பெறும் வகையில் தம் அரண்மனையைக் கட்டி, சுற்றிலும் பெரிய நீண்ட அரண்களை எழுப்பியிருக்கிறர். புதுக்கோட்டை நகரைச் சுற்றிலும் இரண்டரை மைல் (சுமார் 4 கிலோ மீட்டர்) நீளத்திற்கு மதில்கள் கூட எழுப்பியதாக புதுக் கோட்டை சமஸ்தானத்து வரலாற்றில் கூறப்பட்டுள்ளது.

ரகுநாதராயத் தொண்டைமானின் திருப்பணிகளில் இரண்டு குறிப்பிடத் தக்கதாகும்.

மிரட்டு நிலை என்னுமிடத்தில் ஒரு கோட்டையைக் கட்டுவித்து உள்ளார். இது ஒணன்குடிக்குத் தெற்கே சில மைல் தூரத்தில் உள்ளது. இக்கோட்டை தொண்டைமான் நாட்டிற்கு ஓர் எல்லைப் புறக் கோட்டையாக விளங்கி வந்திருக்கிறது. 1710ல் கட்டப்பட்ட இக் கோட்டை நான்கு அரண்களுடன் வட்ட வடிவில் அமைக்கப்பட்டு 200 போர் வீரர்கள் தங்குவதற்கு ஏற்ற வசதிகள் கொண்டிருந்தது.

ரகுநாதராயத் தொண்டைமான் பக்திமானகவும் விளங்கியிருக்கிறர். குடிமியான்மலை கோயிலின் சில பகுதிகள் இவரால் கட்டப்பட்டதாகத் தெரிகிறது. மன்னரது ஆணைப்படி இவற்றை, மந்திரியாக விளங்கிய குறுந்தப் பிள்ளை முன் நின்று கட்டியதாக சரித்திரச் சான்றுகள் வெளிப்படுத்துகின்றன.

## 5. - ஆவுடை பெற்ற பிள்ளைகளில் சோடை போனது எவருமில்லை

கரம்பக்குடி தொண்டைமான் பரம்பரையில் ஆவுடை ராயத் தொண்டைமானின் முதல் மகனாகப் பிறந்த இரகு நாதராய தொண்டைமான் மட்டுமே மாண்புடன் விளங்கிய தாக நினைத்துவிடக்கூடாது. இதர மூன்று பிள்ளைகளும் சிறப் பாக வாழ்ந்திருக்கின்றனர்.

இரகுநாதராயத் தொண்டைமானுடன் கூடப் பிறந்த வர்களின் பெயர்கள் முறையே பச்சை, நமன, பேரமா என் பதை ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறோம். இவர்களுள் பச்சைத் தொண்டைமான் தன் அண்ணனுக்கு பெரிதும் பக்க பலமாக இருக்க, இரகுநாதராய தொண்டைமானுடனேயே இருந்து வந்திருக்கிறார். அவருக்கு இளையவரான நமனத் தொண்டைமான் மதுரை மன்னனான ரங்ககிருஷ்ணமுத்து வீரப்ப நாயக்கரின் படைப் பிரிவில் ஒரு தலைவனாக விசுவாசத் துடன் பணியாற்றிவந்தார்.

மதுரை நாயக்கர் ஆட்சிக்கு அடங்கிய பாளையங்களுள் ஒன்று திருநெல்வேலியிலிருந்த நாகலாபுரம் பாளையம் ஆகும். மதுரை அரசு க்ஷீணித்திருந்த நிலையில் இந்த பாளையக்காரர் வேறு சில பாளையக்காரர்களையும் தம்மோடு சேர்த்துக் கொண்டு மதுரை அரசுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். இக்கிளர்ச்சியை ஒடுக்கும் பொறுப்பு நமனத் தொண்டைமானிடம் விடப்பட்டது. அரசின் ஆணையை ஏற்று நமனத் தொண்டைமான் நாகலாபுரத்துக்குப் படை நடத்திச் சென்றார். புரட்சியில் ஈடுபட்ட பாளையக்காரர் களைத் தோற்கடித்தார். அப்போரில் கைப்பற்றிய பொருட் களுடன் திருச்சியில் தங்கியிருந்த மதுரை மன்னரைக் காண வந்தார். நாகலாபுரம் பாளையத்தை அடக்கிய நமனத் தொண்டைமானின் வீரத்தைப் பாராட்டும் வகையில் குளத் தூரைச் சுற்றியிருந்த ஒரு சிறு பகுதியை ரங்ககிருஷ்ணமுத்து

வீரப்ப நாயக்கர் பரிசாக வழங்கினூர். மேலும் அம்பாரி யானே, நடன நங்கையர் குழு நரகஜ மேளம், கருட அனுமத்துவஜங்கள், பகல் தீவட்டி போர் முரசுகள், கண்ட பேருண்ட முரசு ஆகியவற்றைப் பயன்படுத்திக்கொள்ளும் உரிமைகளேயும் அளித்தார். இவ்வாருக 1690-ம் வருடவாக்கில் நமனத் தொண்டைமான் ஆளுகையில் குளத்தூர் தொண்டைமான் அரசு இயங்கத் தலேப்பட்டது. அது முதல் சின்னத் தொண்டைமான் என இவர் அழைக்கப் படலானூர்.

நமனத் தொண்டைமான் குளத்தூர் அரசராகப் பொறுப்பேற்றபிறகு அவரது வீரத்தை வெளிப்படுத்த மற்ருெரு வாய்ப்பு கிட்டியது. வெசங்கி நாட்டுக் கள்ளர்கள் மதுரை அரசின் சட்ட திட்டங்களுக்கு உட்படாமல் சட்டத்தை மீறும் சமூக விரோதப் போக்கில் நடந்துகொண்டனர். அதோடு அரசுக்குச் செலுத்தவேண்டிய வரிகளேயும் செலுத்தாமல் அவமதித்து வரி வசூலிக்க வரும் அதிகாரிகளேயும் கொலே செய்துவந்தனர். பலவாருக நாட்டின் அமைதிக்குப் பங்கம் விளேவித்துவந்த இவர்களே அடக்கி அப்பகுதியில் அமைதியை நிலேநிறுத்தும் பொறுப்பு நமனத் தொண்டைமானிடமே ஒப்படைக்கப்பட்டது. நமனத் தொண்டைமான் படையுடன் சென்ருர். வெசங்கி நாட்டுக் கள்ளர்களே அடக்கி ஒடுக்கினூர், அதன் பயனுக அவர்கள் அமைதியான குடிமக்களாக மாறினர்.

நமனத் தொண்டைமான் எவ்வாறு வெசங்கி நாட்டு மறவர்களே அடக்கி ஒடுக்கினூர் என்பதற்கு சுவாரஸ்யமான கர்ண பரம்பரை கதையொன்று சொல்லப்படுகிறது: திருவிழா ஒன்றில் வெசங்கி நாட்டுக் கள்ளர்கள் புலியூர் என்ற இடத்தில் ஒன்று கூடியிருந்தனராம். இதுதான் சரியான சமயமென்று நமனத் தொண்டைமான் தமது படையுடன் பாய்ந்து கடுமையாகத் தாக்கி அவர்களின் தலேவர்கள் அனேவரையும் சிறைப் பிடித்தாராம். பிடிபட்ட அந்த ஒன்பது தலேவர்களேயும் அங்கேயே கொன்று அவர்களின் தலேயைக் கொய்து,ஒரு சாக்கு மூட்டையில் கட்டி, அதனே

வெசங்கி நாட்டுக் கள்ளன் ஒருவனின் தலையிலேற்றி சுமந்து வரச் செய்து மதுரை மன்னனின் காலடியில் வெற்றிக் காணிக்கையாக சமர்ப்பித்தாராம். பிறகு சுமந்துவந்த கள்ளனின் தலையையும் வெட்டி பத்தாவது தலையாக உருள விட்டாராம். இவ்வாறான செயல்கள் வெசங்கி நாட்டுக் கள்ளர்களுக்கு பெருத்த பயத்தைக் கொடுத்து அவர்களை அமைதியான குடிமக்களாக மாறவைத்ததாக அக்கதை கூறுகின்றது.

குளத்தூர் அரசராக விளங்கிய நமனத் தொண்டை மானுக்கு தன் எல்லையை விஸ்தரிப்பதில் பெரிதும் ஆவலிருந் தது. இதுபோன்ற ஆசை பேரையூர், கட்டலூர் ஆகிய பகுதி களின் தலைவனுக்கும் இருந்துவந்தது. இருவருமே மதுரை அரசுக்கு உட்பட்டவர்களாக இருந்தும், இதன் காரணமாக ஒருவருக்கொருவர் எதிரிகளாய் விளங்கிவந்தனர். ஆனால் அதிருஷ்ட தேவதையின் அருள், குளத்தூர் பக்கமே செல் கின்ற வாய்ப்பொன்று விரைவிலேயே தோன்றியது.

ரங்ககிருஷ்ண நாயக்கர் காலத்திலும், ராணி மங்கம் மாள் காலத்திலும் கிடைக்காத இந்த அதிருஷ்டம் விஜய ரங்க சொக்கநாதர் காலத்தில் இயங்கத் தொடங்கியது. தன் சார்பில் பாட்டியாரான மங்கம்மாள் புரிந்துவந்த ஆட்சியை வலிந்து கைப்பற்றிக்கொண்ட விஜயரங்கச் சொக்கநாதன், பாட்டியிடத்திலும், பாட்டி காலத்தில் பிரதான தளபதி யாய் விளங்கிய நரசப்பையாவிடமும் மிகுந்த பற்றுதல் கொண்டிருந்தவர்களை யெல்லாம் தமக்கு எதிரியாகப் பாவித்து ஒருவர்பின் ஒருவராக ஒழித்துக் கட்டிக்கொண்டி ருந்தான். நமனத் தொண்டைமான் வெகு பக்குவமாக நடந்துகொண்டதால் அவர் தப்பினார். நரசப்பையாவிடம் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த கட்டலூர் தலைவன்மீது விஜயரங்கனின் பழிவாங்கும் குரோதம் பாய்ந்தது. அவனின் பதவியைப் பறிக்க முற்பட்ட விஜயரங்கன், அந்த இடத்தில் அமர்த்த நம்பிக்கைக்கு உகந்தவராக ஒருவரை தேர்ந் தெடுக்க முற்பட்டபோது, நமனத் தொண்டைமானே பொறுத்தமானவராக அவனுக்குத் தோன்றியது. இதன்

பலனாய் கட்டலூர் நிலப்பகுதிகள் நமனத் தொண்டை மானுக்குக் கிடைத்தன.

கட்டலூர் பேராம்பூர் ஆகியவற்றை தம் அரசின் கீழ் கொண்டு வந்த நமனத் தொண்டைமான் அடுத்து விராலி மலை,அம்மன் குறிச்சி ஆகிய பகுதிகளையும் கைப்பற்ற விரும்பினார். ஆதியில் பேராம்பூர் கட்டலூர் ஆட்சிக்கு உட்பட்டிருந்த விராலிமலை அச்சமயம் குமாரவாடி சிற்றரசரின் ஆதிக்கத்தில் இருந்தது. அவரோடு போராடி விராலிமலைப் பகுதியைக் கைப்பற்றிக் கொண்டார். பிறகு மதுரை நாயக்கரின்,அனுமதியோடு மருங்காபுரி பூச்சி நாயக்கரைத் தாக்கி மருங்காபுரியின் தலைநகராயிருந்த அம்மன் குறிச்சி யையும் மற்றும் சில கிராமங்களையும் கைப்பற்றிக் கொண்டார். பூச்சி நாயக்கர் மீது எடுத்த படையெடுப்பு ரகுநாதராயத் தொண்டைமானோடு சேர்ந்த மேற்கொள்ளப் பட்டதாகும்.

இவ்விதமாக நமனத் தொண்டைமான் குளத்தூர், விராலிமலை, அம்மன் குறிச்சி ஆகிய பகுதிகள் அடக்கிய ஒரு சிறு அரசை நிறுவினான்.

இரகுநாதராயத் தொண்டைமானைப் போலவே தெய்வ பக்தி கொண்டிருந்த நமனத் தொண்டைமான் குளத்தூரில் இரு கோயில்களைக் கட்டியுள்ளார். ஒன்று சிவன் கோயில்; மற்றொன்று திருமால் கோயில். இதைத் தவிர பல மானியங் களையும் அளித்திருக்கிறாரென்றும் தெரிய வருகிறது.

ஆவுடைராயத் தொண்டைமானின் நான்காவது புதல் வனும், இரகுநாதராயத் தொண்டைமானின் கடைசித் தம்பியுமான பேரமா தொண்டைமானைப் பற்றி எதுவும் அறிய முடியாதிருக்கிறது. தமது மூத்த சகோதரனோடு பச்சைத் தொண்டைமான் இருந்து விட்டது போல நமனத் தொண்டைமானோடு பேரமா இருந்து விட்டாரா என்பது ஆராய்ச்சியால் இருக்கிற ஒரு விஷயமாகும்.

இரகுநாதராயத் தொண்டைமானும் நமனத் தொண்டைமானும் தனித் தனியே அரசர்களாக விளங்கி வந்த போதிலும் அவர்களிடையே மனக் கசப்போ குரோ

தமோ இடம் பெற்றிருந்ததாகத் தெரியவில்லை. மருங்காபுரி படையெடுப்பின் போது நமனத் தொண்டைமானுக்கு இரகுநாதராயத் தொண்டைமான் துணைபோயிருப்பதைக் கொண்டு இருவருக்குமிடையே ரத்த பாசமும், பரஸ்பர அக்கரையும் எவ்வாறு இடம் பெற்றிருந்தது என்பது தெள்ள தெளிய தெரிகிறது.

குளத்தூர் அரசு, புதுக்கோட்டை அரசு இரண்டையும் எடை போட்டுப் பார்க்கையில் குளத்தூர் அரசை புதுக்கோட்டைக்கு இணையாகக் கூறுவதற்கில்லை. அது புதுக்கோட்டைக்கு துணையரசாகவே இருந்திருக்கிறது.

புதுக்கோட்டை மன்னராக இரகுநாதராயத் தொண்டைமான் 44 ஆண்டு காலம் ஆட்சி புரிந்திருக்கிறார். இந்த நீண்ட ஆட்சி காலம் பல ஏற்றத் தாழ்வுகளைக் கண்டிருக்கிறது. யாவற்றிலுமே வெற்றி வீரனாகத் திகழ்ந்து வந்த இரகுநாதராயத் தொண்டைமான் இயற்கையின் சீற்றத்தை வெல்ல முடியாமல் தவித்ததும் உண்டு. 1708-ம் ஆண்டு காவிரியில் வெள்ளப் பெருக்கெடுத்து பேரழிவு ஏற்பட்டதைத் தொடர்ந்து பெரும் வறட்சியும் பஞ்சமும் நாட்டில் பேயாட்டம் போட்டது. இதன் விளைவால் பெற்றோர் பிள்ளைகளை விற்கவும், கணவன்மார்கள் தத்தம் மனைவிகளை துறக்கத் துணியவும் வைத்தது. இதைத் தொடர்ந்து 1709-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 18-ம் தேதி தொடங்கிய பெரும் மழை பெருத்த ஆட் சேதத்தையும் பொருட் சேதத்தையும் விளைவித்தது. மறவர் நாட்டின் ஒரு பகுதியில் மட்டும் நூற்றுக்கு மேலான சடலங்கள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டன என்றால் அவ்வெள்ளத்தின் கொடுமை எத்தகையதாயிருந்தது என்பதை நன்கு உணரலாம்.

இதற்குப் பிறகு 1722—23ல் அம்மை நோய் பெரும் தொற்று நோயாக புதுக்கோட்டையில் பரவி மக்களை வெகுவாகச் சீரழித்தது.

மேற்கண்ட இயற்கையின் சீற்றங்கள், ஆனந்தராவ் போன்ற பலமான எதிரிகளின் தாக்குதல்கள், இவற்றிற்

கிடையே பல்வேறு போர்களில் பங்கேற்றும், படை நடத்தியும் ஒரு சிறு அரசை நிலைநிறுத்திய இரகுநாதராயத் தொண்டைமானின் திறம் வெகுவாகப் பாராட்டத்தக்கதாகும்.

## 6- வாகை சூடிய மன்னனுக்கு வாரிசுக்குப் பிள்ளையில்லை

சீரோடும் சிறப்போடும் வாழ்ந்த இரகுநாதராயத் தொண்டைமான் தனது வாழ்நாளில் பெரும் சோதனைகளுக்கும், வேதனைகளுக்கும் ஆளாகியிருக்கிறார். தஞ்சை தளபதி ஆனந்தராவ் பெரும் படையுடன் வந்து இராமநாதபுரம் தண்டத்தேவனை முறியடித்து பிறகு புதுக்கோட்டையைத் தாக்கித் தோல்வியுறச் செய்ததும், கடைசி காலத்தில் கொள்ளி போட அவருக்கு ஒரு புத்திரன்கூட மிஞ்சாமல் போனதும் அவரது வாழ்க்கைப் புத்தகத்தில் துயரம் தோய்ந்த அத்தியாயங்களாக விளங்குகின்றன.

இரகுநாதராயத் தொண்டைமானுக்கு ஆறு மனைவியரும், ஏழு ஆசை நாயகிகளும் உண்டு. அவர்களில்,

1. மங்களத்தான்பட்டி இராங்கியர் மகள் மலையத்தாயி.
2. தென்னதிரையன் மகள் பெரிய உடையம்மை ஆயி.
3. மலைக்குறிச்சி இராங்கியர் மகள் அவத்தாயி.
4. காடுவெட்டியாரின் மகள் வீரத்தா ஆயி.
5. பிள்ளைத் தாய்ச்சி வீரத்தா ஆயி.
6. தச்சி ஆயி.

ஆகியோர் இரகுநாதராயத் தொண்டைமான் உறவு முறையில் மணந்துகொண்ட பட்டத்தரசிகள் ஆவர். இவர்களைத் தவிர ஏழு வெவ்வேறு ஜாதிகளிலிருந்து தேர்ந்தெடுத்த ஏழு ஆசை நாயகிகளும் இவருக்கு இருந்தனர். அவர்கள்,

1. பொன்னம்மா ஆயி.
2. சின்னம்மா ஆயி.
3. மீனாட்சி ஆயி.
4. குட்டை வெங்காரம்மா.
5, கஸ்தூரியம்மா.
6. சந்திரம்மா.
7. ஜானகி ஆயி.

இவரது ஆறு பட்டத்தரசிகளில் 1. மலைத்தாயி, 2. பெரிய உடையம்மை, 3. அவத்தாயி, 4. வீரத்தா ஆயி, ஆகிய நால்வருக்கு மட்டுமே பிள்ளைப் பேறு கிட்டியது. இவர்களுக்குப் பிறந்த பிள்ளைகள் முறையே—

1. பெரிய ராயத் தொண்டைமான்
2. சின்ன ராயத் தொண்டைமான்
3. திருமலைத் தொண்டைமான்
4. முத்து விஜயத் தொண்டைமான்

ஆகியோராகும். வீரத்தா ஆயிக்கு பெரியநாயகி என்ற பெண்ணும் பிறந்தது.

மேற்கண்ட நான்கு பிள்ளைகளைத் தவிர இரகுநாதராய தொண்டைமானுக்கு மற்ற மனைவிகள் மூலமும் காமக் கிழத்திகள் மூலமும் நிறையப் பிள்ளைகள் உண்டு. மொத்தத்தில் 32 பிள்ளைகள் அவருக்குப் பிறந்தன.

கடைசி காலத்தில் இரகுநாதராயத் தொண்டைமானுக்கு நேர்வாரிசாக வர பிள்ளைகள் எவருமின்றி இருந்த போதிலும் பட்டத்து ராணிகளின் வழி பிறந்த நான்கு பேரப் பிள்ளைகள் எஞ்சியிருந்தனர். இவர்களுள் விஜய ரகுநாதராயத் தொண்டைமான் தலைப் பேரனுவார். இவர் திருமலைராயத் தொண்டைமானுக்கும் பன்றி கொண்டார் குடும்பத்தைச் சேர்ந்த நல்லாயி ஆயி என்பவருக்கும் பிறந்தவர்.

முத்து நமனத் தொண்டைமான், இராஜகோபால தொண்டைமான், திருமலைய்யா தொண்டைமான் ஆகிய மூவர் ஏனைய பேரர்களாவர்.

## 7. விஸ்தரித்துக் கொண்ட விஜய ரகுநாதராயத் தொண்டைமான்

தொண்டைமான் அரசு பரம்பரையின் இரண்டாவது மன்னராக விஜயரகுநாதராயத் தொண்டைமான் ஆட்சி பீடத்தில் அமர்ந்ததும் முந்திய அரசரின் கீழ் பணியாற்றிய எவரையும் புறக்கணிக்கவில்லை. புது அமைப்பை ஏற்படுத்தவும் முற்படவில்லை. இரகுநாதராயத் தொண்டைமானிடம் விசுவாசத்துடன் பணியாற்றி வந்த இளந்தரி அம்பலக்காரர், ஆவுடையப்ப சேர்வைக்காரர், நல்லுக்குட்டி வளம் கொண்டான், சடையப்பட்டி சேர்வைக்காரர், இராமசாமி ராங்கியத் தேவர் ஆகியோர் விஜயரகுநாதராயத் தொண்டைமானின் கீழ் தொடர்ந்து பணியாற்றி வந்தனர். ஏற்கெனவே புதுக்கோட்டை அரசின் மந்திரியாக இருந்த குருந்தப் பிள்ளையின் மகனுன விஸ்வநாத பிள்ளை காரியக்காரராக பொறுப்பேற்றிருந்தார்.

மேற்கண்ட விவரம் அரசு அமைப்பு சம்பந்தப்பட்டதாகும். அரியணையில் அமர்ந்த விஜயரகுநாதராயத் தொண்டைமான் தமது சகோதரர்களையும் புறக்கணிக்கவில்லை. அவர்களில் இராஜகோபாலத் தொண்டைமானையும், திருமலைத் தொண்டைமானையும், ஜாகீர்தாரர்களாக ஆக்கினுர். ஆனுல் மூன்ரும் சகோதரரான முத்து நமனத் தொண்டைமானைப் பற்றி விவரம் எதுவும் அறியக் கிடைக்கவில்லை.

விஜயரகுநாதராயத் தொண்டைமான் அரசுக் கட்டிலில் ஏறிய சமயம் தென்னகத்தின் அரசியல் நிலை மிகவும் சீரழிந்து போயிருந்தது. அகில இந்திய அளவில் முகலாயர்கள் இந்திய பேரரசர்களாக விளங்கினர். தமிழகத்தில்

கொடி கட்டிப் பறந்த மதுரை அரசும் தஞ்சை அரசும் முக லாய ஆதிக்கத்தின் கீழ் உட்படுத்தப்பட்டன. டில்லி முக லாய அரசு தென்னிந்தியப் பகுதிக்கு தம் பிரதிநிதியாக ஐதராபாத் நிஜாமை நியமித்திருந்தது. தமிழகத்தில் திறை வசூலிக்கும் பொறுப்பை ஆற்காடு நவாப்பிடம் விட்டிருந் தார் ஐதராபாத் நிஜாம். திறை வசூல் என்ற சாக்கை வைத்துக் கொண்டு ஆற்காடு நவாப் அவ்வப்போது தமிழ கத்தின் தென்பகுதிகளுக்குத் தம் படையை அனுப்பி அந்த அரசுகளின் பொக்கிஷத்தை சுரண்டி தனது சுகபோகத்திற்கு செலவழித்துக் கொண்டிருந்தான். இந்த அவலமான நிலே யில் ஆற்காடு நவாப் பதவிக்காக முகமதலிக்கும் சந்தா சாகிப்புக்குமிடையே பலத்த போட்டி! அவர்களது இந்த சுய நலப் போட்டியில் தமிழகம் பலியாகிக் கொண்டிருந்தது. வேகிற வீட்டில் பிடுங்கிய மட்டும் ஆதாயமென்று, வியா பாரத்திற்கென இந்தியாவில் காலடி வைத்திருந்த ஆங்கிலே யர்களும் பிரெஞ்சுக்காரர்களும் இடையே புகுந்து ஊடு தட்டுவதில் முனேந்து நின்றனர். ஆங்கிலேயர்கள் முகமத லிக்கும், பிரெஞ்சுக்காரர்கள் சந்தாசாகிப்புக்கும் பக்க பலமாக இருக்க முற்படவே, தமிழக அரசர்களும் பாளேயத் தார்களும் இரண்டு கட்சியாகப் பிளவுபட்டு நின்றனர். இவர்கள் தம்முன் இருந்த பகைமையை மறந்து ஒன்றுபட்டு போராடியிருந்தால் தமிழகத்தின் தலேவிதியே வேருகியிருக் கக்கூடும்! தனியொரு அரசிலாவது அமைதி நிலவியிருந்ததா என்ருல் அதுவுமில்லே!

மதுரை மன்னனுயிருந்த விஜயரங்க சொக்கநாதனின் மரணத்திற்குப் பின் அவரது பட்டத்தரசியான ராணி மீனுட்சி அரச பதவியை ஏற்றிருந்தாள். இது பங்காரு திருமலே என்பவனுல் எதிர்க்கப்பட்டது. இதன் காரணமாக மதுரையில் உள்நாட்டுக் கலவரம் ஏற்படவே ராணி மீனுட்சி திருச்சி கோட்டையில் தங்கியிருக்க நேரிட்டது. இதில் விஜயரகுநாதராயத் தொண்டைமான் பங்காரு திருமலேக்கு ஆதரவாக இருந்ததாகத் தெரிகிறது.

இந்நிலையில் ஆற்காடு நவாப் தோஸ்த் அலி தஞ்சை, மதுரை, திருவாங்கூர் ஆகிய அரசுகளிடமிருந்து திறை வசூலித்து வருமாறு தனது மகனுன சப்தார் அலிகான் தலைமையிலும் மருமகனுகிய சந்தா சாகிப் தலைமையிலும் படைகளை அனுப்பினுன். தமிழ் நாட்டின் தெற்குப் பகுதிகளில் சப்தார் அலிகான் சென்று திறை வசூலிக்க முற்பட்டான். திருவாங்கூரில் வெற்றி முரசு கொட்டி சப்தார் அலிகான் மதுரைக்கு வந்தபோது, மதுரை அரசு விவகாரத்தில், தமக்கு ஆதரவாக சப்தார் அலிகான் இருக்க அவனுடன் ஒரு இரகசிய உடன்பாட்டை பங்காரு திருமலை செய்துகொண்டு அதற்கென பெருந்தொகை கொடுப்பதாகவும் வாக்களித்தான்.

இதே சமயம் சந்தாசாகிப் திருச்சிக் கோட்டையை முற்றுகையிட்டுக் கொண்டிருந்தான். ராணி மீனுட்சியால் என்ன செய்ய முடியும்? சுந்தா சாகிபை இரகசியமாகச் சந்தித்து, தனது நிலையை விளக்கி, பங்காரு திருமலையை எதிர்க்க தனக்கு உறுதுணையாக இருக்க வேண்டுமென்றும், அதற்குக் கைமாருக ஒரு கோடி ரூபாய் தனிப்பட்ட வெகுமானமாக சந்தா சாகிப்புக்குத் தருவதாகவும், வாக்களித்து அவனேடு ஒரு உடன்படிக்கையைச் செய்து கொண்டாள். பங்காரு திருமலைக்கு புதுக்கோட்டைத் தொண்டைமான் பெரிதும் பக்கபலமாய் இருந்ததால் முதற்கட்டமாக தொண்டைமானை அடக்கும்படி சந்தாசாகிபை ஏவினுள்.

ராணி மீனுட்சியின் கோரிக்கையை ஏற்று, தொண்டைமானைத் தண்டிப்பதற்காக புதுக்கோட்டையைத் தாக்கி வரும்படி தமது படையின் ஒரு பகுதியை அனுப்பி வைத்தான் சந்தா சாகிப்.

திறைப் பணம் வசூலித்துப் போக வந்த நவாப்பின் தளபதிகள் கைக்கூலி பெற்று இப்படியும் நடந்துகொள்வார்கள் என்பதைத் தொண்டைமான் எதிர்பார்க்கவில்லை. மேலும் மதுரையின் உள்நாட்டுப் போராலும், மைசூர்காரர்களின் ஓயாத படையெடுப்புகளாலும் திருச்சியும் அதைச் சுற்றியிருந்த பகுதிகளும் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருந்தன.

இதிலே புதுக்கோட்டையும் ஒன்றுயிருந்ததால் அதன் செல்வ நிலை மிகவும் சீரழிந்து எங்கும் வறுமையும் வறட்சியும் மிகுந் திருந்தது. இந்நிலையில் சந்தா சாகிபின் படை திருகோகர் ணத்துக்கு அருகே கவிநாடு கம்மாய் கரையில் தங்கி காளிக் குடி கோட்டையைத் தாக்கிற்று. இந்தத் திடீர் தாக்குதலி லும் தொண்டைமான் முடிந்த மட்டும் சமாளித்துப் போரா டினுர். எதிரிகளின் கை ஓங்கியிருந்ததால் அரண்மனை அழிக் கப்பட்டது. அக்கச்சியாகுளத்தின் வழியாக நகருக்குச் செல் லும் போக்குவரத்துப் பாதை பயன்படாத வகையில் பாழாக் கப்பட்டது. இப்போரில் தொண்டைமானின் இரு சகோ தரர்கள் தீரத்துடன் போராடியும் இறந்தனர். புதுக்கோட் டைப் படை முற்றும் முறியடிக்கப்பட்டுவிடவே இளந்தரி அம்பலக்காரரின் உதவியோடு மன்னர் விஜய ரகுநாதராயத் தொண்டைமான் புதுக்கோட்டை நகருக்குக் கிழக்காக இருந்த மணிப்பள்ளம் காட்டில் மறைந்துகொண்டார்.

விஜய ரகுநாதராயத் தொண்டைமான் இவ்வளவு தூரம் படுதோல்வி அடைந்ததற்குக் காரணம் இரண்டெனத் தெரிகிறது. ஒன்று, சந்தா சாகிப் புதுக்கோட்டை மன்ன னின்மீது கொண்டிருந்த தனிப்பட்ட குரோதம். மற்றொன்று நம்பினவர்கள் அவரை நட்டாற்றில் கைவிட்ட துரோகச் செயல்.

இதற்கு ஆதாரம் விஜய ரகுநாதராயத் தொண்டை மான் சென்னையிலிருந்த கிழக்கிந்தியக் கும்பனியாருக்கு எழுதியுள்ள ஒரு கடிதமாகும். அதில் கீழ்க்கண்டவாறு குறிப் பிட்டுள்ளார்:—

திருச்சிக்குள் சந்தா சாகிப் காலடி வைத்ததும் தமக்கு உதவியாக இருக்கும்படி புதுக்கோட்டை மன்னரை சந்தா சாகிப் கோரியதாகவும், அதற்கு தாம் ஒப்புக்கொள்ளவில்லை யென்றும் தொண்டைமான் குறிப்பிட்டிருக்கிறுர்.

இந்த ஆத்திரத்தால்தான் சந்தா சாகிப் புதுக்கோட்டை மீது மூர்க்கத்தனமாக தாக்கியிருக்கிறுன் என்பது ஏற்றுக் கொள்ளத் தக்கதாய் இருக்கிறது.

அதே கடிதத்தில் தொட்டியம் ஜமீன்தார் போன்ற வர்கள் தமக்கு நம்பிக்கைத் துரோகம் செய்து விட்டனர் என்பதாக இரண்டாவது காரணம் கூறியுள்ளார்.

தொட்டியம் ஜமீன்தார் போன்ற ஒரு சிலர் சந்தா சாகி புக்கு எதிராக ஒன்று சேர்ந்து பணியாற்ற வேண்டுமென்று ஒரு திட்டத்தை மேற்கொண்டிருந்தனர். அவர்கள் தொண்டைமானை அணுகியபோது அதை ஏற்று தொண்டை மானும் அந்த அணியில் சேர்ந்திருந்தார். ஆனால் சந்தா சாகிப் புதக்கோட்டைமீது போர் தொடுத்த போது கூட் டணியில் இருந்த தொட்டியம் ஜமீன்தார் போன்றவர்கள் இடையில் தொண்டைமானைத் தவிக்க விட்டுவிட்டுச் சென்று விட்டனர்!

புதுக்கோட்டையின் படுதோல்விக்கு இந்த நம்பிக்கைத் துரோகமே முக்கிய காரணம் என்பது ஏற்றுக்கொள்ளத் தக்கதாக இருக்கிறது.

புதுக்கோட்டையைத் தாக்கிய பிறகு சந்தா சாகிபின் படை மதுரை, தஞ்சை ஆகிய பகுதிகளுக்குச் சென்று ஆற்காடுக்குத் திரும்பியது.

புதுக்கோட்டைக்கு ஏற்பட்ட சோதனை காலம், சந்தா சாகிபின் படையெடுப்போடு தீர்ந்து விடவில்லை. தஞ்சை மன்னனாகிய துக்கோஜி அதனைத் தொடர்கதையாக்க முற் பட்டான்.

சந்தா சாகிப் புதுக்கோட்டையை விட்டு அகன்றது. தஞ்சையின் படையெடுப்புக்கு வழி வகுத்தது. ராணி மீனாட்சியின் பலவீனமான நிலையைப் பயன்படுத்திக் கொண்டு தனது நாட்டை மேலும் விஸ்தரித்துக்கொள்ள விழைந்தான் தஞ்சை மன்னன். அதற்கு முதல் கட்டமாக மீனாட்சியையும் பயன்படுத்திக் கொள்ள நயவஞ்சனையான ஒரு திட்டத்தை மேற்கொண்டு அவளை அணுகினான். மதுரை உள்நாட்டுக் கலவரத்தில் புதுக்கோட்டையும் குளத்தூரும் ராணி மீனாட்சிக்கு எதிராகச் செயல்படுவதைச் சுட்டிக் காட்டி அவர்களை அடியோடு ஒழிக்க அவள் சார்பில் தாம் செயலாற்ற விரும்புவதாகவும், இப்படையெடுப்புக்கு

மீனாட்சி தம் படைகளை கொடுத்து உதவ வேண்டுமென்று கேட்டான். எதைத் தின்றால் பித்தம் தெளியுமென்று பேதலித்துப் போயிருந்த ராணி மீனாட்சி தஞ்சை மன்னனின் உள்நோக்கத்தை உணர முடியாமல் அவன் வலையில் வீழ்ந்து மதுரைப் படையை அவனுக்கு கொடுக்க இசைந்தாள்.

இதன் பலனாகத் தஞ்சை மன்னன் பெரும்படை ஒன்றை தளபதி ஆனந்தராவ் தலைமையில் புதுக்கோட்டையைத் தாக்க உத்திரவிட்டான். தஞ்சைப்படை மதுரைப் படையையும் உள்ளடக்கிக் கொண்டு திருக்கோகர்ணத்திற்கு வடக்கே இரண்டுமைல் தொலைவிலுள்ள வடச்சேரிப் பட்டியில் பாடியிறங்கி முதலில் திருக்கோகர்ணத்தைத் தாக்கி வெற்றி பெற்று புதுக்கோட்டைக்குள் புகுந்து போரிட்டது. சந்தா சாகிப் படையெடுப்பில் தாக்குப் பிடிக்க முடியாமல் தோற்று, பிறகு சற்று கூட இடைவெளி யில்லாத கால கட்டத்தில் தஞ்சை பெரும்படையுடன் தாக்குகின்ற தென்றால், தொண்டைமானால் அதை எப்படிச் சமாளிக்க முடியும்? தோளோடு தோள் நின்று வீரதீரத் துடன் போராடக்கூடிய தன் இரண்டு சகோதரர்களையும் சந்தா சாகிபின் படையெடுப்பின் போது பறிகொடுத்தாகி விட்டது. உறுதுணை யாருமற்ற நிலையில் எதிர்த்துப் போராடி, பலனற்ற நிலையில் எதிரிப் படையிடம் பிடிபடா மல் தப்பி, புதுக்கோட்டைக்கு அருகேயிருந்த காடுகளில் ஒளிந்து மறைந்து பிறகு திருமயம் கோட்டைக்குள் புகுந்து ஆனந்தராவின் தாக்குதலிலிருந்து தப்பினார் விஜயரகுநாத ராயத் தொண்டைமான்.

வலிமை பொருந்திய ஆனந்தராவின் படை திருமயம் கோட்டையை முற்றுகையிட்டது. ஆனால் முற்றுகையிடத் தொடங்கி பதினைந்து மாதங்களாகியும் அப்படையினரால் கோட்டையைத் தகர்க்க முடியவில்லை. இதற்கிடையே ராணி மீனாட்சி விழித்துக் கொண்டாள். தனக்கொரு பொய்யான போக்கைக் காட்டி, தன் படை பலத்தைப் பெற்று, தன் நாட்டை விஸ்தத்துக் கொள்ளவே தஞ்சை விடாப் பிடியாகப் போரிடுகிறது என்பதைப் புரிந்து

கொண்டாள். எனவே ஆனந்தராவிற்குத் துணை போயிருந்த தம் படையைத் திரும்ப அழைத்துக் கொண்டாள்.

இதற்கிடையே தஞ்சையின் மீது நவாப் படையெடுக்கவே திருமயம் கோட்டை முற்றுகையைக் கைவிட்டு தன் படையுடன் ஆனந்தராவ் அவசரமாகத் திரும்ப நேர்ந்தது.

இப்படியாக புதுக்கோட்டையைப் பீடித்திருந்த கிரகணமும் அதிர்ஷ்டவசமாக விடுபட்டது எனலாம்.

## 8. மராட்டியர் படையெடுப்பு

திறைப் பண வசூலுக்கென ஆற்காடு நவாபினுல் அனுப்பி வைக்கப்பட்ட சந்தாசாகிப், சுயநல நாட்டம் கொண்டு இயங்கத் தொடங்கினுன். கைக்கூலி பெற்று ராணிக்கு உதவ முற்பட்டவன்போல போக்குக் காட்டிய அவன், அங்குள்ள சூழ்நிலையை நன்கு அறிந்து கொண்டு தனது வலிமையைப் பெருக்கிக் கொள்வதில் முனைந்தான். இவனது வஞ்சகத்தால் மனமுடைந்த ராணி மீனுட்சி தற்கொலை செய்து கொண்டாள். இந்நிலையில் சந்தாசாகிப் மதுரை அரசுக்கு தானே மன்னன் எனப் பிரகடனப்படுத்திக் கொண்டான். தனது சகோதரர்களாகிய பூதாசாகிப், சதக் சாகிப் ஆகிய இருவரையும் முறையே மதுரையிலும், திண்டுக்கல்லிலும் பாதுகாப்புப் பணியில் அமர்த்திவிட்டு, தான் திருச்சியிலிருந்தபடி ஆளத் துவங்கினுன்.

சந்தா சாகிபின் இந்தச் செயல் ஆற்காடு நவாபிற்கு வெறுப்பையும் ஹைதராபாத் நிஜாமுக்கு ஆற்காடு நவாபின் மீது கோபத்தையும் விளைவித்தது. வரம்பு மீறி ஆற்காடு நவாப் செயல்படுவதாகக் கருதிய நிஜாம், நவாபைத் தண்டிக்கத் தீர்மானித்தான். இந்த சமயத்தில் மகாராஷ்டிரத்திலிருந்த மராட்டியர்கள் 1720ல் நிஜாம் உசேன் அலியுடன் ஒப்பந்தப்படி தமக்குச் சேரவேண்டிய திறைப்

பணத்தை வசூலிப்பதற்காக படைகளை தயார்படுத்திக் கொண்டிருந்தனர். சந்தாசாகிப்பினுல் வெகுவாகப் பாதிக் கப்பட்டிருந்த தஞ்சை மன்னனும், மதுரை பங்காரு திருமலை போன்ருேரும் மராட்டியப் படையெடுப்பை வரவேற்கவே, 1739ல் ராக்கோஜி போன்ஸ்லே, பட்டாசிங் ஆகியோரின் தலைமையில் சுமார் பத்தாயிரம் பேர் அடங்கிய மராட்டியப் படை தமிழகத்தின் மீது படையெடுத்து வந்தது.

அப்படை முதல் கட்டமாக ஆற்காடு மீது தாக்குதலைத் தொடங்கிற்று. இப்போரில் ஆற்காடு நவாபான தோஸ்த் அலி கொல்லப்பட்டான். அவரது மகனுன சப்தார் அலி மராட்டியப் படைக்கு ஒரு கோடி ரூபாய் நஷ்ட ஈடாகக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டதன் பேரில் ஆற்காடு நவாபாக இருந்து வரும் உரிமையைத் தக்க வைத்துக் கொண்டான். அவர்கள் சந்தாசாகிபை வென்ருல் அவன் வசமாகியுள்ள திருச்சி, மதுரை, திருநெல்வேலி ஆகிய பகுதிகளை மராட்டியர்களே வைத்துக் கொள்ளவும் சப்தார் அலி ஒப்புதல் தந்திருந்தான்.

இவ்வித ரகசிய உடன்படிக்கையைச் செய்துகொண்ட மராட்டியர் படை 1741ல் திருச்சியை முற்றுகையிட்டது. சந்தா சாகிப் படுதோல்வியடைந்து சிறை பிடிக்கப்பட் டான். இப்போரில் அவனுக்கு உதவ வந்த அவனது இரு சகோதரர்களும் கொல்லப்பட்டனர்.

இப்போரில் மராட்டியர் படைக்கு விஜய ரகுநாதராய தொண்டைமான் பெரிதும் உதவியாக இருந்து செயல்பட்ட தால் மராட்டிய தளபதிகளால் பெரிதும் பாராட்டப்பட் டார். அவர் காட்டிய வீரத்தைப் பாராட்டுகின்ற வகையில் 'வீரம் செறிந்த வீரர்' என்று பொருள்படும் 'வஜ்ஜிருடு' என்ற பட்டத்தையும் அளித்து அவரை கௌரவித்தனர்.

வெற்றி மாலை சூடிய மராட்டியர் படை தாம் வென்ற பகுதிகளுக்கு முராரிராவ் என்பவரை ஆளுநராக நியமித்து விட்டு நாடு திரும்பியது.

சிறைப் பிடிக்கப்பட்ட சந்தா சாகிபை மராட்டியர் தம்மோடு கொண்டு சென்றனா.

இது நடந்து இரு வருடங்களுக்குப் பின் ஐதராபாத் நிஜாம் தென் இந்தியாவில் தமது மேலான்மையை மீண்டும் நிலைநிறுத்திக் கொள்ள முற்பட்டார். இதன் நிமித்தம் 80,000 குதிரை வீரர்களும் 2,00,000 பேர் அடங்கிய காலாட் படையும் கொண்ட பெரும் படையொன்று தெற்கு நோக்கிப் புறப்பட்டது. அப்படை 1743-ம் வருடம் மார்ச் மாதவாக்கில் திருச்சியை நெருங்கியது.

அப்போது திருச்சி கோட்டையும் நகரும் மராட்டியர் வசமே இருந்தது. முராரிராவ் தான் ஆளுநராய் இருந்தார். திருச்சி கோட்டையையும், நகரையும் உடனடியாகத் தம் வசம் ஒப்புவிக்கும்படி நிஜாம், முராரிராவுக்குக் கட்டளையிட்டார். முராரி பணியவில்லை. எனவே நிஜாமின் படைகள் திருச்சியைத் தாக்கிப் பிடித்துக் கொண்டது. பிறகு மதுரையும் நிஜாம் வசமாயிற்று.

இந்தப் படையெடுப்பின் போது புதுக்கோட்டை மன்னரான விஜய ரகுநாதராயத் தொண்டைமான் நிஜாமுக்கு பெரிதும் பக்கபலமாய் இருந்தார்.

இங்கே ஒரு கேள்விக்குறி நம்மை கொக்கி போட்டு நிறுத்தக்கூடும். அதாவது சந்தா சாகிபுக்கு எதிராக மராட்டியர் படையெடுத்து வந்தபோது மராட்டியர் படைக்குத் துணை போன புதுக்கோட்டை மன்னர், அதே மராட்டிய அரசுக்கு எதிராக நிஜாம் படையெடுத்து வந்திருக்கிறபோது மராட்டியருக்கு எதிராக நிஜாமுக்குத் துணைபோனது எந்த விதத்தில் நேர்மையானது என்று கேட்கக் கூடும்.

இது ஆராயத்தக்கதொரு கேள்வியாகும்.

அப்போது தமிழகம் இருந்த நிலையை மனதில் கொள்ள வேண்டும். மதுரை, தஞ்சை, புதுக்கோட்டை ஆகிய அரசுகள் அவ்வப்போது நிலைக்கிற எந்த ஒரு பேரரசுக்கும் கட்டுப்பட்ட சிற்றரசுகளாகவே இருந்து வந்திருக்கின்றன. ஆதிக்க வெறியிலிருந்த மொகலாய சாம்ராஜ்யத்தின் பிரதிநிதியான

நிஜாமாயினும் சரி, மராட்டியராயினும் சரி, எவர் தமிழகத்தில் மேலாண்மை வகிக்கிருர்களோ அவர்களுக்குக் கட்டுப்பட்டவராகவே இச்சிற்றரசர்கள் இருக்க வேண்டிய துர்பாக்கிய நிலை. இச் சூழ்நிலையில் எந்த ஒரு சிற்றரசும் விவேகத்துடன் செயல்பட்டே தம் அரசை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும். எந்த பேரரசின் கை ஓங்குகிறதோ அவர்கள் பக்கமிருந்தால்தான் அச்சிற்றரசு பிழைக்கும்.

இந்நிலையில்தான் புதுக்கோட்டை மன்னர் நிஜாமுக்குப் பெருந்துணையாய் செயல்பட்டார் எனக் கருதலாம்.

இதோடு மற்றும் சில நிலவரங்களையும் நாம் சிந்திக்க வேண்டும். ராணி மீனுட்சியின் தூண்டுதலால் புதுக்கோட்டையைத் தாக்கி நிர்மூலப்படுத்தியவன் சந்தாசாகிபு அதற்குப் பழிக்குப் பழி வாங்குகின்ற வகையில் சந்தாசாகிபின் மீது மராட்டியர் போர் தொடுத்தபோது அவர்கள் பக்கம் சேர்ந்து கொண்டார் புதுக்கோட்டை மன்னர். வெற்றி வாகை சூடிய மராட்டியப் படை சந்தாசாகிபை கொல்லாது சிறைப் பிடித்துச் சென்றிருக்கின்றன.

இப்போது நிஜாமின் கை ஓங்கியுள்ளது. இதனுல் மராட்டியப் பேரரசு சினம் கொள்வது இயற்கை. இச்சமயம் பார்த்து சந்தாசாகிப் தம்மை விடுவித்து போதிய படைபலமும் கொடுத்து உதவினுல் திருச்சி மீது படையெடுத்து திரும்பக் கைப்பற்றலாமென்று உறுதியளிக்கக் கூடும். மராத்தியப் பேரரசும் இதை ஏற்கக்கூடும். அவர்களின் படை பலத்துடன் சந்தாசாகிப் தலைதூக்க சந்தர்ப்பமுள்ளது.

எந்தப் போரிலும் வெற்றி தோல்வி முன்னதாக நிர்ணயிக்க முடியாது. வெற்றி சந்தாசாகிபின் பக்கம் திரும்பி விட்டால், முதல் ஆபத்து புதுக்கோட்டைக்குத்தானே?

இதற்கிடையே மற்றுமொரு இக்கட்டான நிலை ஒன்றும் புதுக்கோட்டை மன்னருக்கு இருந்தது. தென்னுடு பலவீனப்பட்டிருக்கிற நிலையில் மொகலாயப் பேரரசுதான் பலமிக்கதாய் விளங்கி வருகிறது. இதன் தென்னகப் பிரதிநிதியாய் இருப்பவர் ஐதராபாத் நிஜாம். தமது செல்வாக்கை இந்தியாவில் நிலைநிறுத்திக் கொள்ள பிரெஞ்சுக்காரர்களுக்கும்

ஆங்கிலேயர்களுக்கும் இடையே ஆதிக்கப் போட்டி இருக்கின்ற நிலையில் ஆங்கிலேயர் நிஜாம் பக்கத்தில் இருந்து வந்தனர். தமிழகத்தைப் பொருத்த மட்டில் தஞ்சையும் புதுக்கோடையும், ஆங்கிலேயரும் ஒரு கூட்டணியாக இயங்கி வருகின்ற நிலையில், நிஜாமுக்கு ஆங்கிலேயர் பக்க பலமாய் இருந்ததால் ஆங்கிலேயர் ஆதரவு நிஜாமுக்கு இருப்பதை அனுசரித்து நிஜாமுக்கு ஆதரவு அளிப்பது தொண்டைமானுக்கு தவிர்க்க முடியாததாகி விட்டது.

திருச்சிப் படையெடுப்பில் புதுக்கோட்டை மன்னர் அளித்த ஆதரவுக்காக நிஜாம் அவரைப் பெரிதும் பாராட்டினார். இலுப்பூர் பகுதியை புதுக்கோட்டையுடன் இணைத்துக் கொள்வதற்கும் அனுமதி அளித்தார். இதோடு தம் முன்னோர் பண்டைய அரசர்களிடமிருந்து பெற்றிருந்த கௌரவப் பட்டங்களையும், விருதுகளையும் தமது பரம்பரையினர் உபயோகித்துக் கொள்வதற்கான நிஜாமின் ஒப்புதலையும் பெற்றார் புதுக்கோட்டைத் தொண்டைமான்.

இதன் பின் சில காலம் அமைதி நிலவியது எனலாம்.

1749ல் மீண்டும் பூசல்கள் தலைதூக்கத் தொடங்கின. இராமநாதபுரம் சேதுபதியிடம் முன்பு பறிகொடுத்திருந்த அறந்தாங்கியை மீண்டும் கைபற்றிக் கொள்ள தஞ்சை அரசு முனைந்தது .இதன் நிமித்தம் மன்னன் பிரதாப்சிங் தனது தளபதி மானோஜி தலைமையில், ஒரு படையை அனுப்பினான்.

தஞ்சையின் படையெடுப்பை எதிர்க்க மறவர் படையும் தயாராகவே இருந்தது. இப்படையெடுப்பில் புதுக்கோட்டை தொண்டைமானின் உதவியும் கிடைக்குமானால் வெற்றி சுலபம் என்பது தளபதி மானோஜிக்குத் தோன்றியது தமது படைபலத்தைப் பெருக்கிக் கொள்ள அவன் தொண்டைமானை நாடவும் செய்தான்.

தஞ்சைக்கும் புதுக்கோட்டைக்கும் இடையே சுமுக உறவு இல்லாத நிலையில் மானோஜி உதவி கோருகிறானே யென்று தொர்ண்டைமான் யோசித்தார். ஏற்கனவே அவர்கள் ராணி மீனாட்சியின் படை பலத்தையும் சேர்த்து

கொண்டு தம் மீது படையெடுத்து, புதுக்கோட்டையை நிர்மூலமாக்கி, திருமயம் வரை துரத்தி வந்தவர்களாயிற்றே என்பது அவரது மனதில் இல்லாமலில்லை. இருந்தபோதிலும் மானேஜிக்கு உதவி செய்ய சம்மதித்து அதற்கொரு நிபந்தனையையும் விதித்தார். ஏற்கனவே புதுக்கோட்டை வசமிருந்த கீழா நிலைக்கோட்டையும், அதன் பகுதிகளும் தஞ்சை மன்னனால் பறிக்கப்பட்டிருந்தது. அவற்றை மீண்டும் தம் வசம் ஒப்படைப்பதானால் படையெடுப்புக்கு உதவுவதாகத் தெரிவித்தார். போரினால் சாதிக்க முடியாதவற்றை தக்க தருணத்தில் விதேகத்தினால் சுலபமாக சாதித்து விடலாமில்லையா!

இராமநாதபுரத்தை வெற்றி கொள்வது புதுக்கோட்டையின் படையுதவி இல்லாமல் நடைபெறாது என்ற எண்ணத்துடனிருந்த மானேஜி இதற்குச் சம்மதித்தான். புதுக்கோட்டையின் படை உதவி பெற்று அறந்தாங்கியைத் தாக்கிக் கைப்பற்றினான்.

ஒப்பந்தத்தை நிறைவேற்ற வேண்டிய கடமையிலிருந்த தஞ்சை அரசு நழுவப் பார்த்தது. புதுக்கோட்டையுடன் தம் தளபதி மானேஜி செய்து கொண்ட ஒப்பந்தம் அவரது அதிகார வரம்புக்கு மீறியதெனக் கூறி நிராகரிக்க முயன்றது. ஆனால் மானேஜிக்கு இது நியாயமற்றதாகத் தோன்றியது. எனவே தஞ்சை அரசு முத்திரையைத் திருட்டுத்தனமாக பதித்து தொண்டைமானுக்குக் கீழா நிலைக்கோட்டையைத் தந்து விட்டதாக உறுதி செய்யும் பத்திரத்தை உருவாக்கி, தொண்டைமானுக்கு தாம் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி வைத்தான்!

இவ்வாறாக விஜயரகுநாதராயத் தொண்டைமான் அரசு பீடம் ஏறிய இருபது வருட காலத்திற்குள் இலுப்பூர் பகுதியையும், இரகுநாதராயத் தொண்டைமான் காலத்தில் கைமாறிப் போயிருந்த கீழாநிலைப் பகுதியையும் திரும்பப் பெற்று தம் நிலப்பகுதியை மேலும் விஸ்தரித்துக் கொண்டார்.

# 9. குளத்தூர் இணைப்பும் கும்பனி தொடர்பும்

தஞ்சை வசமிருந்த கீழாநிலைக்கோட்டையைத் திரும்பப் பெற்ற விஜய ரகுநாதராயத் தொண்டைமான் இலுப்பூர் பகுதியையும் புதுக்கோட்டையின் கீழ் கொண்டு வந்தார். பிறகு, மற்றொரு நிலப் பகுதியையும் இணைத்துக் கொள்ளும் வாய்ப்பொன்று சீக்கிரமே கிட்டியது.

அதுவே குளத்தூர் பகுதி.

புதுக்கோட்டையின் முதல் மன்னராகிய இரகுநாதராய தொண்டைமான் காலத்திலேயே அவரது சகோதரரான நமனத் தொண்டைமான் தம் முயற்சியால் நிறுவிக்கொண்ட ஒரு சிற்றரசு குளத்தூர் என்பதை ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளோம். அந்த நாளிலிருந்தே இந்த உறவு முறை அரசு புதுக்கோட்டையுடன் சுமுகமாகவே விளங்கி வந்தது.

குளத்தூர் அரசை நிறுவிய நமனத் தொண்டைமான் 1713-ல் இயற்கை எய்தினார். அதை அடுத்து அவரது ஒரே மகனான இராமசாமித் தொண்டைமான் குளத்தூர் அரசரானார்.

1736-ம் ஆண்டில் இராமசாமித் தொண்டைமான் இறந்தார். அவருக்குப் பிறகு அவரது புதல்வரான இரண்டாம் நமனத் தொண்டைமான் அரசு பீடம் ஏறினார்.

ஆனால், இவர் தம் தந்தையைப் போன்றோ பாட்டனாரைப் போன்றோ திறமையுடன் விளங்கவில்லை. அரசு அதிகாரிகளின் வெறுப்பையும் குடிமக்களின் எதிர்ப்பையும் தமது விவேகமற்ற செயல்களினால் சம்பாதித்துக்கொண்டிருந்தார். இத்தகைய வெறுப்புக்கும் எதிர்ப்புக்கும் காரணம் அரசு

உரிமை வாரிசு பற்றி அவர் செய்த பைத்தியக்காரத்தனமான ஒரு பிரகடனமேயாகும்.

இரண்டாம் நமனத் தொண்டைமானுக்கு பட்டத்து ராணிகள் மூலம் சந்ததி இல்லை. இவரது இச்சைக்கு உகந்த காமக் கிழத்தி ஒருத்தியின் மகனே, தமக்குப் பிறகு அரசனாக வேண்டுமென்று அறிவித்தார். தம் ஜீவிய காலத்திலேயே இதை உறுதிப்படுத்துகிற வகையில் தமது படைத் தலைவர்களுக்கு ஓர் ஆக்ஞையும் பிறப்பித்தார். அதாவது தமது படைத்தலைவர்கள் அனைவரும் வருங்கால அரசருக்குக் காட்ட வேண்டிய சகல மரியாதைகளையும் அப்பிள்ளைக்கு இப்போது முதலே செலுத்தி வரவேண்டுமென்று வற்புறுத்தினார்.

இது மக்களுக்குப் பிடிக்கவில்லை. படைத் தலைவர்களுக்கும் ஏற்க மனமில்லை. இந்த இரு சாராரும் புதுக்கோட்டை மன்னராகிய விஜய ரகுநாதராயத் தொண்டைமானிடம் முறையிட்டனர். மரபு வழியற்ற ஒருவரை மன்னனாக ஏற்க ஒவ்வாமல் குளத்தூரை புதுக்கோட்டையுடன் இணைத்துக் கொள்ளுமாறு வேண்டினர்.

இந்த வேண்டுகோளுக்கு இணங்கத் தொண்டைமான் நடவடிக்கை எடுத்தார். நமனத் தொண்டைமானின் பதவியைப் பறித்தார். அவரைக் கைது செய்து திருமயம் கோட்டையில் சிறை வைத்தார். குளத்தூர் பகுதியை புதுக்கோட்டையுடன் இணைத்துக் கொண்டார்.

இவ்விதமாக, 1690-ல் தோன்றிய குளத்தூர் அரசு 1750 வாக்கில் முடிவு பெற்றது.

குளத்தூர் அரசை நிர்மூலமாக்கியது, அந்த அரச பரம்பரைமீது விஜயரகுநாதராயத் தொண்டைமானுக்கு இருந்த குரோதமே காரணம் என்பதாகவும் கூறப்படுகிறது. விஜய ரகுநாதராயத் தொண்டைமான் அரசு கட்டிலில் அமர இருந்த சமயத்தில் குளத்தூர் அரசராயிருந்த இராமசாமித் தொண்டைமான் தம் எதிர்ப்பைத் தெரிவித்து தமது சிற்றப்பாவான பச்சைத் தொண்டைமானை புதுக்கோட்டை மன்னராக்குவதில் கலவரம் ஏற்படுத்தியிருந்தார். அந்த

முயற்சியில் விஜய ரகுநாதராயத் தொண்டைமான் வெற்றி கொண்டுவிட்ட போதிலும் தமக்கு எதிராகச் செயலாற்றிய குளத்தூர் மரபை பழிவாங்க தக்க தருணத்தை எதிர்பார்த் திருந்தாரென்றும் தருணம் வரவே வஞ்சம் தீர்த்துக்கொண்டு விட்டதாகவும் கூறப்படுகிறது.

மேற்கண்டவாறு கூறப்படுவது ஏற்கக்கூடியதாக இல்லை. குளத்தூர் அரச வம்சத்தின் மீது விஜயரகுநாதராயத் தொண்டைமானுக்கு தீராப் பகை இருந்திருக்குமேயானல், அந்த வன்மத்தைத் தீர்த்துக் கொள்ள அரசு பீடமேறிய பிறகு இருபது வருட காலம் காத்திருக்கத் தேவையில்லை; தம் அரசு வலிமை பொருந்தியிருக்கிற நிலையில் குளத்தூரை எப்போதோ கபளீகரம் செய்திருக்கலாம்!

இங்கே பரம்பரை மரபை மனதில் கொண்டு சீர்தூக்கிப் பார்க்க வேண்டும். எந்த ஓர் அரச பரம்பரையிலும் மரபு வழி தடம் புரள்வது ஒருபோதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாக இருந்ததில்லை. குறிப்பாக பிரஜைகள் ஏற்பதில்லை. குளத் தூர் அரசும், புதுக்கோட்டை அரசும் வெவ்வேருனதாக இருந்தபோதிலும் இரண்டுமே நெருங்கிய உறவு முறை கொண்ட தொண்டைமான் பரம்பரையாகும். இந்நிலையில் ஓர் அரச பரம்பரை மரபு வழி கெட்டு வேருேர் பரம்பரை யின் கைக்கு மாறுகிற நிலை ஏற்பட்டால், மற்ருெரு உறவு முறை அரசு விட்டுக் கொடுத்து விடாது. புத்திரப் பேறு இல்லாத நிலையாளுலும்கூட, குறிப்பிட்ட வமிசத்தின் வழி வந்த ஒரு வாரிசை அரசு பீடத்தில் அமர்த்துமே தவிர காம கிழத்தி பெற்றெடுத்த பிள்ளையை ஏற்க முன்வராது.

இந்த வகையில்தான் குளத்தூர் விஷயத்திலும் புதுக் கோட்டை மன்னர் செயலாற்றியிருக்கிருர்.

  

விஜய ரகுநாதராயத் தொண்டைமானின் ஆட்சிக் காலம் பெரும்பாலும் சிறு சிறு சண்டைகளிலும் நட்புடைய சிற்றரசர்களுக்கும் ஆங்கிலேயர்களுக்கும் படை பலம் கொடுத்துதவுவதிலும் கழிந்திருக்கின்றன.

தமிழகச் சிற்றரசர்களிடையேயும், பாளையக்காரர்களி டையேயும் ஒற்றுமையில்லாத நிலையில் தத்தம் செல்வாக் கைப் பெருக்கிக் கொள்ள பிரஞ்சுக்காரர்களுக்கும் ஆங்கிலே யர்களுக்கும் இடையே ஏற்பட்ட ஆதிக்கப் போட்டியும் சேர்ந்து கொண்டது. தென்னகத்தில் ஆங்கிலேயரை முறி யடித்து தம் செல்வாக்கை நிலைநிறுத்திக்கொள்ள பிரஞ்சு கவர்னராயிருந்த டூப்ளே இச்சமயத்தில் தீவிரம் காட்டினான். அவனது திட்டத்தில் ஒரு புது யோசனை தோன்றியது.

ஹைதராபாத் நிஜாம் பதவிக்குப் போட்டியிட்டுக் கொண்டிருந்த முசாபர்ஜங், நஸிர்ஜங் ஆகிய இருவரில் நஸிர்ஜங்கும், ஆற்காடு நவாப் பதவியைக் கைப்பற்றப் போட்டியிட்டுக் கொண்டிருந்த சந்தாசாகிப், முகம்மதலி ஆகிய இருவரில் முகம்மதலிக்கும் ஆங்கிலேயர்கள் ஆதரவு காட்டிப் பலனடைந்து வந்ததால், முசாபர்ஜங்கையும் சந்தாசாகிபையும் தம் பக்கம் இழுத்து ஆங்கிலேயரின் செல் வாக்கை முறியடிப்பதில் டூப்ளே முனைந்தான். அப்போது சந்தாசாகிப் மராத்தியரால் சிறை பிடிக்கப்பட்டு சகாரா வில் இருந்தான். எனவே சந்தா சாகிபுக்கு விடுதலை வாங்கிக் கொடுத்து திருச்சிமீது படையெடுக்கத் தூண்டினான் டூப்ளே. முசாபர்ஜங்கையும் தம் வலைக்குள் சிக்க வைத்து இருவருக் கும் படை உதவியளித்து, படையெடுப்புச் செலவுக்கென மூன்று லட்சம் ரூபாய்களும் கொடுத்து ஆதரித்தான்.

ஐதராபாத் நிஜாம் சார்பில் திறைப் பணம் வசூலிக்கப் புறப்பட்டது போன்ற காரணத்தைக் காட்டி பெரும் படை யுடன் தமிழகத்தில் நுழைந்தான் சந்தாசாகிப். முதன் முத லாக தஞ்சை மன்னனை நெருக்கினான். அப்போதைய நிலை யைச் சமாளிக்கும் முகமாக சந்தா சாகிப்புக்குப் பணிவது போல பணிந்து, விரைவிலேயே திறைப் பணம் கொடுத்துத் தீர்த்து விடுவதாக சமாதானம் கூறி காலம் கடத்தினான் தஞ்சை மன்னன் பிரதாப்சிங்.

தஞ்சையை அடுத்து திருச்சியை முற்றுகையிட்ட சந்தா சாகிப் மதுரை, திருநெல்வேலி ஆகிய பகுதிகளை வென்று வர

ஆலம்கான் என்பவனின் தலைமையின்கீழ் சிறு படை ஒன்றை அனுப்பி வைத்தான்.

திருச்சி அப்போது முகம்மதலி வசமிருந்தது. சந்தா சாகிபின் முற்றுகை பலமானதாயிருக்கவே முகம்மதலி ஆங்கிலேயரின் உதவியை வேண்டினன், முகம்மதலிக்கு உதவுவதன்மூலம் தான் தங்கள் நலன்களை காப்பாற்றிக் கொள்ள முடியுமென்பதை உணர்ந்தனர் ஆங்கிலேயர். இந்த உதவி அளிப்பதன் மூலம் சென்னைக்கு அருகே பெரும் நிலப்பரப்பும் படைச் செலவுக்கான பெரும் பணமும் முகம் மதலியிடமிருந்து கிடைக்க இருந்ததால், 1751-ம் ஆண்டில் **கேப்டன்கோப்** (Cope) **கேப்டன்கிஞ்சன்** (Gingen) ஆகியோரின் தலைமையின் கீழ் ஆங்கிலக் கம்பெனியார் தெற்கு நோக்கி படையை அனுப்பிற்று.

முகம்மதலிக்கு உதவியாக ஆங்கிலேயரின் படை தெற்கு நோக்கி வருவதை அறிந்து, மதுரை, திருநெல்வேலி பகுதிகளுக்குச் சென்று வெற்றி நிலையிலிருந்த ஆலம்கான் சந்தா சாகிபுக்கு உதவியாயிருக்க தனது படையுடன் திருச்சி நோக்கித் திரும்பினன். வருகின்ற வழியில் சந்தா சாகிபின் உத்திரவுப்படி புதுக்கோட்டை வந்து தொண்டை மானைச் சந்தித்தான். எட்டயபுரம் மணப்பாறை பாளையக் காரர்கள் தம் பக்கமிருப்பதாகவும், புதுக்கோட்டை தொண்டைமானும் அவர்களுடன் சேர்ந்து கொள்ள வேண்டுமென்று கோரினன். அவ்வாறு அவர்களோடு சேர்ந்தால் பெரும் நிலப்பகுதியை தொண்டைமானுக்கு வெகுமதியாகத் தருவதாகவும் சந்தாசாகிப் சார்பில் உறுதிமொழி தரப்பட்டது. ஆனல் விஜயரகுநாதராயத் தொண்டைமான் இதற்கு இசையவில்லை. ஆதிமுதலே ஆங்கிலேயருடன் நட்பாக இருந்ததால் அவர்கள் கூட்டணி யிலேயே உறுதியாக நின்ருர். சந்தா சாகிப் திருச்சியை முற்றுகையிட்டபோது ஆற்காடு நவாப், தஞ்சை மன்னன், ஆங்கிலேயர், புதுக்கோட்டை மன்னர் ஆகியோர் ஒன்று பட்டுச் செயலாற்றினர்.

முற்றுகைக்கு உள்ளாகியிருந்த முகம்மதலிக்கு உதவியாக 400 குதிரைகளையும் 3000 போர்வீரர்கள் கொண்ட கள்ளர் படையையும் சிங்கண்ணன் சேர்வைக்காரர் என்பவரின் தலைமையின் கீழ் தொண்டைமான் அனுப்பினர். இப்படை ஆங்கிலேயருக்கு உதவியாயிருந்து, உத்தாத்தூர், வாலி வண்டபுரம் ஆகிய இடங்களில் பிரஞ்சுக்காரர்களுடன் திறம்பட போரிட்டது குறிப்பிடத்தக்கதாகும்.

இந்தப் போரின் தொடர்பாக 1752ல் முகம்மதலிக்கு உதவியாக மேஜர் லாரன்ஸ், கேப்டன் கிளைவ் ஆகியோர் தலைமையில் ஆங்கிலப் படையொன்று திருச்சிக்கு வந்தது. சந்தா சாகிபின் முற்றுகை தளர்வடைந்து பின் வாங்க நேரிட்டது. தஞ்சைப் படை தளபதியான மானேஜியால் சந்தா சாகிபின் தலை துண்டிக்கபட்டது.

இவ்விதம் முகம்மதலியின் நிலை திருச்சியில் காப்பாற்றப் பட்டது. ஆனாலும் முகமதலியைப் பிடித்திருந்த சனியன் நீங்கவில்லை! சந்தா சாகிபு படையெடுத்து வந்த சமயத்தில் ஆங்கிலேயருக்கு அபாயக்குரல் கொடுத்விட்டு இரகசியமாக மைசூருடனும் ஓர் ஒப்பந்தம் செய்திருந்தான் முகம்மதலி. சந்தா சாகிபின் படையெடுப்பிலிருந்து மீள தமக்கு உதவி செய்வார்களேயானல் வெற்றிகொண்டதும் பிரதி உபகார மாக திருச்சியை மைசூருக்கு கொடுக்கச் சம்மதித் திருந்தான். அதை இப்போது நிறைவேற்றுமாறு மைசூர் கேட்டது. ஆனல் முகம்மதலி திருச்சியை மைசூருக்குக் கொடுக்க விரும்பவில்லை. ஏதேதோ சாக்குப் போக்குச் சொல்லித் தட்டிக் கழிக்கவே, கோபமுற்ற மைசூர் பிரஞ்சுக் காரர்களுடன் சேர்ந்து கொண்டது. திருச்சிக் கோட்டை மறுபடியும் முற்றுகையிடப்பட்டது.

1753ல் ஏற்பட்ட இந்த முற்றுகையை முகம்மது அலியும் ஆங்கிலேயரும் தாக்குப் பிடிப்பதற்குப் பக்கபலமாக தஞ்சை யும் புதுக்கோட்டையும் விளங்கியுள்ளன. அதிலும் புதுக் கோட்டை உதவிய விதம் மிக மிக அதிகமாகும். கோட்டை யினுள்ளேயிருக்கும் போர் வீரர்களுக்கு வேண்டிய உணவுப் பொருட்களையும், போர்ப் பொருட்களையும், தளவாடங்களை

யும் பெருத்த அளவில் சேகரித்து கோட்டைக்குள் அனுப்பும் பணியை திறம்படச் செய்து வந்தார் தொண்டைமான்.

தொண்டைமான் அளித்துவரும் ஆதரவு நீடிக்கிறவரையில் திருச்சி முற்றுகையில் வெற்றி காணமுடியாது என்பதை நன்கு உணர்ந்த மைசூரின் ரீஜண்டான மஞ்சுராஜ், முகம்மதலிக்கும் ஆங்கிலேயருக்கும் உதவ வேண்டாமென்றும், இல்லையெனில் பிற்பாடு புதுக்கோட்டைமீது மிக மிக மோசமாக வஞ்சம் தீர்த்துக்கொள்ள நேரிடுமென்றும் விஜய ரகுநாத ராயத் தொண்டைமானை அச்சுறுத்தினன். ஆனல் இதற்கெல்லாம் தொண்டைமான் அஞ்சவில்லை.

பிரஞ்சுக்காரர்கள், மைசூர் படை, மராத்தியர் மூவரும் ஓரணியாக இருந்து நடத்திய இந்த முற்றுகை எளிதில் முடியவில்லை. 1754 வரைக்கும் நீடித்தது. இம் முற்றுகையை ஒரு முடிவுக்குக் கொண்டுவர 1754 பிப்ரவரியில் மேலும் துப்பாக்கிகள், போர்த்·தளவாடங்கள், ஏழாயிரம் பவுன் மதிப்புள்ள ரொக்கப் பணம் ஆகியவற்றை தக்க காவலோடு திருச்சி கோட்டைக்குள் சேர்ப்பிக்க முயன்றபோது, மைசூர் படையில் வீரனுய் விளங்கிய ஐதர் அதனைத் தாக்கி பெரும் பொருளைக் கைபற்றிக் கொண்டான். இதனல் ஆங்கிலேயருக்குப் பெருத்த சேதம் ஏற்பட்டது. இந்நிலையிலும் புதுக்கோட்டை மட்டுமே ஆங்கிலேயருக்கும் முகம்மதலிக்கும் வேண்டிய உணவுப் பொருட்களையும், போர்க் கருவிகளையும் அனுப்புவதற்கு பிரதான கேந்திரமாகச் செயல்பட்டது.

இந்த முற்றுகையில் மைசூரின் பக்கம் மராத்தியரும் சேர்ந்துக்கொண்டிருந்ததால், தஞ்சை தற்காலிகமாக ஒதுங்கி நிற்கும்படி நேரிட்டுவிட்டது.

விஜய ரகுநாதராயத் தொண்டைமானின் ஆதரவு ஆங்கிலேயருக்கும் முகம்மதலிக்கும் தொடர்ந்து கிடைத்துக் கொண்டிருந்ததாலேயே தமக்கு வெற்றி கிட்டாதிருக்கிறது என்பதை உணர்ந்து எதிரிப் படைகள் எரிச்சலுற்று தொண்டைமானைப் பழிவாங்கும் நோக்கில் புதுக்கோட்டை மீது பாய்ந்தது. இதை ஏற்கெனவே புதுக்கோட்டை மக்கள்

எதிர்பார்த்திருந்ததால் தத்தம் ஆடு,மாடு, செல்வங்களுடன் அருகே இருந்த காடுகளில் மறைந்துகொண்டனர். எதிரி களால் வெறும் காலிக் கூரைகளை மட்டுமே தீ வைத்து சேதப் படுத்த முடிந்தது.

திருச்சி முற்றுகையின்போது புதுக்கோட்டை அளித்த பேராதரவுக்கு நவாப் முகம்மதலி பெரிதும் நன்றிக்கடனுக் குள்ளானுன். இதன் நிமித்தம் தனனைச் சுற்றியுள்ள குறு நிலத் தலைவர்களைத் தாக்கி அவர்களது பிரதேசங்களை தம் நாட்டுடன் சேர்த்துக்கொள்வதற்கு தொண்டைமான் அனு மதிக்கப்பட்டார். நவாபின் அனுமதியோடு பாலையவனம் ஜமீன், மணப்பாறை பாளையக்காரர் ஆகியோரைத் தொண்டைமான் தாக்கியதாகவும் தெரிகிறது.

சோதனையான காலங்களில் நவாபுக்கு உண்மை யுடன் உதவியதற்காக திறை செலுத்தாதிருக்கும் உரிமை யையும் விஜய ரகுநாதராயத் தொண்டைமான் கோரிப் பெற்முர்.

திருச்சி வெற்றிக்குப் பிறகு தமிழ்நாட்டின் தெற்குப் பகுதிகளையும் தன் அதிகாரத்தின்கீழ் கொண்டுவர விரும் பினுர் முகம்மதலி. மதுரை, திருநெல்வேலி ஆகிய பகுதிகளில் சந்தா சாகிபின் ஆதரவாளர்கள் இருந்தனர். அவர்களை ஒழித்துக்கட்ட அவன் முற்பட்டான். இதற்கு ஆங்கிலேயர் ஆதரவு கிட்டியது. கர்னல் ஹிரான் தலைமையில் சுமார் 2000 சிப்பாய்கள் அனுப்பப்பட்டனர். ஆங்கிலேயர்களின் மாபெரும் நண்பனுக புதுக்கோட்டை மன்னர் என்றுமே விளங்கி வந்திருப்பதால், தொண்டைமானும் நவாபிற்கு உதவியாக படை அனுப்பிவைத்தார். இந்த முப்படைகளும் முகம்மதலியின் அண்ணனுன மாபூஸ்கான் தலைமையில் இணைந்து போரிட்டது. குமரவாடியில் லக்கி நாயக்கரைத் தோற்கடிப்பதில் புதுக்கோட்டைப் படை சிறப்பாகப் போரிட்டது.

1775-ல் நிகழ்ந்த இந்த மதுரை, திருநெல்வேலி மாவட் டப் படையெடுப்பின்போது, இராமநாதபுரத்து இரகுநாத சேதுபதி ஆங்கிலேயருடன் நட்பாக இருக்க விரும்புவதாக

வும், இந்த நட்பு உடன்படிக்கைக்கு கைமாறுக தம் நாட்டி லுள்ள இரு சிறு,துறைமுகங்களை ஆங்கிலேயருக்கு கொடுக் கச் சித்தமாயிருப்பதாகவும் தெரிவித்து ஹீரானை அனுகினர். அவரோடு உடன்படிக்கையும் செய்து கொண்டார். தென் மாவட்ட படையெடுப்புக்குத் தமது உதவியாக ஐயாயிரம் பேர் அடங்கிய இராமநாதபுரத்துப் படையையும் ஹீரா னுக்கு உதவியாக அனுப்பி வைத்தார்.

இச்செய்தியை அறிந்ததும் புதுக்கோட்டை மன்னர் திடுக்கிட்டார். தஞ்சைக்கும் இதில் விருப்பமில்லை. எதிர்ப்புக் குறிப்பொன்று சென்னையிலிருந்த கும்பெனியாருக்கு அனுப் பப்பட்டது. ஆங்கிலேயர்கள் சேதுபதியோடு நட்புக் கொண் டால் தாம் இருவரும் ஆங்கிலேயர்களின் பகைவர்களாக மாற நேரிடும் என்று உறுதியாக அதில் தெரிவித்தார்கள். தஞ்சை, புதுக்கோட்டை உதவி இன்றி தென் பக்கத்தில் போருக்குத் தேவையான உணவுப் பொருள்களையும் போர்த் தளவாடங்களையும் திரட்ட முடியாது என்பதை நன்கு உணர்ந்திருந்த சென்னை கும்பெனியார் உடனடியாக கர்னல் ஹீரானுக்கு அவசர உத்திரவு ஒன்றை பிறப்பித்தனர். சேதுபதியுடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை முறித்துக் கொள்ளும்படியும் அவர் கொடுத்துதவியிருக்கும் மறவர் படையையும் திரும்ப அனுப்பி விடுமாறும் கட்டளையிடப் பட்டது.

அவ்வாணைப்படியே கர்னல் ஹீரான் செயல்படத் தொடங்கினர். இராமநாதபுரத்துப் படையைத் திரும்பிச் செல்லுமாறு கோரினர். அவர்களை கட்டாயப் படுத்தி வெளி யேற்ற நேரிட்டது.

இந்தச்சமயத்தில் ஹீரான் பெரும் கையூட்டு பெற்று மாபூஸ்கானை மதுரை, திருநெல்வேலிப் பகுதிகளுக்குத் தலை வனுக அறிவித்தார்.

ஹீரானின் இச்செய்கையில் அதிருப்பதியடைந்த கும் பெனியார், அவரை பதவி நீக்கம் செய்து அவரது ஸ்தானத் திற்கு காப்டன் காவியட் என்பவனை அனுப்பி வைத்தனர்.

இச்சமயத்தில் தஞ்சைக்கும் புதுக்கோட்டைக்கும் இடையே திருமயம், கீழாநிலைக் கோட்டைகளின் உரிமை குறித்து சச்சரவு ஏற்பட்டது. ஆங்கிலேயர்களின் உற்ற நண்பர்களாக இவ்விருவரும் விளங்கிவந்த போதிலும், இவர்களுள் எப்போதுமே தீராத பகை இருந்துவந்தது. இப்போது அது வெடிக்கத் தொடங்கியது. திருமயம், கீழாநிலைக் கோட்டைகள் தம் ஆதிக்கத்துக்கு உட்பட்டவை என்று தஞ்சை, உரிமை கொண்டாடியது. அதனை புதுக்கோட்டை தொண்டைமான் ஏற்கவில்லை. எனவே தஞ்சைப் படைகள் ஏம்பல், இரும்பா நாடு ஆகிய கிராமங்களைச் சுற்றியுள்ள பகுதிகளைத் தாக்கிப் பிடித்தது. தொண்டைமான் சளைக்கவில்லை. எதிர்த்துப் போராடத் தயாரானார். சச்சரவு மேலும் வலுத்தது. புதுக்கோட்டை வசமிருந்த திருமயம் கீழாநிலைக் கோட்டைகளை இடித்து வருமாறு தஞ்சைத் தளபதி மானோஜி அனுப்பப்பட்டார்.

இதைச் செய்ய மானோஜிக்கு மனச்சாட்சி இடம் கொடுக்கவில்லை. புதுக்கோட்டைமீது இருந்த நன்றியுணர்வால் தயக்கம் காட்டினார். இதே சமயம் தமது நண்பர்கள் இருவரும் தங்களுக்குள் மோதிக் கொள்வது ஆங்கிலேயர்களுக்கு சங்கடமாயிருந்தது. இருவரையும் சமாதானமாகப் போகும்படி அறிவுரை கூறினர். தஞ்சை மன்னன் விடாப்பிடியாக நடந்து கொள்ளவே. அவரை தண்டிக்கும் விதமாக திருச்சியில் இருந்த காப்டன் காலியட் தம்படையை தஞ்சை நோக்கிச் செலுத்த ஆயத்தமாய் இருப்பது போல ஒரு 'சலசல'ப்பை ஏற்படுத்தினர். அதனால் தஞ்சைப் படைகள் தொண்டைமானைத் தாக்காமலேயே பின்வாங்கிச் சென்றன.

கர்னல் ஹீரான் பெருமளவு கையூட்டு பெற்று மதுரை, திருநெல்வேலி ஆகிய பகுதிகளுக்கு மாபூஸ்கானை அதிகாரியாக நியமித்துச் சென்ற விஷயத்தை ஏற்கனவே குறிப்பிட்டுள்ளோம். அவனுடைய முறைகோடான நிர்வாகத்தால் எட்டயபுரம், பாஞ்சாலக்குறிச்சி பாளையங்களைத் தவிர இதர எல்லா பாளையக்காரர்களும் மாபூஸ்கானுக்கு

எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். எனவே யூசுப்கான் என்பவனின் தலைமையின் கீழ் ஒரு படையை ஆங்கிலேயர்கள் மாபூஸ்கானுக்கு உதவியாக அனுப்பி வைத்தனர். இப்படைககு உதவியாக புதுக்கோட்டை தொண்டைமான் தமது மைத்துனர் ஒருவரின் தலைமையின்கீழ் படையொன்றையும் அனுப்பிவைத்தார். பெரும்பாலான பாளையக்காரர்கள் தற்காலிகமாக அடக்கி ஒடுக்கப்பட்டனர்.

இது நடந்தது 1755—ம் ஆண்டாகும்.

அடுத்த ஆண்டு 1756—ல் மதுரை, திருநெல்வேலி பகுதிகளை நிர்வகிக்கும் உரிமையை ஆங்கிலேயர்கள் ஆர்காடு நவாபிடமிருந்து பெற்றனர். கிஸ்தி வசூலிக்கும் அதிகாரியாக விளங்கிய மாபூஸ்கானை நீக்கிவிட்டு அந்த ஸ்தானந்திற்கு தீத்தாரப்ப முதலி என்பவரை கும்பெனியார் அனுப்பி வைத்தனர்.

இதனல் மாபூஸ்கான் ஆங்கிலேயருக்கும் நவாபுக்கும் எதிராகச் செயல்படத் துவங்கினன். ஏற்கனவே அவர்களுககு எதிராகக் கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்த பாளையக்காரர்களுடன் சேர்ந்துக் கொண்டு அப்போது திண்டுகல்லில் படை வைத்திருந்த ஐதரலியுடன் ஒப்பந்தம் செய்து கொள்ளவும் முனைந்தான்,

இதை முறியடிக்க கும்பெனியார் காப்டன் கைலட் என்பவரின்கீழ் படையொன்றை அனுப்பியது. புதுக்கோட்டை குதிரைப் படையும் இவருக்கு உதவியாகச் சேர்ந்து கொண்டது.

ஆனல் இப்படையெடுப்பு தீவிரமாகச் செயல்பட முடியவில்லை. பிரெஞ்சுகாரர்கள் சென்னையை முற்றுகையிடவே காப்டன் கைலட் அவசரமாக தம்படையுடன் சென்னை திரும்ப வேண்டியதாயிற்று.

இது 1757-ம் ஆண்டின் நிலையாகும்.

அடுத்த ஆண்டு விஜயரகுநாதராயத் தொண்டைமானுக்கு ஒரு தர்ம சங்கடமான நிலை ஏற்பட்டது. அதற்குக்

காரணம் லல்லியின் தலைமையில் 1758 ஏப்ரல் மாதத்தில் பிரெஞ்சுப் படை தஞ்சையைத் தாக்க முற்பட்டதேயாகும்.

முற்றுகைக்கு உள்ளான தஞ்சை ஆங்கிலேயருக்கும் புதுக்கோட்டை மன்னனுக்கும், சேதுபதிக்கும் அபாயக் குரல் கொடுத்து உதவி கோரியது. புதுக்கோட்டைத் தொண்டைமான் படையனுப்பி உதவ தயக்கம் காட்டினர். கீழாநிலை, திருமயம் கோட்டைகளுக்கு உரிமை கொண்டாடி சண்டைக்கு வந்தவனல்லவா தஞ்சை மன்னன். அந்தக் கசப்பு அவருக்குத் தீராதிருந்தது.

தொண்டைமானின் தயக்கத்தை அறிந்த சென்னை கவர்னர் தஞ்சை அரசுக்கு உதவியாகப் படையனுப்புமாறு வேண்டிக் கொண்டார். தஞ்சை படையெடுப்பில் பிரெஞ்சுக் காரர்கள் வெற்றிபெற்று விட்டால் ஆங்கிலேயரின் வலிமை பெருமளவில் குன்றிவிடும். உற்ற நண்பர்களான ஆங்கிலேய ரும் இதனல் பாதிக்கப்படுகின்றனரே என்பதையும் தொண்டைமான் யோசிக்க வேண்கியதாயிருந்தது. மற்றொருபுரம் தஞ்சைத் தளபதியான மானோஜியிடமிருந்து தனிப்பட்ட முறையில் வேண்டுகோள் வரவே, தன்வரை யில் நன்றியுடனிருக்கும் மானோஜியையும் புறக்கணிக்க முடியாத தர்ம சங்கடத்தில் ஒரு முடிவுக்கு வந்து தஞ்சைக்கு உதவியாக 1,500 கள்ளர்கள் கொண்ட காலாட் படை யொன்றைத் தொண்டைமான் அனுப்பி வைத்தார்.

தஞ்சை மீது பிரெஞுசுக்காரர்கள் இட்டிருந்த முற்றுகை 1758 ஆகஸ்டில் முறியடிக்கப்பட்டது. லல்லி பின் வாங்கிச் செல்ல நேரிட்டது.

தஞ்சை முற்றுகையில் தோல்வியடைந்து பின்வாங்கிய பிரெஞ்சித் தளபதி லல்லி சென்னையைக் கைப்பற்றும் முயற்சியில் இறங்கினன். அந்த முயற்சியில் முதல் கட்ட மாக ஆற்காடு அவனிடம் பிடிபட்டது. அங்கிருந்தபடி சென்னையைத் தாக்குவதற்கு தன்னைத் தயார்படுத்திக் கொண்டிருந்தான். சென்னை கோட்டைக்கு வேண்டிய உணவுப் பொருள்களைத் தந்து கொண்டிக்ருக்கும் செங்கற் பட்டை பாதுகாக்க வேண்டிய அவசியம் ஆங்கிலேயருக்கு

ஏற்பட்டது. எனவே தமிழ்நாட்டின் தென்பகுதிக்கு அனுப்பியிருந்த தம் படையைத் திரும்ப அழைத்துக் கொண்டதோடு, தஞ்சை, புதுக்கோட்டை, இராமநாத புரம், சிவகெங்கை ஆகியவற்றின் உதவியையும் கோரினர்.

விஜயரகுநாதராயத் தொண்டைமான் 200 குதிரைகள் 1500 கள்ளர்கள் அடங்கிய காலாட் படை, 250 பணியாட் கள் அடங்கிய படையை அனுப்பி வைத்தார். இப்படை திருக்கோயிலூரில் யூசுப்கான் படையோடு சேர்ந்து பிரஞ்சுக் காரர்கள் பிடித்திருந்த பகுதியை மீட்டது. எதிரிகளுக்கு உணவுப் பொருட்களும், இதர தளவாடங்களும் போய்ச் சேராதபடி தடுத்தது.

இந்த முற்றுகை 1759 பிப்ரவரி 16ம் தேதி வரை நீடித்தது.

ஆங்கிலேயரின் கப்பல் படை ஒன்று வங்கக் கடலில் தோன்றியது. பிரெஞ்சுப் படையின் வாபசுக்கு வழிவகுத்தது.

1750–60 வாக்கில் தஞ்சைக்கும் புதுக்கோட்டைக்கும் இடையே மீண்டும் எல்லைப் புறச் சண்டைகள் தலைதூக்கின. தஞ்சையின் பாதுகாப்புக்கு ஆபத்தான வகையில் விஜய ரகுநாதராயத் தொண்டைமான் ஒரு கோட்டையைக் கட்ட முற்பட்டாரென்றும் அதைத் தடுக்கவே புதுக்கோட்டை யைத் தாக்க முற்பட்டதாகவும் கூறப்பட்டது. இச்ச்சர வின்போது தஞ்சைப் படைகள் வடக்கலூர், கீழாங்காடு ஆகிய கிராமங்களைக் கொள்ளையிட்டதோடு, மூவாயிரம் கால்நடைகளை கவர்ந்து சென்றது. தமது நட்பு நாடுகள் இரண்டும் தமக்குள் சண்டையிட்டுக்கொள்வதை விரும்பாத ஆங்கிலக் கும்பெனி பௌர்சியர் என்பவரை அனுப்பி சமா தானம் செய்து வைத்தனர்.

தமிழ் நாட்டின் தென்பகுதியில் கிஸ்தி வசூப்பதில் மாபூஸ்கானின் திறமையின்மை காரணமாக அவனுக்கு உதவியாக இருக்க ஆங்கிலக் கும்பெனி யூசுப்கான் என்பவனை ஏற்கனவே அனுப்பியிருந்ததல்லவா, இதனால் மாபூஸ் கானுக்கு மன வருத்தம் ஏற்பட்டது. புரட்சி செய்த

பாளையக்காரர்களுடன் சேர்ந்து செயல்படலானுன். குறிப் பாக புலித்தேவனுடன் இணைந்து யூசுப்கானுக்கு எதிராகச் செயல்பட்டான். புரட்சிப் பாளையக்காரர்களின் வலிமையை ஒடுக்க வேண்டுமானல் மாபூஸ்கானை வழித்தொண்டாக வேண்டுமென்பது ஆங்கிலேயரின் எண்ணம். எனவே விஜய ரகுநாதராயத் தொண்டைமானின் உதவியை நாடினர். மாபூஸ்கானுக்கும் நவாப்புக்குமிடையே சமரசம் செய்து வைக்கும்படி கோரினர். அதன்படியே தொண்டைமான் மாபூஸ்கானை புதுக்கோட்டைக்கு வரவழைத்து சமாதானப் படுத்தி அனுப்பி வைத்தார்.

மாபூஸ்கான் மதுரையை விட்டு அகன்றதால் தடை யின்றி செயல்பட யூசப்கானல் முடிந்தது. மதுரை, திருநெல் வேலி ஆகிய பகுதிகளில் வசூலிக்கப்பட்ட பணம் அவனது நிலையை உறுதிப்படுத்திக் கொள்ள மட்டுமே போதியதாக இருந்தது. கும்பெனியாருக்குப் பணம் செலுத்த இயல வில்லை. மேலும் ரகசியமாக பிரஞ்சுக்காரர்களோடு சேர்ந்து கொண்டு சுதந்திரமாகச் செயல்படத் தொடங்கினுன். இதை அறிந்த கும்பெனியர் 1763 ஜூலை வாக்கில் யூசுப்கானை புரட்சிக்காரனென அறிவித்தது. அவனைத் தண்டிக்க 1764 ஜனவரி தொடக்கத்தில் மேஜர் பிரிஸ்டன் தலைமையில் மதுரைக்கு படை ஒன்றையும் அனுப்பியது. இப் படைக்கு உதவியாக தம் படைகளையும் கொடுத்து உதவுமாறு புதுக் கோட்டையைக் கோரினர். இதற்கு இசைந்து சர்தார் அண்ணுவய்யர் சதாசிவராயர் ஆகியோர் தலைமையில் படை யொன்றைப் புதுக்கோட்டை மன்னர் அனுப்பி வைத்தார். இந்த முற்றுகையை வெகு தீரத்துடன் பத்து மாத காலம் தாக்குப் பிடித்தான் யூசுப்கான். ஆனல் யூசுப்கான் படை யில் ஒரு தளபதியாக இருந்த மார்ச்சந்த் என்னும் பிரஞ்சுக் காரன் செய்த துரோகத்தால் யூசுப்கான் காட்டிக் கொடுக் கப்பட்டான். 1764 அக்டோபர் 15ம் நாள் யூசுப்கானின் முடிவு நாளாயிற்று. ஆங்கிலேயர்களால் அவன் தூக்கிலிடப் பட்டான்.

இதன் தொடர்பாக நவாப் முகம்மதலிக்கு வேறொரு ஆத்திரம். யூசுப்கானை ஒடுக்க முற்பட்டபோது உடையார் பாளையமும் அரியலூர் பாளையக்காரனும் துணை வராது இருந்ததோடு திறைப் பணத்தை ஒழுங்காகச் செலுத்தி வராமலும் இருந்ததே நவாப்பின் கோபத்திற்குக் காரணம். அவர்கள் மீது படையெடுக்கக் கும்பெனியாரைத் தூண்டினான் நவாப். கம்பெனியும் நவாபும் இணைந்தனர். கர்னல் சார்லஸ் கெம்பல் என்பவரின் தலைமையின் கீழ் ஆங்கிலப் படையும், நவாப்பின் மகனான உம்தாத்—உல்—உமாராவின் தலைமையின் கீழ் நவாப்பின் படையும் இணைந்து உடையார் பாளையம், அரியலூர் பகுதிக்குப் படையெடுத்துச் சென்றது. இவர்களுக்கு உதவியாக 200 குதிரைகள், 4,000 கள்ளர்கள் மற்றும் சிப்பாய்கள் அடங்கிய படையொன்றை புதுக்கோட்டை மன்னர் அனுப்பி வைத்தார். புதுக்கோட்டை படைக்கு சதாசிவராயர், அண்ணாவையன், அண்ணயன் ஆகிய சர்தார்கள் தலைமை வகித்துச் சென்றனர்.

இத்தாக்குதலில் உடையார்பாளையம், அரியலூர் பாளையக்காரர்கள் தப்பியோடி மைசூரில் சரணடைந்தனர்.

1769-ல் ஹைதர் அலி தஞ்சை திருச்சி ஆகிய இடங்களுக்குப் படையெடுத்து வந்தான். இதிலும் ஆங்கிலேயருக்கு புதுக்கோட்டை துணை போயிற்று. ஹைதரின் கோபம் புதுக்கோட்டை மீது திரும்பிற்று. எல்லா சந்தர்ப்பங்களிலும் இந்தப் புதுக்கோட்டையல்லவா ஆங்கிலேயருக்கு உதவியாகச் செயல்பட்டு வருகிறது. பழிவாங்க முற்பட்டான் ஹைதர். புதுக்கோட்டை மீது பெருமளவில் தாக்குதல் நடத்தினான். இதனால் புதுக்கோட்டை பெருத்த சேதத்திற்கு உள்ளாகியது.

புதுக்கோட்டையைக் கட்டிக் காப்பதிலும் தஞ்சையுடன் அடிக்கடி மோதுவதிலும், ஆங்கிலேயருக்கு உதவியாய் படை திரட்டி அனுப்புவதில் தம் வாழ்நாளில் பெரும் பகுதியைக்

கழித்துவிட்ட விஜயரகுநாதராயத் தொண்டைமான் 1769 ஆண்டு இறுதியில் காலமானுர்.

இம்மரணம் எந்தத் தேதியில் என்பதைக் குறிப்பிட ஆதாரம் எதுவும் கிடைக்கப் பெருவிட்டாலும் ஆண்டு சரி வர தெரிகிறது. விஜயரகுநாதராயத் தொண்டைமானின் புதல்வரான இராயரகுநாதத் தொண்டைமான் 1769ல் பட்டம் ஏற்றதாகக் குறிப்பிடும் செய்தியிலிருந்து இதனை நாம் உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

## 10. பிரம்மேந்திரர் விஜயம்

பல்வேறு போர்களில் விஜயரகுநாதராயத் தொண்டை மான் இடைவிடாது ஈடுபட்டிருந்தபோதிலும் அவர் அறப் பணிகளை மறந்து விடவில்லை. மௌன முனிவரான சதாசிவ பிரம்மேந்திரர் என்பவரை தமது உபதேச குருவாகப் பெறும் பாக்கியமும் இவருக்குக் கிட்டியுள்ளது.

இந்தப் பெரும் ஞானியைப் பற்றி இங்கே குறிப்பிடுவது அவசியமாகும். சதாசிவ பிரம்மேந்திரரின் பிறப்பு, மற்றும் பிறவி விடுதலை ஆகியவற்றின் சரியான நாட்கள் நமக்குச் சரிவர கிடைக்கப் பெருமலிருந்தாலும் செவி வழிச் செய்தி களிலிருந்து அவரது வாழ்க்கைப் பகுதிகளில் சிலவற்றை நம்மால் உறுதிப்படுத்த முடிகிறது.

சதாசிவ பிரம்மேந்திரர் கும்பகோணத்தை அடுத்த திரு வாசநல்லூர் என்னும் கிராமத்தில் பிறந்தார். அந்தணர் குலத்தவர். ஜானகி பரிணயம் என்னும் வடமொழி நாட கத்தை இயற்றிப் புகழ் பெற்றிருந்த இராம பத்ரதீட்சதர் என்பவரிடம் வடமொழி இலக்கண இலக்கியங்களை கற்ற றிந்தார் பிரம்மேந்திரர்.

சதாசிவ பிரம்மேந்திரர் சிறு வயதிலேயே அந்த நாளைய வழக்கப்படி பருவமாகாத ஒரு பெண்ணையே மணந்தவர். அவரது மனைவி பருவம் அடைந்த போது, அந்த நாளை வீட்டிலுள்ளவர்கள் கொண்டாடிக் கொண்டிருந்தனர். அன்று வெகு பசியோடு வீட்டிற்கு வந்த சதாசிவ பிரம்மேந்திரர் தன்னுடைய அன்னையை அணுகி உணவளிக்குமாறு கேட்டார். சற்று பொறுத்திருக்கும்படி அன்னையர் கூறினர். அதுவே அவருக்கு உலகப்பற்றை துறப்பதற்குக் காரணமாகி விட்டது. குடும்ப வாழ்வைத் தொடங்க இருக்கிற நாளிலேயே சோற்றுக்குக் காத்திருக்க வேண்டுமென்றால் மணவாழ்க்கையை நடத்தும் போது எதற்கெல்லாம் காத்திருக்க வேண்டுமோ என்றுகூறி துறவு பூண்டதாகக் கூறப்படுகிறது.

வீட்டைத் துறந்த சதாசிவ பிரம்மேந்திரர் கும்பகோணத்திலிருந்த சங்கராச்சாரிய சுவாமிகளை தமது குருவாகக் கொண்டு அவரிடம் வேதாந்த யோகங்களைப் பயின்றார். பிரம்மேந்திரர் தனது பாடல்களில் பரமசிவந்திரர் என்று குறிப்பிடுவது சங்கராச்சாரியரையே எனக் கருதப் படுகிறது.

தம் குருவிடம் சதாசிவம் வேதாந்த விஷயங்களை தீவிரமாக விவாதிப்பதுண்டாம் அவ்வாறு ஒருமுறை ஆவேசமாக குருவிடம் விவாதிக்கையில், ''என்றுதான் நீ பேசாமலிருக்கக் கற்றுக் கொள்ளப் போகிறாய்?'' என்று ஆச்சரியார் வினவியதாகவும் அது சுயக்கட்டுப் பாட்டை பிரம்மேந்திரருக்கு உணர்த்தியாகவும் கூறப்படுகின்றது. அன்று முதல் பிரம்மேந்திரர் மிகத் தீவிரமாக மௌன விரதத்தை கடைப் பிடித்தார்.

பின்னர் பிரம்மேந்திரர் அவதூதராகப் பல்வேறு இடங்களுக்கும் சஞ்சரிக்கலானார். அவதூதராக நிர்வாண கோலத்திலேயே திரிந்து வந்தார். அப்போது பல அற்புத நிகழ்ச்சிகளைச் செய்து காட்டியிருப்பதாக திரு. இராதா கிருஷ்ணன் அவர்கள் எழுதியுள்ள சமஸ்தான வரலாற்று நூலில் குறிக்கப்பட்டுள்ளது.

1738-ம் ஆண்டுவாக்கில் இம்மகானை விஜய ரகுநாதராய தொண்டைமான் சந்திக்க நேர்ந்தது. பிரம்மேந்திரர் புதுக் கோட்டையை அடுத்து இருந்த திருவரங்குளம் காட்டில் திரிந்து கொண்டிருந்தபோது தொண்டைமான் அவரைச் சந்திக்க நேர்ந்தது. அந்த முதல் சந்திப்பிலேயே சதாசிவப் பிரம்மேந்திரரின் பெருமையை உணர்ந்து தொண்டைமான் அவரது ஆசியையும் உபதேசத்தையும் வேண்டினுர். அதற் கிசைந்து பிரம்மேந்திரர் தட்சிணுமூர்த்தி மந்திரத்தை மண லில் எழுதிக் காட்டி தொண்டைமானுக்கு உபதேசித்ததாக கூறப்படுகிறது.

அவர் எழுதிக் காட்டிய மணல் பகுதி இன்றும் தொண்டைமான் குடும்பத்தினரால் பத்திரமாகப் பாதுகாக் கப்பட்டு வருகிறது.

பிரம்மேந்திரரின் பரிந்துரைப்படி மகாபாஷ்யம்கோபால கிருஷ்ண சாஸ்திரி அவர்களை தமது ராஜகுருவாக விஜய ரகு நாதராயத் தொண்டைமான் ஏற்றுக் கொண்டார். இந்த ராஜகுருவின் ஆலோசனைப்படி நாட்டில் மங்களம் பொங்கிட நவராத்திரி பண்டிகை (தசரா) கொண்டாடுவது மேற்கொள் ளப்பட்டது. இப்பண்டிகையின் பத்து நாள் கொண்டாட் டத்திலும் ஏழை எளியவர்களுக்கு அரிசியும் அம்மன் காசும் தானமாக வழங்கப்பட்டது. இதற்கென்றே அக்காசுகள் தயாரிக்கப்பட்டன. அக்காசுகளில் ஒருபுறம் விஜய என்று தெலுங்கில் பொறிக்கப்பட்டிருந்தது. மறு பக்கத்தில் திருக் கோகர்ணத்தில் கோயில் கொண்டிருக்கும் பிரகதாம்பாளின் திருஉருவம் இடம் பெற்றிருந்தது. காசில் குறிப்பிடப்பட் டுள்ள விஜய என்ற வார்த்தை இக்கொண்டாட்டத்தைத் துவங்கி வைத்த விஜயரகுநாதராயத் தொண்டைமானைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம்.

சதாசிவ பிரம்மேந்திரர் தொண்டைமானைச் சந்தித்த பிறகு கரூரை அடுத்துள்ள நெரூருக்குச் சென்று தங்கியதாக வும், அங்கேயே சமாதி அடைந்ததாகவும் தெரிகிறது. அவர் சமாதி அடைந்த இடத்தில் ஒரு கோயில் கட்டப்பட்டது. அக்கோயில் நிர்வாகத்திற்காகத் தொண்டைமானுல்

திருமயத்திலுள்ள இரு கிராமங்கள் தானமாக அளிக்கப் பட்டன.

விஜய ரகுநாதராயத் தொண்டைமானின் அறப்பணி யாக இரண்டு இடங்களில் சத்திரங்கள் கட்டப்பட்டன. அதில் ஒன்று திருக்கோகர்ணத்தில் கட்டப்பட்டதாகும். நவராத்திரி விழாவிற்காக வருகின்ற பிராமணர்களுக்கு இச்சத்திரத்தில் அன்னதானம் அளிக்கப்பட்டுவந்தது.

இவை தவிர, தவிட்டுப் பண்டாரம் என்பவரின் மடத் துக்கு திருமயம் தாலுக்காவிலுள்ள கீரனூர் என்னும் கிரா மத்தை விஜயரகுநாதர் தானமாகப் அளித்துள்ளார்.

விஜய ரகுநாதரின் ராணியான ரெங்கம்மா ஆயி என்பவரும் பிலா விடுதியில் ஒரு சத்திரத்தைக் கட்டினுர்.

விஜய ரகுநாதராயத் தொண்டைமானுக்கு ஆறு மனைவி யர் இருந்தனர். எனினும் மூன்ருவது மனைவியாகிய ரெங் கம்மா ஆயிக்கு மட்டுமே புத்திர பாக்கியமிருந்தது. அவருக் குப் பிறந்த இராய ரகுநாதத் தொண்டைமானே அரசுரி மைக்கு வாரிசாக இருந்தான்.

## 11. இராய ரகுநாதத் தொண்டைமான்

விஜய ரகுநாதராயத் தொண்டைமானை அடுத்து அவரது புதல்வரான இராய ரகுநாதத் தொண்டைமான் 1769-ல் புதுக்கோட்டை மன்னரானுர். அப்போது அவருக்கு வயது 31.

இராய ரகுநாதத் தொண்டைமானுக்கும் அப்போது அமைச்சர்களாக விளங்கியவர்கள் முத்துக்குமரப் பிள்ளை, வெங்கப்ப ஐயர் ஆகியோராகும்.

சதாசிவராயர், அண்ணுவையன், அண்ணயன், ஆதி நாராயணய்யன், பாபுராவ், இராமசாமி சேர்வைக்காரர் ஆகியோர் இராயரகுநாதத் தொண்டைமானின் சர்தார் களில் குறிப்பிடத்தக்கவர்களாவர்.

இராய ரகுநாதத் தொண்டைமான் பதவியேற்ற முதல் ஆண்டு அமைதியாகச் சென்றது. அதன்பின், பழைய கதை மேலும் தொடரலாயிற்று. ஆங்கிலேயர்களின் கோரிக்கை களுக்கெல்லாம் கட்டுப்பட்டுத் தனக்குச் சம்பந்தமற்ற போர் களுக்கெல்லாம் விஜய ரகுநாதராயத் தொண்டைமான் படை உதவி அளிப்பதிலேயே காலங் கடத்தினுரென்ருல், மழை விட்டும் தூவானே விடவில்லே என்ற ரீதியில் இராய ரகுநாதத் தொண்டைமானும் அதை தொடர்கதையாக்க வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளாக நேரிட்டது.

1771-ல் தஞ்சை அரசன் துல்ஸாஜி இராமநாதபுரத்தின் மீது படையெடுத்தான். அப்போது இராமநாதபுரத்தின் அரசரான முத்துராமலிங்கம் சிறு குழந்தையாக இருந்தார். அவரது தாயாரான ராணிமுத்துதிருநாச்சி ஆச்சியார் அரசு காவலராய் இருந்து காரியங்களே கவனித்து வந்தார். தஞ்சை படையெடுத்து வரவே திருநாச்சி ஆச்சியார் நவாபையும், புதுக்கோட்டை மன்னரையும் உதவிக்கு அழைத்தார். தொண்டைமான் சிந்தித்தார். தஞ்சை, இராமநாதபுரத் தைக் கைப்பற்றி விட்டால், அடுத்து தம்மீது பாயக்கூடும் எனத் தோன்றியது. எனவே இராமநாதபுரத்துக்கு உதவி யளிக்க ஆற்காடு நவாபையும் துணேவரக் கோரினுர். நவாப் படையேதும் அனுப்பவில்லே. எனவே தஞ்சைப் படை வெகு எளிதாக இராமநாதபுரம் பகுதிகளேக் கைப்பற்றி சென்றது. தஞ்சையின் வெற்றி ராணிமுத்து திருநாச்சி ஆச்சியாரை அதனுடன் சமாதான உடன்படிக்கை செய்து கொள்ள வைத்தது. அதன்படி வென்ற பகுதிகளும் ரொக்கமாக ஒரு லட்ச ரூபாயும், முப்பதாயிரம் பெறுமானமுள்ள நகைகளும். இரண்டு யானேகள், இரண்டு பெரிய பீரங்கிகள் ஆகியவை யும் தஞ்சைக்குக் கிடைத்தது.

இராமநாத புரத்திற்கு உதவி அளிக்க முன்வராமல் நவாப் முகம்மதலி மௌனம் சாதித்த சாகஸம் இப்போது தான் வெளிப்படத் தொடங்கியது. தஞ்சையைக் கபளீகரம் செய்யத் திட்டமிட்டான் அவன். தஞ்சை தன் அனுமதி யின்றி இராமநாதபுரம் மீது படையெடுத்து ஐதர் அலி தன் மீது படையெடுத்தபோது தனக்கு உதவாதிருந்தது, திறை பாக்கியைத் தராது சண்டித்தனம் செய்து வருவது ஆகிய குற்றச்சாட்டுகளை ஆங்கிலேயரின் கவனத்திற்குக் கொண்டு வந்து, தஞ்சையை தண்டிக்க தான் விரும்புவதாகவும் கூறி ஆங்கிலேயரின் உதவியைக் கோரினான். ஆங்கிலேயரும் சம்மதித்தனர். நவாபின் மகனான உல்தாத் உல் உம்ரா, ஜெனரல் ஜான்ஜோஸப் ஆகியோரின் தலைமையின்கீழ் திருச்சியிலிருந்து படை தஞ்சை நோக்கிப் புறப்பட்டது. ஆங்கிலேயர்களின் கோரிக்கைக்கு இணங்க புதுக்கோட்டை யும் இதில் பங்குகொள்ள வேண்டியதாயிற்று. 200 குதிரைகள், 4000 போர் வீரர்கள் அடங்கிய படை ஒன்றை சர்தார்கள் பாபுராவ், இராமசாமி சேர்வைக்காரர் ஆகியோர் தலைமையில் அனுப்பப்பட்டது.

அக்டோபர் 27-ம் தேதி தஞ்சை சரணடைந்தது. சமாதான ஒப்பந்தமும் செய்து கொண்டது. இதன் பலனாய் வல்லமும், கோவிலாடியும் நவாபிற்குக் கிடைத்தது. மேலும் படையெடுப்புச் செலவுக்காகவும் திறைபாக்கிக்குமாக 48 லட்சம் ரொக்கமாக கிடைத்தது. நவாபின் நண்பர் களோடு நண்பராகவும், அவரது விரோதிகளுக்கு விரோதி யாகவும் தஞ்சை இருந்து வரவேண்டுமென்ற ஒப்பந்தத் துக்கும் தஞ்சையைக் கட்டுப்படுத்தினான் நவாப். இதற்கு அறிகுறியாக இராமநாதபுரத்திடமிருந்து கைப்பற்றப்பட்ட பகுதிகளையும் பொருள்களையும் இராமநாதபுரத்திற்கு தஞ்சை திருப்பித்தர வேண்டியதாயிற்று.

இதன்பிறகு ருசிகண்ட பூனை போலானான் நவாப் முகம்மதலி. இராமநாதபுரத்தின் மீது கண் வைத்து பொருந்தாத பல காரணங்களைச் சுட்டிக்காட்டி, ஆங்கிலே யரையும் தன் வசப்படுத்திக்கொண்டு, அவர்களது படை

உதவியையும் பெற்று இராமநாதபுரம் மீது பாய்ந்தான். ஆங்கிலேயரின் கோரிக்கையின் மீது இந்தப் படையெடுப்பிலும் புதுக்கோட்டையும் துணைபோக வேண்டியதாயிற்று. 200 குதிரைகளையும், 5,000 போர் வீரர்கள் அடங்கிய படை ஒன்று சதாசிவராயர், அண்ணுவையன், அன்னையன், ஆதிநாராயணய்யன் ஆகியோரின் தலைமையின்கீழ் இராய ரகுநாதத் தொண்டைமான் அனுப்பி வைத்தார்.

இந்தத் திடீர்த் தாக்குதலை இராமநாதபுரம் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஒன்பது வயது அரசரான முத்துராம லிங்கம், அவரது சகோதரி, தாயார் ராணிமுத்து திரு ஆயிநாச்சி ஆகியோர் சிறைப்பிடிக்கப்பட்டு திருச்சிக்குக் கொண்டு செல்லப்பட்டனர்.

இராமநாதபுரத்தை வென்றதை அடுத்து நவாப் படை சிவகெங்கை மீது பாய்ந்தது. அப்பொழுது சிவகெங்கையை முத்துவடுகநாதர் ஆண்டு வந்தார். அவருடைய மனைவி வீரமங்கைவேலு நாச்சியாரும், அதிகாரிகளாய் விளங்கிய மருது சகோதரர்களும் நவாபின் படையெடுப்பை எதிர்ப்பதில் ஒன்றுபட்டனர். இப்படையெடுப்பில் ஆங்கிலேயரும் துணை சென்றனர். லெஃப்டினன்ட் கர்னல் போன்சூர் தலைமை வகித்தான். இந்த படையெடுப்பிற்கு புதுக்கோட்டை படைஏதும் அனுப்பாதிருந்தது. இது நவாப்பிற்கு ஆச்சரியத்தையும் அதிர்ச்சியையும் தந்தது. தனது உள்ளக் குமுறலைக்கொட்டி படையொன்றை சிவகெங்கைக்கு அனுப்பி உதவுமாறு தொண்டைமானுக்கு நவாப் கடிதம் எழுதினான். ஆங்கிலேயரும் தூண்டவே தவிர்க்க முடியாத நிலையில் 300 குதிரைகள், 5000 போர் வீரர்கள் அடங்கிய படை ஒன்றை சர்தார் கிருஷ்ணனின் தலைமையில் அனுப்பி வைத்தார் இராயரகுநாதத் தொண்டைமான்.

இப்போரில் சிவகெங்கை மன்னர் வீர மரணம் அடைந்தார். அவரது மனைவி வேலுநாச்சியாரும், மருது சகோதரர்களும் தப்பியதோடு திண்டுக்கல்லுக்குச் சென்றனர். திண்டுக்கல் கோட்டையில் அவர்கள் மைசூரின் விருந்தினராகத் தங்கிவிட்டனர்.

இந்த வெற்றிக்குப் பிறகும் முகம்மதலியின் பேராசை தீரவில்லே. தஞ்சையை முற்றும் கைப்பற்றிக் கொள்ள முடிவு செய்து அதற்கு ஏதேதோ பொய்யான காரணங்களே ஆங்கிலேயருக்குச் சொல்லி, இதற்கு அவர்கள் உதவியளிப் பார்களேயானுல் பத்து லட்சம் பகோடாக்கள் வெகுமதி அளிப்பதாகவும் ஆசை காட்டினுன். பெருத்த ஆலோசனேக்குப் பிறகு ஆங்கிலேயர்கள் இதற்கு சம்மதித்தனர். இதன்படி 1773 ஜூலேயில் திருச்சியில் படைகள் கூடின. வழக்கம்போல் புதுக்கோட்டையின் படை அனுப்ப கோரப் பட்டது. ஏற்கெனவே தஞ்சை தீராத பகையாளியாக இருந்த தாலும், அது புதுக்கோட்டையின் மீது படையெடுக்கிற வெறியில் இன்னமும் இருந்து கொண்டிருந்ததாலும் தஞ்சை மன்னனின் கர்வத்தை அடியோடு அடக்க இராயரகுநாதத் தொண்டைமான் பெரும்படை ஒன்றை அனுப்பி வைத்தார். இராயரகுநாதத் தொண்டைமானின் சிற்றப்பாவான இராஜகோபால் தொண்டைமான், சர்தார் சதாசிவராயர் ஆகியோரின் தலேமையின்கீழ் சென்ற அப்படையில் 400 குதிரைகளும் 7000 போர் வீரர்களும் இருந்தனர்.

இப்படையெடுப்பில் தஞ்சைக் கோட்டை பெரும்சேதம் ஏதுமின்றி செப்டம்பர் 17-ம் தேதியன்று பிடிபட்டது. தஞ்சை அரசரு , அவரது குடும்பமும், தபளதி மானேஜியும், மற்றும் முக்கியமானவர்களும் கைது செய்யப்பட்டனர். மேலும் ஒரு கோடியே ஐந்து லட்சம் பெறுமானமுள்ள நகைகளும், விலே மதிப்புள்ள பொருட்களும் நவாபினுல் கைப்பற்றப்பட்டன.

தஞ்சை அரசர் துல்ஸாஜி, தளபதி மானேஜி மற்றும் பல நகரப்பிரமுகர்களும் சிறை பிடிக்கப்பட்டனர். துல்ஸாஜியின் மன்னர் பதவி பறிக்கப்பட்டது. நாடும் நவாப் வசமாகியது.

1770 லிருந்து இதுவரை பெற்ற படை உதவிக்காக புதுக்கோட்டை வீரர்களுக்கு சம்பளத்தொகையைக் கொடுப்பது நவாபின் கடனுயிருந்தது. இக்கணக்கைத் தீர்ப்பது நவாபிற்கு சிரமமாக இருந்ததால் இதற்கு ஈடாக பட்டுக் கோட்டை தாலுகாவின் ஒரு பகுதியை தொண்டைமானுக்கு

அளித்தார். இப்பகுதியில் 142 கிராமங்களும் இரண்டு சுங்க வரிக் கூடங்களும் உள்ளடங்கி இருந்தன. இவை ஆண்டு ஒன்றுக்கு 53,000 சக்கரம் வருவாய் தரக்கூடியவை. 1770 முதல்1773வரையிலான போர்வீரர்கள் சம்பளத்தொகையை தொண்டைமானே கொடுத்துக்கொள்ள வேண்டுமென்ற நிபந்தனையுடன் நவாபினுல் இப்பகுதி தரப்பட்டது. நவாபின் மற்றொரு நிபந்தனைக்கும் தொண்டைமான்கட்டுப்பட வேண்டியதாயிருந்தது. இனி ஏற்படும் போர்களில் நவாப் கோருகிறபோது போர்த்தொகை ஏதும் பெருமலே நவாப் விரும்பும் படைகளை. விரும்பும் இடங்களுக்கு இராயரகுநாதத் தொண்டைமான் அனுப்பிவைக்கவேண்டும் என்பதே அந்த மற்றோர் நிபந்தனையாகும்.

1773ல் புதுக்கோட்டைக்குத் தரப்பட்ட இப்பகுதியை 1776வரையில் தான் அனுபவிக்க முடிந்தது. 1776ல் கும்பனியின் கவர்னர் பிகாட்டால் தஞ்சையின் அரசராக துல்ஸாஜி மீண்டும் அமர்த்தப்பட்டபோது தஞ்சைக்கு இப்பகுதியை திரும்ப அளிக்க நேர்ந்தது.

நாகப்பட்டினத்திலிருந்த டச்சுக்காரர்கள் பதினறு லட்ச ரூபாய் கொடுத்து ஏற்கெனவே தஞ்சை அரசிடமிருந்து நாகூர் பகுதியைப் பெற்றிருந்தனர். டச்சுக்காரர்களின் இச்செயல் செல்லத்தகாதது என்றும், தமதுஅனுமதியின்றி அபதத் தறிசை அரசு விற்றது தவறுனதென்றும் கூறி ஆங்கிலேயரின் உதவியை நாடினுர் நவாப்.

நவாபின் படைகளும் ஆங்கிலேயர் படையும் இணைந்து 1773-ல் நாகூர், நாகப்பட்டினம் நோக்கிச் சென்றது. இப் படையெடுப்பிற்கும் புதுக்கோட்டை படை உதவி தர வேண்டியிருந்தது. 200 குதிரைகள் 4,000 போர் வீரர்கள் அடங்கிய படையொன்று சதாசிவராயர், அண்ணவையன், ஆதிநாராயணய்யன் ஆகிய சர்தார்களின் பொறுப்பில் அனுப்பப்பட்டது.

சண்டையில் ஈடுபட விரும்பாத டச்சுக்காரர்கள் த சை அரசருக்கு அளித்திருந்த தொகையை நவாப் இடமிருந்து பெற்றுக்கொண்டு நாகூர் பகுதியைக் கொடுத்துவிட்டனர்.

துஸ்ஸாஜி தஞ்சை அரசராக மீண்டும் ஆக்கப்பட்ட பிறகு தஞ்சைக்கும் புதுக்கோட்டைக்கும் இடையே கீழா நிலைப்பகுதி தொடர்பாக மீண்டும் எல்லைத் தகராறு காரண மாக சில்லரைச் சச்சரவுகள் ஏற்படலாயிற்று. இந்தத் தகராறு 1778 வரை நீடித்தது. தஞ்சை மன்னர் ஆங்கிலேய சென்னை கவர்னரிடம் 25 ஜனவரி 1778-ல் ஒரு புகார் மனு கொடுத்தார். அதில் நவாபின் தூண்டுதலின் பேரில் புதுக் கோட்டை மன்னர் தஞ்சை மீது தாக்குதல் நடத்திவருவ தாகவும், ஆங்கிலேயரால் ஊன்றப்பட்ட மரமாகிய தன்னைக் காப்பது அவர்களது கடமையென்றும் குறிப்பிட்டிருந்தார். அதற்கு பதில் தருகின்ற முறையில் தொண்டைமான் நவா புக்கு ஒரு புகார் கொடுத்தார். இரண்டாவது தஞ்சைப் போரின் போது நவாபிற்கு உதவியளித்ததன் பலனாக நவாப் பால் அளிக்கப்பட்ட தஞ்சைப் பகுதிகளைத் திரும்பப் பெறு கிற நோக்கோடு தஞ்சை தம்முடன் சச்சரவிட்டு வருவதாக அவர் அதில் குற்றம் சாட்டியிருந்தார்.

இதன் பிரதிபலிப்பாக இந்தத் தகராறு 1778 வாக்கில் சற்றே ஓய்ந்திருந்தது.

**ஐதர் அலியின் இரண்டாவது**
**கர்நாடகப் போர் (1780)**

ஆங்கிலேயர்களுடன் கடும் பகைமை பூண்டிருந்த ஐதர் அலி, அவர்களை இந்தியாவிலிருந்து விரட்டிவிடும் நோக்கத் துடன் மராட்டியர்கள், பிரெஞ்சுக்காரர்கள் ஆகியவர் களுடன் சேர்ந்து ஒரு பெரும் கூட்டினை 1780-ல் ஏற்படுத் தினர். மராட்டியர்கள் பம்பாய், கல்கத்தா ஆகிய பகுதி களைத் தாக்குவதென்றும், ஐதர் சென்னையைத் தாக்குவ தென்றும் தீர்மானிக்கப்பட்டது.

இதன்படி 1778 ஜுலை மாத வாக்கில் பேரிடியைப் போன்று ஐதரின் படை கர்நாடகப் பகுதியைத் துளைத்துக் கொண்டு வந்தது. பல கோட்டைகள் பிடிபட்டன. உடை யார் பாளையம், அரியலூர் பாளையக்காரர்கள் சிவகங்கை வேலு நாச்சியார் போன்ற தன்மான வீரர்களுக்கு ஐதர் படை பலம் அளித்து அவரவர் பகுதிகளுக்கு அனுப்பிவைத்

தான். நவாபின் சூழ்ச்சியையும் வெள்ளையரின் ஆக்கிரமிப்பையும் வெகுவாக வெறுத்த அப்பகுதி மக்கள் இந்த வீரர்களை உற்சாகத்துடன் வரவேற்றனர். திருச்சியில் காவலில் வைக்கப்பட்டிருக்கும் தங்கள் சேதுபதியை விடுவித்து பதவியில் அமர்த்தும்படி இராமநாதபுரத்து மக்களும் கிளர்ந்து எழுந்தனர். திருநெல்வேலிப் பகுதி பாளையக்காரர்களும் கிளர்ந்தனர். இப்புரட்சி வீரர்களில் சிவகிரி, நத்தம் ஆகியவற்றின் பாளையக்காரர்கள் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

இந்தக் காலக்கட்டத்தில் தஞ்சை மைசூர் பக்கம் சேர்ந்து விடுமோ என்ற அச்சம் உருவாகியது.

ஐதரும் திப்புசுல்தானும் புதுக்கோட்டையைத் தம் பக்கம் சேர்த்துக் கொள்ளும் பெரும் முயற்சிகளை மேற்கொண்டனர்.

ஆனால் பலனளிக்க வில்லை.

புதுக்கோட்டை ஒன்றே ஆங்கிலேயருக்குப் பெரும் ஆதரவாக உறுதியுடன் இருந்து விட்டது.

1781 மே மாத வாக்கில் ஐதர் கொள்ளிடத்தை கடந்து தஞ்சைக்குப் படை நடத்தினான். ஜூலை 23-ம் தேதி வாக்கில் தஞ்சைக் கோட்டையைத் தவிர ஏனைய பகுதிகள் முழுமையும் ஐதரின் வசமாகியது.

### புதுக்கோட்டை மீது பாய்ச்சல்

தஞ்சையைப் பிடித்த ஐதர் படை புதுக்கோட்டையை நோக்கி வந்தது. அப்படை இரண்டுபிரிவாகப் பிரிந்து இருமுனைத் தாக்குதலை மேற்கொண்டது. ஒரு பிரிவு தஞ்சையிலிருந்து ஆதனக்கோட்டை வழியாக வந்தது. சர்தார் மன்னவேளார் தலைமையில் இயங்கிய புதுக்கோட்டை படை சோத்துப் பாழைக்கு அருகில் ஐதர் படையைத் தோற்கடித்தது. திருச்சியிலிருந்து வந்த மற்றொரு பிரிவுப் படை மலம் பட்டியில் தொண்டைமானால் சின்னாபின்னப் படுத்தப்பட்டது.

தொண்டைமான் அடைந்த வெற்றி ஆங்கிலேயரால் பெரிதும் பாராட்டப்பட்டது.

இதற்குப் பிறகு ஐதரின் படை திருச்சியை முற்றுகை யிட்டது. திருச்சிக் கோட்டையைப் பிடிக்க ஐதர் படை முயற்சி செய்து கொண்டிருந்த நேரத்தில், சையத் சாகிப் என்னும் படைத் தலைவனின் கீழ்செயல்பட்ட ஐதரின் சேனையை சாக்கோட்டை திருக்காட்டுப்பள்ளி ஆகிய இடங் களில் தொண்டைமானின் படைகள் தோற்கடித்தன.

**கீழாநிலைக் கோட்டையைப் பிடித்தது**

தொண்டைமானின் செயலாற்றல் மேற்கண்ட வெற்றி களோடு நிற்கவில்லை. சர் அயர்கூட், கர்னல் பிரைத் வெயிட் கர்னல் உட், நவாபின் திருச்சி பிரதிநிதி ஆகியோரின் சம்ம தம் பெற்று தஞ்சையில் ஐதர் பிடித்திருந்த பகுதிகளை மீட்ப தற்கு முற்பட்டார். 1781-ல் சிறந்த வலிமை பொருந்திய படையொன்று சர்தார்கள் இராமசாமி சேர்வைக்காரர் சுப்பிரமணி முதலியார் ஆகியோரின் தலைமையின்கீழ் தஞ்சைப் பகுதிக்கு அனுப்பப்பட்டது. மற்றொருபடை நலம் கொண்ட ஆவுடையப்ப சேர்வைக்காரர் தலைமையில் ஐதரோடு சேர்ந்திருந்த சேதுபதியின் உறவினரான மாப்பிள்ளைத்தேவன் என்பவரை எதிர்க்க அனுப்பப்பட்டது. இரு படைகளுமே இராய ரகுநாதத் தொண்டைமானுக்கு வெற்றியைத் தேடித்தந்தன. மாப்பிள்ளைத் தேவன் சிறைப் பிடிக்கப்பட்டான் பட்டுக்கோட்டை, அறந்தாங்கி, கீழா நிலைக்கோட்டைகள் கைப்பற்றப்பட்டன.

இவற்றை மீட்பதற்கான படைச்செலவை திருப்பித் தருகிற வரை இவைகளை தம்கீழ் வைத்துக் கொள்ளுமாறு ஆங்கிலேயர்கள் தொண்டைமானைக் கேட்டுக் கொண்டனர். அவர் ஆற்றிய சேவையை பாராட்டுகிற வகையில் ஆங்கிலேயர்கள் இரண்டு துப்பாக்கிகள், 300வெடி குண்டுகள் மற்றும் தேவையான இதர வெடி மருந்துகள், தொண்டைமானுக்கு அளித்தனர்.

**தஞ்சையுடன் சச்சரவு**

1781 வாக்கில் தஞ்சையில் அமைதி நிலவியது. இந்நிலையில் இரகுநாதராயத் தொண்டைமான் கைப்பற்றிய பட்டுக்கோட்டை, அறந்தாங்கி, கீழாநிலைக் கோட்டைகளை எடுத்துக் கொள்ள தஞ்சை மன்னன் தனது அமீல்தாரர்களை அனுப்பியிருந்தார். ஆனால் தொண்டைமான் அவர்களை எளிதாக விரட்டிவிட்டார். எனவே இது குறித்து தஞ்சை மன்னன் ஆங்கிலக் கும்பெனியாரிடம் முறையிட்டார். ஆனால் போர்நிலை சரிவர முடிவுக்கு வராதிருந்ததால் அதைப்பற்றி ஆங்கிலேயர்கள் அதிகக் கவனம் செலுத்த வில்லை.

**திப்புவின் படையெடுப்பு**

1782 பிப்ரவரி மாதத்தில் திப்புசுல்தானின் படை திடீரென்று தஞ்சைப் பகுதியில் நுழைந்தது. வலிமைமிக்க ஒரு பிரெஞ்சுப் படையையும், மார்ச் மாத வாக்கில் அப் படையுடன் சேர்ந்து கொண்டது. இவை நாகப்பட்டினம், மன்னார்குடி ஆகிய பகுதிகளைத் தாக்கியது. இப்படையெடுப் பைத் தாக்குப் பிடிப்பதற்காக இங்குள்ள பாளையக்காரர் களையும், ஜமீன்தார்களையும் ஆங்கிலேயர்கள் சரிக்கட்டும் முயற்சியில் இறங்கினர். இதன் தொடர்பாக உடையார் பாளையம், அரியலூர் ஆகியவற்றின் பாளையக்காரர்களை மதிப்புடன் நடத்துவதாக உறுதியளிக்க முற்பட்டனர்.

இந்த சூழ்நிலையில் தொண்டைமானைத் தன் பக்கம் இழுத்துக் கொள்ள திப்பு பெரு முயற்சி எடுத்துக் கொண் டான். ஆங்கிலேயருக்கு உதவுவதை நிறுத்தித் தம்முடன் சேர்ந்துகொண்டால் தஞ்சை, இராமநாதபுரம் அல்லது அரவக்குறிச்சி ஆகிய பகுதிகளை தொண்டைமானின் ஆளு கைக்குத் தருவதாகவும் ஆசை வார்த்தை கூறினான். இதற் கெல்லாம் தொண்டைமான் மசியவில்லை.

தொண்டைமானின் உறுதி ஆங்கிலேயருக்குப் பெருத்த நிம்மதியையும் மகிழ்ச்சியையும் அளித்தது.

### ஸ்ரீரங்கபட்டணம் படையெடுப்பு

1783 மார்ச் வாக்கில் மைசூர்மீது தாக்குதல் நடத்துவது என்று ஆங்கிலேயக் கும்பெனி தீர்மானித்தது. அச்சமயம் 1782 டிசம்பர் 7-ம் தேதி காலமடைந்த ஐதர் அலியின் வாரிசாக அவனது மகன் திப்புசுல்தான் அரசுப் பொறுப்பேற்றிருந்தான். பம்பாயிலிருந்து ஒரு படை மங்களூரைத் தாக்குவதென்றும், தெற்கிலிருந்து மற்ருெரு படை கரூர், திண்டுக்கல், கோயம்புத்தூர் பகுதிகளைத் தாக்குவதென்றும் கும்பெனி முடிவு செய்தது. இதன்படி முதலில் கர்னல் லாங் என்பவரின் தலைமையில் திண்டுக்கல், கரூர், கோயம்புத்தூர் பகுதிகளைப் பிடிக்க ஒரு படை அனுப்பப்பட்டது. பின்னர் இந்தத் தெற்குப் பகுதிப் படைக்கு கர்னல் புல்லர்,_ன் தளபதியாக நியமிக்கப்பட்டார். இப்படையெடுப்பில் ஆங்கிலேயருக்கு உதவியாக புதுக்கோட்டை படை அனுப்பத் தவறவில்லை. சர்தார்கள் உமனேயா, வக்கீல் கோட்டையாச்சாரி என்பவர்களின் தலைமையின் கீழ் இராய ரகுநாதத் தொண்டைமானல் படை அனுப்பப்பட்டது. கரூர், அரவக்குறிச்சி, திண்டுக்கல், பெரிய தாராபுரம், பாலக்காடு, கோயம்புத்தூர் ஆகிய இடங்களையெல்லாம் பிடித்து முடித்து ஸ்ரீரங்கபட்டணம் படையெடுப்பு நிறைவேற்றப்படாமல் திரும்ப நேர்ந்தது.

இப்படையெடுப்பில் புதுக்கோட்டைப் படை ஆற்றிய தீரத்தை மெச்சுகின்ற வகையில் கர்னல் புல்லர்டன், புதுக்கோட்டை படை வீரர்களை வெகுவாகப் பாராட்டி நன்றி தெரிவித்து பாராட்டுக் கடிதம் அனுப்பியதுடன், இராய ரகுநாதத் தொண்டைமானுக்கு இரண்டு துப்பாக்கிகளையும், ஒரு ஜதை 'ஸ்டான்டர்டு'களையும் அனுப்பி வைத்தார்.

### தீர்வு கண்ட தஞ்சைத் தகராறு

1781 முதல் 1785 வரை தஞ்சையுடன் நடந்த எல்லைத் தகராறுகள் தொடர்கதையாகிக் கொண்டிருந்தது. திப்பு சுல்தானல் கைப்பற்றப்பட்டிருந்த அறந்தாங்கி, பட்டுக்கோட்டை, கீழாநிலைக் கோட்டைகளை தொண்டைமான்

தீவிரமாகப் போராடி மீட்டபோது ஆங்கிலேயர்கள் அவற்றைப் புதுக்கோட்டை வசமே விட்டிருந்தார்கள். அவற்றை தொண்டைமானிடமிருந்து வாங்கித் தருமாறு தஞ்சை மன்னன் ஆங்கிலேயரிடம் முறையிட்டுக் கொண்டான்.

மேலும் ஏற்கெனவே பெங்களூரைத் தொண்டைமானிடமிருந்து தஞ்சைத் தளபதியான மானேஜி பெற்றுக் கொண்டு அதற்கு ஈடாக அவரால் கொடுக்கப்பட்ட நீவல்லி எரியாந்தி, ஸ்குருவலூர் ஆகிய கிராமங்களும் மேற்படியாரால் தொண்டைமானின் உறவினரான திருமலைத் தொண்டைமானுக்கு வைசங்கி நாட்டுப் பகுதியில் அளித்த உலகம் காத்தான்பட்டி, கிள்ளனூர் ஆகிய பகுதிகளும் தமக்குத்தான் சேருமென்றும் தம் அனுமதியின்றி மானேஜியால் அவை கொடுக்கப்பட்டதால் செல்லுபடியாகாது என்றும் தஞ்சை மன்னன் வாதாடினான்.

இருவரும் ஆங்கிலேயரின் மத்தியஸ்தத்திற்கு அணுகியதால் 1785ல் இதற்கு ஒரு முடிவு கண்டனர்.

கீழாநிலைத் தகரூரைத் தவிர பிற தகரூர்களும் தீர்த்து வைக்கப்பட்டன. அதன்படி நீவல்லி, எரியாந்தி, ஸ்குருவலூர் ஆகிய கிராமங்கள் தஞசை வசம் ஒப்படைக்கப்பட்டன. பெருங்களூர் புதுக்கோட்டைக்கு அளிக்கப்பட்டது, உலகம் காத்தான்பட்டியும், கிள்ளனூரும் புதுக்கோட்டையே வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டது.

**சிவகங்கையின் அழிவு**

திண்டுக்கல்லிலிருந்து சிவகங்கைக்குத் திரும்பிவந்து ஆட்சிப் பொறுப்பு ஏற்ற வேலு நாச்சியாரின் தலைமையில் மருது சகோதரர்களுக்கு ஆட்சி நடத்தப் பூரணச் சுதந்திரம் கிடைத்தது. சின்ன மருதுவின் ஆட்சித் திறமையால் சிவகங்கை வலிமையிலும் வளமையிலும் நாளுக்குநாள் செழித்து வளர்ந்தது.

சிவகங்கையின் வளர்ச்சி ஆற்காடு நவாபிற்கு மன எரிச்சலையும், அச்சத்தையும் கொடுத்தது. எனவே அவன் சிவகங்கைக்கு எதிராகப் போர் தொடுக்க ஆங்கிலேயரைத்

தூண்டிக் கொண்டிருந்தான். சிவகங்கையின் வளர்ச்சி ஆங்கிலேயருக்கும் அச்சம் தந்ததால் சிவகங்கையின் வலிமையைக் குறைப்பதற்கு அதன்மீது படையெடுக்கத் தீர்மானித்தனர். இது நவாபிற்கும் தெரிவிக்கப்பட்டது. கர்னல் ஸ்டுவர்டின் தலைமையில் படையொன்றை சிவகங்கையை அழிக்க அனுப்பப்பட்டது. கர்னல் ஸ்டுவர்டு 21—1—1789ல் தொண்டைமானுக்கு ஒரு கடிதம் எழுதினர். காப்டன் நாக்ஸ் (Knox)என்பவரின் தலைமையில் வருகிற படைகளுக்கு தேவையான உதவிகளை அளிக்குமாறு அதில் தொண்டைமானைக் கோரியிருந்தனர்.

இதற்கிணங்க இராயரகுநாதத் தொண்டைமான் அப்படைக்கு வேண்டிய பொருட்களைத் திரட்டித் தருவதற்கு வக்கீல் கோட்டாச்சாரியிடம் பொறுப்பை ஒப்படைத்தார். தேவைப்படும்போது பயன்படுத்துவதற்காகப் படையொன்றும் திருமயத்தில் வைக்கப்பட்டது. யு. எம். அண்ணு ஐயனை திருமயத்தில் தாசில்தாரராக இருந்து படை வீரர்களுக்குப் போதிய போர் பயிற்சி அளித்து ஆங்கிலேயருக்கு உதவ திருப்பத்தூருக்கு அனுப்பி வைத்தார்கள்.

1789ல் கொல்லங்குடி பிடிபட்டது. இப்படையினரால் ஜூன் 2ம் தேதி காளையார் கோயில் பிடிக்கப்பட்டது.

தப்பிய மருது சகோதரர்கள் காட்டுக்குள் சென்று மறைந்து கொண்டனர்.

பிறகு—வெகு விரைவில் மருது சகோதரர்கள் மறைவிலிருந்து வெளிப்பட்டு சிவகங்கையை மீண்டும் கைப்பற்றிக் கொண்டனர்.

இச்சமயத்தில்தான் 30—12—1789ல் இராய ரகுநாதத் தொண்டைமான் இயற்கை எய்தினர்.

மாவீரன் ஐதர் அலியும், திப்பு சுல்தானும் ஆங்கிலேயரை இந்தியாவை விட்டு ஒரேயடியாய் விரட்டி விடுகிற நோக்கத்தில் தென்னகத்திற்குப் படை எடுத்து வந்தபோது இராயரகுநாதத் தொண்டைமானும் அவர்களது கோரிக்கைக்கு இணங்கி அவர்களுடன்ஒன்றுபட்டிருந்தால் நாட்டின் சரித்திரமே மாறியிருந்திருக்குமே என்றொரு கேள்வி எழக்

கூடும். அப்போதைய ஆட்சி நிலையை ஆராய்ந்து பார்க்கிற போது ஆங்கிலேயர்கள் ஒட்டப்பட்டிருந்தாலும் பிரெஞ்சுக் காரர்களின் ஆதிக்கம்தான் மேலோங்கியிருக்கும். ஐதரின் பெருந்துணையாக பிரெஞ்சுக்காரர்களே விளங்கி வந்திருக் கின்றனர். எனவே, எரிகிற கொள்ளியில் எந்தக் கொள்ளி நல்லது என்பதை இரகுநாதராயத் தொண்டைமான் ஆராய்ந்திருக்கக்கூடும். தெரியாத மோகினியைவிட தெரிந்த பிசாசே தேவலாம் என்றும் தோன்றியிருக்கலாமில்லையா?

புதுக்கோட்டைக்குத் தகுந்த நிலையான பாதுகாப்பைத் தேடிக் கொள்ளவே ஆங்கிலேயருக்குப் பெருந்துணையாய் இராய ரகுநாதத் தொண்டைமானும் இருந்தார் என்பதா கத்தான் நாம் எண்ண வேண்டும்.

இராய ரகுநாதத் தொண்டைமானின் ஆட்சிக் காலத் தில் நான்கு சத்திரங்கள் கட்டப் பெற்றதாக அறிகிறோம்.

அவற்றுள் ஒன்று 1779ல் தொண்டைமானின் சிறிய தாயாரான நல்லகாத்தாயி ஆயி அவர்களால் வாராப்பூர் அருகில் ஆயில்பட்டியில் கட்டப்பட்டதாகும்.

1783ல் தொண்டைமானின் மனைவி கல்லாக்கோட்டை அம்மணி ஆயி ஒணுங்குடியில் ஒரு சத்திரம் கட்டினர்.

1788ல் தொண்டைமானின் சிற்றப்பாவான திருமலைத் தொண்டைமான் சின்னையா சத்திரம் என்னும் கிராமத்தில் ஒரு சத்திரம் கட்டி வைத்தார்.

அதே ஆண்டு லக்ஷ்மணப்பட்டி மசூதி மௌல்வி அகமத் சாகிப் என்பவருக்கு சில நிலங்களைத் தொண்டைமான் மானியமாக அளித்துள்ளார். லக்ஷ்மணப்பட்டி கல்வெட்டு ஒன்றின் மூலம் இச்செய்தி நமக்குத் தெரிகிறது.

இராய ரகுநாதத் தொண்டைமானுக்கு பதினேரு மனைவியர் இருந்தனர். அவர்களில் இருவர் பெயர்கள் மட்டுமே அறியக் கிடைக்கிறது. ஒருவர் பெயர் கல்லாக் கோட்டை அம்மணி ஆயி, மற்றெருவர் பெயர் முத்தழகம் மாள். இராஜ ரகுநாதத் தொண்டைமானுக்கு ஆண் மகவு ஏதுமில்லை. ஒரே ஒரு பெண் அவரது வாரிசாக இருந்தார். பெருந்தேவி அம்மாள் ஆயி என்பது அவரது பெயர்.

## 12. விஜயரகுநாதத் தொண்டைமான்

இராயரகுநாதத் தொண்டைமான் இறந்த போது அவருக்கு வாரிசாக ஆண் மகன் ஒருவரும் இல்லை. எனவே அடுத்த வாரிசாக அவரது சிறப்பாவான திருமலைராயத் தொண்டைமானும், மற்றொரு சிறப்பா வழியில் தோன்றிய ராஜகோபாலத் தொண்டைமானும் மட்டுமே இருந்தனர். இவர்களுள் திருமலைராயத் தொண்டைமான் பட்டத்து ராணி மரபில் வந்தவர். எனவே அவருக்கே வாரிசு உரிமை அதிகமாக இருந்தது.

இராய ரகுநாதத் தொண்டைமான் மறைந்தபோது திருமலைராயத் தொண்டைமான் நோய்வாய்ப்பட்டிருந்தார். எனவே தன் உடல் நலமின்மை காரணமாக தமது மூத்த மகனை விஜய ரகுநாதத் தொண்டைமானை பட்டம் ஏற்கும்படி கூறினர்.

அக்கால வழக்கப்படி அரசுக்கட்டிலேறும் புதிய மன்னனின் பதவியேற்பு, மேலாண்மை வகிக்கும் நவாபினல் அங்கீகரிக்கப்பட வேண்டும். இவ்வாறு சிற்றரசர்கள் பேரரசின் அங்கீகாரம் பெறுகிறபோது காணிக்கை செலுத்தியாக வேண்டும். முஸ்லீம் அரசு வழக்கில் இதை 'நஸார்' என்று குறிப்பிடப்படும். விஜயரகுநாதத் தொண்டைமானும், இராயரகுநாதத் தொண்டைமானும் இந்த மாமூல்படி ஒரு லட்ச ரூபாய் செலுத்தியே பட்டம் சூட்டிக் கொண்டனர். எனவே தாமும் ஒரு லட்ச ரூபாய் செலுத்த முன் வந்தார் புதிய மன்னர். ஆனல் நவாப் ஏற்கவில்லை. ஒரு லட்சம் பகோடாக்கள் கேட்டார். பிறகு 75,000 க்கு இறங்கி வந்து இந்த 75,000 போர்ட்ட நோவா பகோடாக்களை இரு தவணைகளில் இரண்டாண்டு காலத்திற்குள் பெற ஒப்புக்கொண்

டார். இதன்படி 17-3-1790 விஜயரகுநாதத் தொண்டைமானுக்கு தம் மகனுன உசேன் உல்க் மூலம் அரசுரிமைப் பத்திரத்தை அனுப்பிவைத்தார். அதோடு ஒரு குதிரை 'கில்லாத்' ஆகியவை நவாபினுல் பரிசாக அனுப்பி வைக்கப் பட்டன.

விஜயரகுநாதத் தொண்டைமான் பதவி ஏற்கையில் அவருக்கு வயது முப்பது.

இம்மன்னர் பதிவியேற்ற ஒரு வருடத்திற்குள்ளாக ஆங்கிலேயர் திப்பு சுல்தான்மீது படையெடுக்கும் சூழ்நிலை உருவாகியது. 1790 மே மாத வாக்கில் திருவாங்கூர் எல்லைப் பகுதியிலுள்ள சில இடங்களை திப்பு சுல்தான் கைப்பற்றியதை சாக்காக வைத்து ஆங்கிலேயர்கள் அவன்மீது போர் தொடுத்தனர். இப்படையெடுப்பிற்கு தஞ்சை ரெஸிடெண்டான ஜெனரல் மெடோஸ் (Medows) முடிந்த அளவுக்கு படையுடன் உணவுப் பொருள்களும் அனுப்பி உதவுமாறு 1790 ஜூலையில் தொண்டைமானைக் கேட்டுக் கொண்டார்.

இதற்கிணங்க மகாலிங்க மூதலியார் தலைமையில் 1,500 வீரர்களை விஜயரகுநாதத் தொண்டைமான் அனுப்பி வைத்தார். இப்படை 1790 நவம்பரில் ஸ்ரீரங்கம் வரை படையெடுத்து வந்த திப்புவை எதிர்ப்பதற்கு பெருமளவில் உதவியாக இருந்தது.

இந்தச் சமயத்தில் ஆற்காடு நவாபான முகம்மதலி இயற்கை எய்தினுர். அதை அடுத்து அவரது புதல்வனுன உம்தாத்-உல்-உம்ரா ஆற்காடு நவாபாகப் பொறுப்பேற்ருன்.

முகம்மதலி தான் இறப்பதற்கு முன்பாக புதுக்கோட்டை மன்னருக்கு அளிக்கப்பட வேண்டிய நன்றிக் கடனை நல்ல முறையில் செய்திருந்தான். பல்வேறு போர்களில் உதவிகளை அளித்ததற்கு கைம்மாருக விஜயரகுநாதத் தொண்டைமானுக்கு "ராஜா பகதூர்" என்னும் பட்டத்தை அளித்திருந்தான். இந்தப் பட்டம் மகாராஜாவுக்கு அடுத்த நிலையிலுள்ள அரசர்களைக் குறிப்பதாகும்.

இப்பட்டம் பெற்ற பிறகே புதுக்கோட்டை தொண்டைமான்களின் கௌரவம் ராஜ அந்தஸ்துக்கு உயர்ந்தது.

நவாப் முகம்மதலி வழங்கிய இப்பட்டத்தின் அதிகார பூர்வமான சன்னத், அவர் இறந்த பிறகு 17 அக்டோபர் 1796ல்தான் உம்தாத்-உல்-உம்ராவால் தொண்டைமானுக்கு அனுப்பப்பட்டது. புதுக்கோட்டை மன்னர் 1,500 குதிரைகள் வைத்துக் கொள்ளத்தக்க 'மான் சப்தார்' ஆக நியமிக்கப்பட்டார். அவருக்கு ஒரு தலைப்பாகை, அதில் அணிந்து கொள்ளத்தக்க 'ஜாகர்' என்னும் நகை, கொடி, முரசு, கில்லட், யானை ஆகியவை புதிய நவாபினுல் தொண்டைமானுக்கு பரிசாக அனுப்பி வைக்கப்பட்டன.

நவாப் அளித்த இந்தக் கௌரவத்திற்கு நன்றி தெரிவிக்கும் வகையில் 25,000 பகோடாக்கள் 'நஸாராக' ராஜா விஜய ரகுநாதத் தொண்டைமாஞல் புதிய நவாபுக்கு அளிக்கப்பட்டது.

## 13. உடையார்பாளையம், அரியலூர், துறையூர் கலகங்கள்

1790 அக்டோபர் 15ம் தேதியிட்ட கடிதத்தில் ஆற்காடு நவாப் உம்தாத்-உல்-உம்ரா, அரியலூர் உடையார்பாளையம் ஆகியவற்றின் பாளையக்காரர்கள் திறைப் பணம் செலுத்தாது கலகம் செய்து கொண்டிருக்கிறார்களென்றும் அவர்களை அடக்கியாக வேண்டுமென்றும் தெரியப்படுத்தியிருந்தான். நவாப் படையினரால் பிடித்துச் சிறை வைக்கப்பட்டிருந்த இப்பாளையக்காரர்களை உடையார்களும் கள்ளர்களும் ஒன்று சேர்ந்து சிறைச்சாலையைத் தாக்கி விடுவித்தனர்.

விடுபட்ட இப்பாளையக்காரர்கள் தங்கள் நிலையை உறுதிப்படுத்திக் கொள்ள ஆங்கிலேயர்களுடன் நடத்திய பேச்சு வார்த்தைகள் வெற்றி தராமையால் புரட்சியில் ஈடு

பட்டனர். எனவே அவர்களை அடக்க ஆங்கிலேயர் படையும் நவாப் படையும் இணைத்து அனுப்பப்பட்டது. 1796ல் துவங்கிய இக்கலகங்கள் இரண்டு ஆண்டுகளுக்கு நீடித்தது. இதை அடக்குவதில் புதுக்கோட்டைப் படையின் உதவியும் தேவைப்பட்டது. எனவே 63 குதிரைகளும் 2,203 போர் வீரர்களும் கொண்ட ஒரு படை புதுக்கோட்டையிலிருந்து சர்தார் அவதூதராவ் தலைமையில் அனுப்பப்பட்டது. அடுத்த ஆண்டில் ஏப்ரல்—ஜூன் வாக்கில் மேலும் 200 குதிரைகளும் 5,000 போர் வீரர்களும் கொண்ட படைகள் மாப்பிள்ளை பல்லவராயர், கண்ணையர், டாபீர் கோபால் ராவ், உடையப்ப வேளார், சின்ன அரண்மனை வெங்கன்ன சேர்வை ஆகிய சர்தார்கள் தலைமையில் அனுப்பி வைக்கப் பட்டது.

உடையார் பாளையத்தில் ஏற்பட்ட கலவரத்தைப் பயன்படுத்திக் கொண்டு துறையூர் பாளையமும் போர்க் கொடி தூக்கியது. அக்கலகத்தை அடக்க உதவியாக 756 போர் வீரர்கள் கொண்ட சிறு படையொன்று புதுக் கோட்டை மன்னரால் சர்தார் பட்டாபிராமய்யர் தலைமை யில் அனுப்பி வைக்கப்பட்டது.

மீண்டும் 1797ல் சர்தார் மகாலிங்கம் தலைமையில் 1000 வீரர்களும், சர்தார் பட்டாபிராமய்யர் தலைமையில் 700 பேரும் இளந்தரிமுத்து விஜய அம்பலக்காரர் தலைமையில் 2000 பேரும் அனுப்பப்பட்டனர்.

இந்தப் பேருதவியைப் பாராட்டும் வகையில் நவாபினல் யானை ஒன்று பரிசாகப் புதுக்கோட்டைக்கு அளிக்கப்பட்டது.

**மைசூர் போர்**

1799 பிப்ரவரி வாக்கில் திப்புசுல்தான்மீது ஆங்கிலேயர் போர் தொடுத்தனர். இப்போரிலும் புதுக்கோட்டை படையனுப்பி உதவிற்று. சர்தார்கள் அய்யாசாமி ஐயா ஆனந்தய்யா, சேர்வைமுத்து, அம்பலக்காரர் ஆகியோர் படை நடத்திச் சென்றனர். இப்போர் தொடங்கி மூன்றே

மாதத்தில் அதாவது மே மாதம் நான்காம் தேதியன்று திப்புசுல்தான் சீரங்கப்பட்டண முற்றுகையில் கொல்லப் பட்டார். மைசூர் ஆங்கிலேயர் வசமாகியது.

இதன்பிறகுதான் ஆற்காடு நவாபைப் பற்றிய ஒரு உண்மை வெளிப்பட்டது. மைசூர் கோட்டையைக் கைப் பற்றியபோது கிடைத்த சில கடிதங்களின் மூலம் ஆற்காடு நவாப் உல்தாத் உல் உம்ராவுக்கும் திப்புசுல் தானுக்குமிடையே இரகசிய உறவு இருந்து வந்தது தெரிய வந்தது. இது ஆங்கிலேயருக்கு பெருத்த அதிர்ச் சியைத் தந்தது.

இந்த வெற்றிகரமான போரில் புதுக்கோட்டை படை வீரர்கள் காட்டிய தீரத்தைப் போற்றுகிற வகையில் ஆங்கிலேயர்களால் புதுக்கோட்டை போர் வீரர்களுக்குப் பரிசுப் பணம் அளிக்கப்பட்டது.

**பாளையப் போர்கள்**

தென்னகம் விஜய நகர சாம்ராஜ்யத்திற்கு உட்பட்ட தாயிருந்த காலத்தில் அதாவது 16 ஆம் நூற்றுண்டில், மதுரை மன்னஞக விளங்கிய விஸ்வநாத நாயக்கர் ஏற்படுத் திய பாளையப்பட்டுக்கள் நீண்ட காலமாக அந்தந்த பாளை யக்காரர்களின் நிர்வாகத்தில் இயங்கி வந்தது. மதுரை நாயக்க அரசுகளின் மேலான்மையை அவர்கள் ஏற்றுக் கொண்டிருந்தாலும், உள்நாட்டு விவகாரங்களில் அவர்கள் பூரண சுதந்திரமாகவே செயல்பட்டனர். நாயக்க அரசு வமிசம் சீரழிந்த பிற்பாடு மொகலாயர்களின் ஆதிக்கம் ஓங்கவே, ஆற்காடு நவாபாகிய முகம்மதலியும் அவனது சந்ததியாரும் தங்களது பொக்கிஷத்தை நிரப்பிக்கொள்ள வேண்டுமென்ற வெறியில் செயல்பட்டனர். சுதந்திரத்தோடு வாழ்ந்த பாளையக்காரர்களுக்கு நவாபின் பேராசைக் கூத்து ஆவேசத்தை ஊட்டியது.

மேலும் கொழுத்த லாபம் தேடிவந்த ஆங்கிலேயரும் நவாபுடன் சேர்ந்துக்கொண்டு வேகிற வீட்டில் பிடுங்கின மட்டும் ஆதாயம் என்ற ரீதியில் செயல்பட்டதால் அவை

பாளையங்களின் பொருளாதாரத்தையும், சுதந்திரத்தையும் வெகுவாகப் பாதித்தன. எனவே, பாளையக்காரர்கள் ஆங்கிலேயர்—நவாப் கூட்டு எதேச்சதிகாரத்துக்கு எதிராகத் திரண்டு எழுந்தனர்.

அப்படித் திரண்டெழுந்த பாளையக்காரர்களுள் இரு பிரிவு ஏற்பட்டது. திருநெல்வேலி பாளையக்காரர்கள், பாஞ்சாலங்குறிச்சி கட்டபொம்மன் தலைமையிலும், ராமநாதபுரம், மதுரை பாளையக்காரர்கள் சிவகங்கை மருது சகோதரர்களின் தலைமையின் கீழும் கிளர்ந்து எழுந்தனர்.

## முதல் பாளையப் போர்

திருநெல்வேலி பகுதியில் நாகலாபுரம், ஏழாயிரம் பண்ணை, கோலார்பட்டி, கடல்குடி குளத்தூர் ஆகிய பாளையங்கள் அன்னிய ஆதிக்கத்துக்கு எதிராகக் கூட்டுச் சேர்ந்து குழு அமைத்திருந்தன. இக்குழுவுக்குத் தலைமையேற்கும் பொறுப்பு வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு ஏற்பட்டது. கட்டபொம்மன் ஆங்கிலேயரால் அவமதிக்கப்பட்ட விதத்தாலும், சிவகங்கை வீரர்களின் மூலம் கிட்டிய உத்வேகத்தாலும் இக்குழுவின் தலைமையை ஏற்க நேர்ந்தது. ஆங்காங்கே புரட்சிப் பூக்கள் பூத்தன.

இச்சமயத்தில் இராமநாதபுரம் கலெக்டராக இருந்தவன் காலிங் ஜாக்ஸன். அவன் மட்டும் மண்டை கனமும் கபடமும் நிறைந்தவனாக இல்லாதிருந்தால் இப்புரட்சி உச்ச நிலைக்குப் போயிருக்காது. கட்டபொம்மனும் ஆங்கிலேயருடன் ஒத்துப் போயிருந்திருக்கக் கூடும்.

கட்டபொம்மனைச் சந்திக்க விரும்புவதாக அந்தக் கலெக்டர்—ஜாக்ஸன் அழைப்பு விடுத்து, ஆனால் சந்திப்புக்கு இடம் தராத முறையில் 23 நாட்கள் அவனை அலைக்கழித்து, இறுதியில் இராமநாதபுரத்தில் அச்சந்திப்பு நேர்ந்தபோது கைது செய்ய முற்பட்ட நயவஞ்சக நாடகம் கட்டபொம்மனை பெரிதும் கொதிப்படைய வைத்தது. அது உண்மையிலே தன்மானம் உள்ள எவருக்கும் மனதைவிட்டு நீங்காத ஒரு அவமானமாகும்.

ஜாக்ஸனின் அடாத செய்கை ஆங்கிலேயக் கும்பெனி யாருக்கே அதிருப்தி அளித்தது. சென்னை கவர்னரான எட்வர்டு கிளைவ் ஆணைப்படி இராமநாதபுரத்தில் கூடிய ஒரு விசாரணைக் குழு காலிங்ஜாக்ஸனைக் குற்றவாளியென்று அறிவித்து பதவி நீக்கம் செய்தது. கட்டபொம்மன்மீது சாற்றப் பட்டிருந்த குற்றச்சாட்டுகள் அனைத்தும் ரத்து செய்யப் பட்டன.

ஆயினும் ஜாக்ஸன் செய்த அட்டகாசங்களையும் இழைத்த அநீதிகளையும் அவை மறக்க வைக்க இயலாதவை யாகவே இருந்தன.

இந்நிலையில் சிவகிரி பாளையக்காரருக்கும் அவருடைய மகனுக்குமிடையே இருந்து வந்த கருத்துவேறுபாடு முற்றிப் போயிருந்தது. ஆங்கிலேயருக்கு ஆதரவாக இருந்த தந்தையை சுதந்திர உணர்வுடைய மகன் தீவிரமாக எதிர்த்தான். தந்தையை விரட்டி விட்டு சிவகிரியை சுதந்திர வீரர்களின் கோட்டையாக்கும் முயற்சியில் அவன் இறங்கினான். இதன் பொருட்டு இதர பாளையக்காரர்களின் ஆதரவைப் பெற மாப்பிள்ளை வன்னியன் என்னும் புரட்சி வீரனோடு பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்தான். அவன் பயணம் பலன் அளித்தது. பல்வேறு புரட்சிப் பாளையக்காரர்களின் படை ஒன்று குமாரசாமி நாயக்கன் தலைமையில் சிவகிரியார் மகனுடன் பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து சிவகிரி நோக்கிச் சென்றது.

இதனை அறிந்த ஆங்கிலேயர்கள் இதையே ஆதிக்கப் போருக்கு ஒரு முகாந்திரமாக எடுத்துக் கொண்டனர். பாஞ்சாலங் குறிச்சியை அழித்து விடவும் முடிவு செய்தனர். அதன் எதிரொலியாக மேஜர் பானர்மேன் 1799 செப்டம்பர் முதல் தேதியன்று கட்டபொம்மனுக்கு ஒரு கடிதம் விடுத்தான். இராமநாதபுரத்திற்கு வந்து அவனைக் காணுமாறு இடப்பட்ட உத்திரவே அது!

கட்டபொம்மன் இதற்குக் கட்டுப்படவில்லை. ஒரு பதிலை அனுப்பி வைத்தான்.

> "மேன்மை தாங்கிய கும்பெனியாருக்கு என்றும் அடங்கியவனுகவே நினைத்துக் கொண்டிருக்கும் மனிதனுகிய எனக்கு, உங்களைப் பார்ப்பதிலோ, உங்களது கட்டளைகளுக்குப் பணிந்து செயல்படுவதிலோ யாதொரு சங்கோஜமுமில்லை. ஆனுல், தற்சமயம் நல்ல நாட்கள் ஏதும் இல்லாதிருப்பதால் நல்ல நாள் வருகையில் நானே உங்களிடம் வந்து உங்கள் கட்டளைக்குப் பணிகிறேன்..."

என்று குத்தலாகவும், சாக்குப் போக்கு கூறுகிற முறையிலும் கடிதம் எழுதிவிட்டு 'கம்'மென்று இருந்து விட்டான் வீரபாண்டிய கட்டபொம்மன்.

ஏற்கெனவே ஆங்கிலேயர்கள் தீர்மானித்திருந்தபடி செப்டம்பர் 5-ம் தேதி விடியற் காலையில் படையுடன் மேஜர் பானர்மென் பாஞ்சாலங்குறிச்சிக்கு அருகில் பாடி இறங்கினுன்,

இந்தத் திடீர் படையெடுப்பு பாஞ்சாலங்குறிச்சி கோட்டை வாழ் வீரர்களுக்கு அதிர்ச்சி தரத்தக்கதாக இருந்தது. இருந்தாலும், எதிர்த்துப் போர் செய்வதைத் தவிர அவர்களுக்கு வேறு வழி ஏதுமில்லை. ஆங்கிலேயர்களின் முற்றுகையை எதிர்த்துச் செயல்பட்டனர்.

இரு நாள் போரில் பாஞ்சாலங்குறிச்சி கோட்டை தகர்க்கப்பட்டது.

கட்டபொம்மனும் அவனது மிஞ்சிய படைவீரர்களும் பாஞ்சாலங்குறிச்சியை விட்டு அகன்றனர். இவர்களைப் பிடிப்பதற்காக எட்டயபுரம் படைவீரர்கள் தீவிரமாக முயற்சித்தனர். ஆனுல் கட்டபொம்மனும் அவனுடைய நெருங்கிய உறவினர்களும் தப்பியோடி சிவகங்கைவழியாக தொண்டைமான் நாட்டு எல்லைக்குள் இருந்த காடுகளில் ஒளிந்து கொண்டனர்.

இந்த விபரம் தொண்டைமானுக்கு கலெக்டர் லூசிங்டன் எழுதியிருந்த கடிதத்தின் மூலமே தெரிய வந்தது. இதன் பலனுய் கட்டபொம்மனைத் தேடும் படலம் தொடங்கியது. கட்டபொம்மன், ஊமைத்துரை கட்டபொம்

மனின் இரு மைத்துனர்கள், ஒரு அடைப்பக்ககரன் இரு மெய்க்காவலர்கள் ஆகிய எழுவர் திருக்குளம்பூருக்கு மேற்கே களப்பூர் என்னும் கிராமத்தை ஒட்டியிருந்த காட்டில் சர்தார் முத்து வைரவ அம்பலக்காரர் என்பவனுல் கண்டு பிடிக்கப்பட்டு கைது செய்யப்பட்டனர். பிறகு லூசிங்டனின் உத்திரவுப்படி சர்தார் அண்ணுவையா பொறுப்பில் தக்க காவலுடன் மதுரைக்குக் கொண்டு செல்லப்பட்டு கலெக்டரிடம் ஒப்படைச்கப்பட்டனர்.

அதன் பின் 1799 அக்டோபர் 17-ம் தேதியன்று ஒரு கேலிக்கூத்தான விசாரணைக்குப் பிறகு வீரபாண்டியக் கட்ட பொம்மன் தூக்கிலிடப்பட்டான்.

**காட்டிக் கொடுத்தாரா கட்டபொம்மனை**

வீரபாண்டிய கட்டபொம்மன் பாஞ்சாலங்குறிச்சியை விட்டுத் தப்பியதோடு புதுக்கோட்டைக்கு வந்து ஒளிந் திருந்ததாகவும், அவனை ராஜா விஜய ரகுநாதத் தொண்டை மான் ஆங்கிலேயரிடம் காட்டிக் கொடுத்து விட்டதாகவும், பொதுவான ஒரு கருத்து நிலவி வருகிறது.

கட்டபொம்மன் பிடிபட்டது புதுக்கோட்டைப் பகுதி யில்தான் என்பது முற்றிலும் உண்மையே. விஜயரகு நாதத் தொண்டைமானுல் கைது செய்யப்பட்டு ஆங்கிலேய ரிடம் ஒப்படைக்கப்பட்டதும் உண்மைதான். ஆனுல் காட்டிக் கொடுக்கப்பட்டது என்பதற்கும் பிடித்துக் கொடுக் கப்பட்டது என்பதற்கும் வித்தியாசம் நிரம்ப உள்ளது.

கட்டபொம்மன் தன் ஆளுகைக்கு உட்பட்ட பகுதிக்கு வந்து, அது விபரம் தமக்குத் தெரிந்திருக்கிற நிலையில் தொண்டைமான் ஆங்கிலேயருக்கு வலியத் தெரிவித்திருந் தால் அச்செய்கை காட்டிக் கொடுத்ததாக ஆகும்.

மேலாண்மை வகிக்கும் ஆங்கிலேயர்களுக்கு கட்ட பொம்மன் புதுக்கோட்டை எல்லைக்குள் ஒளிந்திருப்பது தெரியவந்து அவனைத் தேடிப்பிடித்துத் தம்மிடம் ஒப்புவிக் கும்படி கட்டளை இட்டிருக்கிற நிலையில் கட்டபொம்மனைத்

தேடிக் கண்டுபிடித்து ஒப்புவித்திருப்பது பிடித்துக் கொடுத்த தாகவே ஆகும்.

பின் சொன்னதுதான் உண்மையாகும். இது ஆதாரப் பூர்வமான கடிதங்களை ஆராய்கிறபோது ஊர்ஜிதமாகிறது.

இராமநாதபுரம் கலெக்டராயிருந்த லூசிங்டன் என்பவரிடமிருந்து தொண்டைமானுக்கு ஒரு அவசரக் கடிதம் வந்தது. செப்டம்பர் 8-ம் தேதியிட்ட அக்கடிதத்தில் நாகலாபுரம் பாளையக்காரரும், கட்டபொம்மனும், ஊமைத்துரையும் அவர்களைச் சேர்ந்த சிலரும் புதுக்கோட்டைப் பகுதியிலுள்ள குறிப்பிட்டதொரு காட்டுப் பகுதியில் ஒளிந்திருப்பதாகத் தமக்கு தெரிய வந்திருப்பதாகவும், அது உண்மையாயின் தேடிப்பிடித்துத் தம்மிடம் ஒப்புவிக்கும்படி தெரிவிக்கப்பட்டிருந்தது.

இக்கடிதம் கிடைத்த பிறகுதான் கட்டபொம்மன் தமது எல்லைக்குள் மறைந்திருப்பது தொண்டைமானுக்குத் தெரிய வந்தது. தேடிப் பார்க்கவும் உத்திரவிட்டான்.

கலெக்டர் லூசிங்டன் தெரிவித்திருந்தது உண்மையாகி விட்டது. திருக்குளம்பூரைச் சேர்ந்த சர்தார் முத்து வைரவ அம்பலக்காரர் என்பவன் கட்டபொம்மன் கோஷ்டியைக் கண்டுபிடித்து கைது செய்தான்.

இந்த விவரம் செப்டம்பர் 24ம் தேதிய கடிதத்தின் மூலம் தொண்டைமானிடமிருந்து லூசிங்டனுக்குத் தெரிவிக்கப்பட்டது. தகுந்த பாதுகாப்புடன் கட்டபொம்மனை மதுரைக்கு அனுப்பி வைக்கும்படி லூசிங்டனிடமிருந்து தொண்டைமானுக்கு மறு அறிவிப்பு கிடைத்தது.

அவ்வாறே செயலாற்றினர் தொண்டைமான். இது எப்படி காட்டிக் கொடுத்ததாகும்!

இதற்குப் பிறகும் ஒரு கேள்வி எழக்கூடும்.

"கோரிக்கை விடுத்தவன் அந்நிய நாட்டான். நம்மவனன கட்டபொம்மனை புதுக்கோட்டைத் தொண்டைமான் பிடித்துக் கொடுக்கலாமா?"

புதுக்கோட்டை சுதந்திரமான ஓர் அரசு அல்ல; ஒரு மேலாண்மைக்குக் கட்டுப்பட்ட சிற்றரசு என்பதையும் எண்

ணிப் பார்க்கவேண்டும். அதோடு வரலாற்றுச் சான்றுகள், காலத்தின் சூழல், தேவை இவை அனைத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தே ஒரு செயலின் தன்மையை எடைபோட வேண்டும்.

ராஜா ரகுநாதத் தொண்டைமானின் அப்போதய நிலைமையையும், அவர் இருந்த காலச் சூழ்நிலையையும் பார்க்கின்றபோது, கட்டபொம்மன் விஷயத்தில் அவர் செயல்பட்ட விதத்தில் எந்தவிதத் தவறும் இருப்பதாகக் கூறமுடியாது.

ராஜா விஜய ரகுநாதத் தொண்டைமானின் காலம், தென்னகத்தில் இருந்த சுதேச மன்னர்களும் பெரும்பாலான பாளையக்காரர்களும் ஆங்கிலேயரின் நன்மதிப்பைப் பெற எதுவும் செய்யத் தயாராயிருந்த காலமாகும். இந்த இடத்தில் உதாரணத்திற்கு ஒன்றைத் தெரிந்துகொண்டு மேலும் கவனிப்போம்.

கட்டபொம்மன் பிடிபட்டபிறகு, அவனது சகோதரனை சிவத்தையா என்பவன் தஞ்சை அரசனை சரபோஜிக்கு ஒரு கடிதம் எழுதி, தமக்கு ஆதரவு தருமாறு கேட்டு, அச்கடிதத்தை ஒரு தூதுவன் மூலம் அனுப்பியிருக்கிறான். சிவத்தையாவின் மடலைக் கொண்டுவந்த தூதுவன் அம்மடலை தஞ்சை மந்திரியான தத்தாஜியிடம் கொடுத்தான். அந்த தத்தாஜி மடல் கொண்டுவந்தவனை சிறையில் அடைத்து, மடலை கும்பெனியாருக்கு அனுப்பிவைத்தான்.

மற்றொரு நிலையையும் கவனிப்போம்.

கட்டபொம்மன் பாஞ்சாலங்குறிச்சியைவிட்டு தப்பிச் செல்ல நேர்ந்தபோது சிவகங்கை வழியாகத்தான் புதுக்கோட்டை எல்லைக்கு வந்திருக்கிறான். ஆங்கிலேயருக்கு எதிராகத் தீவிரமாக போர்க்கொடி உயர்த்தியது சிவகங்கை சீமை. கட்டபொம்மனுக்கு அங்கு புகலிடம் கிடைக்கவில்லையா?

பொதுவாக, ஆங்கிலேயரின் உதவியைத் தங்களுக்கு ஆதரவாகப் பெற்றுக்கொள்ள ஒவ்வொரு சுதேச அரசும் முயற்சி செய்துகொண்டிருந்த காலம் அது. தஞ்சையும்

இராமநாதபுரமும் சமயம் கிடைத்தால் யாருடனும் கூட்டுச் சேர்ந்து புதுக்கோட்டைப் பகுதிகளை கைக்கொள்ளும் நோக்கில் இருந்தன. தென்னகத்தின் பெரும் சுதந்திர வீரர்களாய் விளங்கிர மருது சகோதரர்கள்கூட காலக் கட்டாயத்தின் பேரில் ஆங்கிலேயருடன் சமாதானமாய் ஒத்துப்போயிருந்த காலம். இந்தச் சூழ்நிலையில் புதுக்கோட்டை அரசின் பாது காப்பை எண்ணிப் பார்க்கையில் ஒரு நிலையான நேச சக்தி அதற்குத் தேவைப்பட்டது. நவாப்பிற்குக் கட்டுப்பட்ட ஒரு சிற்றரசு என்ற நிலையில், அந்த நவாபுக்கும் மேலாண்மை படைத்த ஆங்கிலேயரைத் தேர்ந்தெடுத்துக்கொண்ட புதுக் கோட்டைத் தொண்டைமான்கள், தமது நாட்டு எல்லைக்குள் வந்து ஒளிந்துகொண்ட கட்டபொம்மனை மேலாதிக்க உத் திரவு கிடைத்திருக்கிற நிலையில் பிடித்துத் தருவதைத் தவிர வேறு எவ்வாறு செயல்பட முடியும்?

புதுக்கோட்டைத் தொண்டைமானிடம் கட்டபொம் மன் அடைக்கலம் கேட்டிருந்து, நயவஞ்சகமாய் அவர் பிடித் துக் கொடுத்திருந்தால் தொண்டைமானின் அச்செய்கையை காட்டிக் கொடுத்ததாகக் கருதலாம்.

அப்படி கட்டபொம்மன் நடந்துகொள்ளவில்லையே! தொண்டைமானுக்குத் தெரியாமலல்லவா அவரது எல்லைக் குள் மறைந்திருந்தான்.

**இரண்டாம் பாளையப் போர்**

ஆங்கிலேயரால் சிறைப் பிடிக்கப்பட்டிருந்த ஊமைத் துரை புரட்சி வீரர்களின் உதவியோடு தப்பித்து பாஞ்சாலங் குறிச்சியில் புதியதொரு கோட்டையைக் கட்டி ஆங்கிலேய ருடன் போராடினான். எனினும் வெடி மருந்தோடு வந்த வெள்ளையரை அதிகக் காலத்திற்கு எதிர்த்து நிற்க முடிய வில்லை. ஆங்கிலேயப் படையினரால் விரட்டப்பட்டு அவன் சிவகங்கை மருது சகோதரர்களின் விருந்தினராகத் தங்கி னான்- மருது சகோதரர்களின் வளர்ச்சியை சந்தேகத் தோடும் அச்சத்தோடும் கவனித்துக்கொண்டிருந்த ஆங்கி

லேயருக்கு ஊமைத்துரைக்கு அவர்கள் அளித்த ஆதரவு சிவகெங்கையின் அதிகாரத்தை உடனடியாக ஒடுக்கியாக வேண்டுமென்ற எண்ணத்தைத் தோற்றுவித்தது. இதன் முடிவாய் கர்னல் அக்நியூ, (Agnew) சிவகெங்கை சென்று ஊமைத்துரையைத் தங்களிடம் ஒப்படைக்கும்படி கோரினுன். மருது சகோதரர்கள் அதற்கு இசையாமலிருக்கவே சிவகெங்கைமீது ஆங்கிலேயர் படை பாய்ந்தது.

இந்த முற்றுகை, கர்னல் அக்நியூ லெப்டினன்ட் கர்னல் இன்னிங்ஸ் மற்றும் பல படைத் தலைவர்கள் ஒன்று சேர்ந்து முயற்சித்தும் சிவவெங்கையை எளிதாக வீழ்த்த முடியவில்லை சிவகெங்கையின் காட்டு அரணும், மருது சகோதரர்களின் போர்த் திறனும், படை வீரர்களுக்குத் தேவையான பொருட்களைக் கடல் மார்க்கமாக தோணி மூலம் வரவழைத்துக் கொண்ட செயல் திறனும், புரட்சி வீரர்களின் உத்வேகமும், ஆங்கிலேயர்களுக்குப் பெருத்த அவமானத்தையும் தோல்வியையும் கொடுத்தன.

ஆங்கிலேயருக்கு மேலும் படை பலம் தேவைப்பட்டது. புதுக்கோட்டை, திருவாங்கூர் போன்ற சிற்றரசுகளின் படை பலம் கோரப்பட்டது. ராஜா விஜய ரகுநாதத் தொண்டைமான் சர்தார் முத்துக்குமாரப் பிள்ளையின் தலைமையில் 3,657 போர் வீரர்களை நத்தம் பகுதியிலிருந்த ஆங்கிலப் படைக்குத் துணையாக அனுப்பினுர்- சர்தார் அண்ணுவையர், இரகுநாதராவ், முருகப்ப சேர்வைக்காரர் ஆகியோரின் தலைமையின்கீழ் சுமார் 2,000 பேர் கொண்ட படை சிவகெங்கைக்கும், அறந்தாங்கியிலிருந்த கேப்டன் பிளாக்பர்ன் என்பவருக்கு உதவியாக 13 குதிரைகளும், 1,070 போர் வீரர்களும் அனுப்பப்பட்டனர். இவையன்றி காளையார் கோயில் காட்டு அரணை அழிப்பதற்கு காடு வெட்டிகளும் அனுப்பப்பட்டனர். திருமயம் கோட்டையை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ள தோதாக அக்கோட்டையை அக்நியூவின் படைக்குக் கொடுத்தார்.

இவ்வளவு படை பலம் பெற்ற ஆங்கிலேயர் பிரித்தாளும் சூழ்ச்சியையும் மேற்கொண்டனர்.

புரட்சி வீரர்களின் கட்டுப்பாட்டை உடைத்து, மருது சகோதரர்களின் செல்வாக்கைக் குறைக்கும் சூழ்ச்சியின் ஒரு கட்டமாக சிவகெங்கை அரச குடும்பத்தைச் சேர்ந்த கௌரி வல்லப பெரிய உடையத் தேவர் என்பவரை சிவகெங்கையின் அரசராக ஆங்கிலேயர்கள் பிரகடனப் படுத்தினர்.

இந்த பொம்மை ராஜாவுக்கு 1,801 செப்டம்பர் மாதம் 12-ம் தேதியன்று பட்டாபிஷேக வைபவமும் நடத்தப் பட்டது. ராஜா என்ருல் ஓரளவு படையும் இருக்க வேண்டு மில்லையா? உடனடியாகத் தேவைப்பட்ட ஆள் பலத்தையும் விஜயரகுநாதத் தொண்டைமான் தான் கொடுக்க வேண்டி யிருந்தது.

மருது சரோதரர்களோடு மோதியதில் தோல்விமேல் தோல்வியாக தொடர்ந்து பெற்று வந்த ஆங்கிலேயர் மாற்றுப்போர் திட்டத்தை வகுப்பதற்கு தொண்டை மானின் யோசனையைக் கோரினர். இதுபற்றி விரிவாக ஆலோசிக்க பிளாக்பர்னும், ராஜா விஜயரகுநாதத் தொண்டைமானும் செப்டம்பர் 4ம் தேதியன்று சந்தித்தனர் தொண்டைமான் கூறிய ஆலோசனைப்படி ஆங்கிலேயர்கள் பலமுனைத் தாக்குதலை மேற்கொண்டனர். மேற்கு திசை யிலிருந்து தாக்குவதைவிட வடகிழக்கு திசையிலிருந்து தீவிரத் தாக்குதலை மேற்கொண்டால் விரைவில் வெற்றி யடையலாமென்றும் தொண்டைமான் தெரிவித்தார். தாக்குதல் அவர் கூறியபடியே மேற்கொள்ளப்பட்டது காளை யார் கோயில் வீழ்ச்சியுற்றது. 1801 அக்டோபர் 19ம் தேதி யன்று சோழபுரத்தில் நடந்த மோதலில் மருது பாண்டியன் (சின்ன மருது) பிடிபட்டார். அத்துடன் இரண்டாவது பாளையப் போரும் முடிவிற்கு வந்தது.

  

மைசூர் போரில் திப்பு சுல்தான் ஆங்கிலேயரால் தோற் கடிக்கப்பட்டு, மைசூர் பிடிபட்டபோது ஏற்கனவே ஆற்காடு நவாபுக்கும் திப்புவுக்குமிடையே இருந்து வந்த இரகசியத் தொடர்பு பற்றிய கடிதங்கள் ஆங்கிலேயரிடம் கிடைத்தது என்பதை ஏற்கனவே குறிப்பிட்டிருக்கிருேம், அதன் காரண

மாக கர்நாடகத்தில் நவாபிடமிருந்த அதிகாரத்தைத் தாமே எடுத்துக்கொள்ள ஆங்கிலேயர் முற்பட்டனர். இதன் பயனுய் அஜிம்உத்தௌலாவை நவாப் ஆக்கினுர். 1801 ஜூலை 31ம்தேதியன்று கர்நாடகம் கிழக்கிந்திய கம்பெனியின் நேரடி ஆட்சியின் கீழ் வந்தது. ஆற்காடு நவாபுக்கு நில வருவாயில் ஐந்தில் ஒரு பங்கு கொடுத்து வரவும் அதிகபட்சம் 12,000 பகோடாக்கள் மேற்பட்டாமல் மாதம் தோறும் இருக்கும் படியும் நிர்ணயிக்கப்பட்டது.

அதிகாரம் மேற்கண்டவாறு மாறியதன் விளைவாக புதுக்கோட்டைக்கு ஒரு விஷயம் சாதகமாகியது. நவாபிற் கும், நவாபின் பிரதிநிதியாக திருச்சியில் இருப்பவர்களுக்கும் நஸார் தொகையாக அடிக்கடி காணிக்கை தரவேண்டியிருந்த தொல்லை நீங்கியது.

புதுக்கோட்டைக்கும் தஞ்சைக்கும் இடையே கிழாநிலைக் கோட்டை விஷயமாய் இருந்துவந்த தகருறும் ஆங்கிலே யரால் தீர்த்து வைக்கப்பட்டது. 1803 ஜூலை 8ம்தேதி பிரகடனத்தின்படி கீழாநிலைப் பகுதி புதுக்கோட்டைக்குக் கிடைத்தது.

ராஜா விஜய ரகுநாதத் தொண்டைமான். தங்கட்கு செய்த உதவிகளை ஆங்கிலேயர் பெரிதும் மதித்தனர். புதுக்கோட்டை மன்னரும் அவரது சந்ததியினரும் அவர் களது விஷேச அந்தஸ்த்தை அனுபவிக்கும் வகையில் இரண்டு தங்க சோப்தார் தடிகளை வைத்துக் கொள்ள அனு மதிக்கப்பட்டனர். இத்தடிகள் சென்னை கவர்னரால் பரிசாக அளிக்கப்பட்டவை.

இது அளிக்கப்படுமுன், ராஜா விஜயரகுநாதத் தொண் டைமான் மகாராஜா பட்டமும், வெண்கொற்றக்குடை முதலியவற்றை உபயோகிக்கும் உரிமையையும் கேட்டிருந்த தாகத் தெரிகிறது. அரசியல் வித்தகர்களான ஆங்கிலேயர் கள் இரண்டு கேட்டதற்கு ஒன்று தருகின்ற வகையில் மகா ராஜா பட்டத்திற்குப் பதிலாக இரண்டு சோப்தார் தடிகளை

தந்தனர். வெண்கொற்றக்குடை சுதந்திர அரசுரிமையைக் குறிக்கும். எனவே ராஜாவிஜயரகுநாதத் தொண்டைமான் காலத்தில் புதுக்கோட்டை ஒரு சிற்றரசாகவே விளங்கி வந்திருக்கிறது.

இடையே ஆங்கிலேயயர் அரசு திருகுதாளத்தை ஆரம் பித்தது. கீழாநிலைக் கோட்டையைத் தொண்டைமானுக்கு அளித்தற்கு எதிராக வருடமொன்றுக்கு ஒரு யானை வீதம் தமக்குக் கொடுத்துவர வேண்டுமெனக் கூறினர். விஜயரகு நாதத் தொண்டைமான் இதற்கு இசையவில்லை. தொண் டைமானின் வருத்தத்தை உணர்ந்த ஆங்கிலேயர் இதை அதிகமாக வற்புறுத்தவில்லை.

புதுக்கோட்டை எல்லைகள் பற்றி நீண்டநாட்களாக தெளிவில்லாமலிருந்தது. அதனல் அக்கம் பக்கப் பகுதிகளு டன் அடிக்கடி தகருறுகளும் ஏற்பட்டன. இதை கும்பெனி யார் தீர்க்கமாக நிர்ணயிக்க முற்பட்டனர். 1804 ம் வருடம் ஜூன் மாதம் 5ந்தேதி சர்வேயர்களால் எல்லைக் கற்கள் நடப்பட்டன.

இதனல் புதுக்கோட்டைக்கும்,மருங்காபுரி மணப்பாரை குமாரவாடி ஆகியவற்றுக்கு மிடையே இருந்த எல்லைத் தகருறுகள் தீர்த்து வைக்கப்பட்டன.

ராஜா விஜய ரகுநாதத் தொண்டைமானுக்கு ‘போஜ ராஜா’ என்ற சிறப்புப் பெயரும் உண்டு. புதுக்கோட்டை மன்னர்களுள் இவர் பெரிதும் சிறந்து விளங்கினர். அவர் காலத்தில் இலக்கியப் பணிகளும் வளர்ச்சி பெற்றுள்ளது. அவற்றுள் குறிப்பிடத்தக்க படைப்புகளாக கீழ்கண்ட வ்ற்றை கூறலாம்.

1. வெங்கண்ணுவின் மகன் சாம்பையா தெலுங்கில் எழுதிய தொண்டைமான் விஜயம்
2. அம்பு நாட்டு வளந்தான்.
3. வெங்கண்ணன் சேர்வை வளர்ந்தான்.
4. ஆண்டப்ப மன்ன வேளார் பெயரில் குறவஞ்சி.
5. உடையப்ப மன்ன வேளார் பெயரில் குறவஞ்சி.
6. திருமலைராயத் துரையின்பேரில் கலித்துறை.

7. நல்ல பெரியான் கலியுகன் பேரில் கும்மி.
8. நாவலங்க நல்லக்குட்டி மேல் குழுவல் நாடகம்.
9. திருக்குளம்பூர் வைரவன் சேர்வை பேரில் கும்மி.

இவை தவிர ராஜா ரகுநாதத் தொண்டைமானின் ஒரு மாப்பிள்ளையான இரங்க பல்லவராயர்மீதும் கல்லாக் கோட்டை ஜமீந்தார் ஒருவர்மீதும் சேர்ந்தமங்கலம் கேசவ பாரதி என்பவர் கவிகள் பாடியுள்ளார். அவரே திருக்கோ கர்ணம் கோயிலைக் குறித்து கபிலை நாடகம் என்னும் ஒரு இலக்கியப் படைப்பையும் படைத்துள்ளார். புகழ் பெற்ற குமரேச சதகமும் இக்காலத்தில்தான் இயற்றப்பட்டது.

திருக்கோகர்ணம் கணபதி கவிராயர், மிதிலைப்பட்டிக் கவிராயர், காரைச்சூரன் பட்டி கவிராயர் ஆகியோர் சிறந்த கவிராயர்களாக இக்காலத்தில் வாழ்ந்திருக்கிறூர்கள்.

ராஜா விஜயரகுநாதத் தொண்டைமான் காலத்தில் பல திருப்பணிகள் நடைபெற்றுள்ளன. 1797-ல் திருக்கோகர்ணத் திற்கு மேற்கே செல்லுக்குடிக்கு கிழக்கே இராமேஸ்வரம் செல்லும் பாதையில் ஒரு சத்திரம் கட்டப்பட்டது.

1803-ல் தொண்டைமானின் சிறிய தாயாரான கட்டக் குறிச்சி ஆயி குளவாய்ப்பட்டியில் ஒரு சத்திரம் கட்டினுர்.

1799-ல் மேல அரண்மனை ஜாகீர்தார் விஜயரகுநாதராய தொண்டைமானின் மனைவியாரான அம்மணி ஆயி பெயரில் ஒணுன்குடியில் ஒரு சத்திரம் கட்டி வைத்தார்.

சின்ன அரண்மனை ஜாகீர்தாரர் முள்ளுரில் ஒரு சத்திரம் கட்டினுர்.

குட்டப்பன் என்பவன் ராஜா விஜயரகுநாதராயத் தொண்டைமானின் பேரன்புக்குப் பாத்திரமாயிருந்தவன். அவனது பெயரில் திருக்கோகர்ணத்தில் ஒரு சத்திரம் கட்டப் பட்டிருக்கிறது. அதேபோல காசியிலும் அவனது பெயரால் ஒரு சத்திரம் கட்டப்பட்டது.

ராஜா விஜயரகுநாதத் தொண்டைமான் காலத்தில் இராமேஸ்வரம், மதுரை, பழநி, சிதம்பரம், திருப்பதி

போன்ற புகழ்பெற்ற கோயில்களில் தொண்டைமான் கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டன.

இத்தொண்டைமான் ஏற்படுத்திய கோயில் மானியங்களுக்கு உரிய சான்றுகள் அதிகமாகக் கிடைக்கவில்லை. கிடைக்கும் சில சான்றுகள் திருக்கோகர்ணம், திருமயம், செல்லுக்குடி வீரலட்சுமி கோயில், திருச்சி தாயுமானவர் கோயில் ஆகியவற்றிற்கு அளித்துள்ள நில தானங்களைப் பற்றி விவரிக்கின்றன.

ராஜா விஜயரகுநாதராயத் தொண்டைமான் 1807 பிப்ரவரி முதல் தேதியன்று இயற்கை எய்தினர்.

இவருக்கு முத்தம்மா ஆயி, சுப்பம்மா ஆயி, ஆயியம்மா ஆயி என்ற மூன்று மனைவியர் உண்டு. இரண்டாம் மனைவி வாயிலாக இரண்டு பிள்ளைகளும், மூன்றும் மனைவி மூலமாக மூன்று பிள்ளைகளும் ஒரு பெண்ணும் பிறந்தனர்.

ராஜா விஜய ரகுநாதராயத் தொண்டைமானுக்கு ஆயி அம்மா ஆயி மூலம் விஜயரகுநாதராயத் தொண்டைமான், ரகுநாதராயத் தொண்டைமான் என்ற இரு பிள்ளைகள் பிறந்தனர். இந்த இருவருமே ஒருவர்பின் ஒருவராக புதுக்கோட்டை மன்னராக அரியணை ஏறினாகள்.

ராஜா விஜயரகுநாதராயத் தொண்டைமானுக்கு ஒன்று விட்ட சகோதரர் ஒருவர் உண்டு. அவர் பெயர் விஜயரகுநாதர். அண்ணனுக்கு மிகவும் உதவிகரகாக விளங்கி வந்த இவர், அண்ணன் இறக்கும் தருவாயில் இருந்தபோது அவரது கையிலிருந்த முத்திரை மோதிரத்தைக் கழற்றி அண்ணனின் மூத்த பிள்ளைக்கு அணிவித்து, அரசுரிமைக்குத் தாம் போட்டியிடப் போவதில்லை என்பதை வெளிப்படுத்தினர். இதன் மூலம் மரணப் படுக்கையில் இருந்த மன்னருக்கு பெரும் நிம்மதியை அளித்தார்.

மன்னர் இறந்ததும் அவரது மனைவியான ஆயி அம்மா ஆயி உடன்கட்டை ஏறத் தீர்மானித்தார். அதன்படி மன்னர் வமிச மயானமாக விளங்கிய காரைத்தோப்பில் தீ மூட்டி உடன்கட்டை ஏறினர்.

ஆயி அம்மா ஆயி உடன்கட்டை ஏறிய இடம் மாலை யிடு என்று அழைக்கப்பட்டது. இங்கே ஒரு சிறு கோயிலும் கட்டப்பட்டது.

## 14. விஜய ரகுநாதராயத் தொண்டைமான்

விஜய ரகுநாத ராயத் தொண்டைமான் அரசராகும் போது அவருக்கு வயது பத்தேதான்! அவரது சிற்றப்பா வாகிய மேல அரண்மனை ஜாகீர்தார் விஜயரகுநாதத் தொண்டைமான் இடம் மன்னனுக்கு பலவிதங்களில் பேருதவியாக இருந்தார்.

மன்னர் மைனராக இருந்ததால் தஞ்சையில் 'ரெஸி டெண்ட்' டாக இருந்த மேஜர் பிளாக் பர்ன் என்பவரை புதுக்கோட்டை அரசின் நிர்வாகத்தையும் நலன்களையும் கவனித்துகொள்ளுமாறு சென்னை அரசு கட்டளையிட்டது. அதன்படி 1807 பிப்ரவரி முதல் புதுக்கோட்டையின் ரெஸிடெண்டாக மேஜர் வில்லியம் பிளாக் பர்ன் விளங்க லானார்.

புதுக்கோட்டை அரச குடும்பத்தினருக்கு பிளாக் பர்ன் புதியவரல்ல. பாளையக்காரர்களின் புரட்சியின்போது அதை அடக்கிய ஆங்கிலப்படைத் தலைவர்களில் இவரும் ஒருவர். முந்திய மன்னரான ராஜா விஜயரகுநாதத் தொண்டை மானின் மீது பேரன்பு மிக்கவராய் இருந்தவர். ஏற்கனவே மதுரைப் பகுதிக்கு படை நடத்தி செல்லும் வழியில் புதுக்கோட்டைக்கு வந்திருந்தபோது அரச குடும்பத்தினர் அனைவருக்கும் அறிமுகமாயிருந்தவர். எனவே புதுக் கோட்டை ரெஸிடெண்டாக அவர் நியமனமான போது அதை யாவருமே மகிழ்வுடன் ஏற்றுக்கொண்டனர்.

இதன்பின் அவருக்கும் இளம் வயதிலிருந்த அரச சகோதரர்களுக்கும் ஓர் ஆழ்ந்த பாசப்பிடிப்பு ஏற்பட்டது. அவர்களது இளம் பிராயத்தில் அவர்களுக்கு நல்ல பயிற்சிகளும் அளித்து அவர்கள் சார்பில் புதுக்கோட்டை

ஆட்சி பொறுப்புகளையும் கவனித்த வில்லியம் பிளாக்பர்ன் நிர்வாகத்துறையில் பலமுக்கிய சீர்த்திருத்தங்களை செய்தார்.

**சீர்திருத்தங்கள்**

அரசு நிர்வாகங்களைத் கவனித்துக்கொள்ள இரண்டு மேனேஜர்களை நியமித்தார் பிளாக்பர்ன். அப்பதவிகளில் காலம் சென்ற ராஜா விஜயரகு நாதத் தொண்டைமானின் மாப்பிள்ளையான, மாப்பிள்ளை பல்லவராயர் என்பவரும் சின்ன அரண்மனை ஜாகீர்தாராகிய திருமலைத் தொண்டைமானும் நியமிக்கப்பட்டனர். சர்க்கிள் என்றொரு பதவியும் ஏற்படுத்தப்பட்டது. இந்த சர்க்கிள் மூலம் ரெஸிடெண்டிடமிருந்து வருகிற உத்திரவுப்படி மேனேஜர்கள் காரியங்களை நடத்திவரவேண்டும்.

அரசு செயல்முறை மேற்கண்டவாறு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தும், மானேஜர்கள் இருவரும் தங்களுக்குள் சண்டையிட்டுக்கொண்டு அரசு காரியங்களைச் செவ்வனே செய்து வரவில்லை.

எனவே ஆனந்தய்யா என்பவர் சென்னை அரசால் காரியஸ்தராக நியமிக்கப்பட்டார். இவர் ரெசிடெண்டின் கண்காணிப்பின்கீழ் ராஜாவினுடைய கடமைகளைச் செய்து வரவேண்டும்.

மேஜர் வில்லியம் பிளாக்பர்ன் தஞ்சை ரெசிடெண்டாக இருந்து கொண்டு புதுக்கோட்டைக்கும் ரெசிடெண்டாக இருந்து வந்ததால் அவருடைய அலுவலகம் தஞ்சையில் தான் இருந்தது. புதுக்கோட்டை விஷயங்களை உடனுக்குடன் அறிய அவர் ஒரு ஏற்பாடு செய்தார். தாணுப்பிள்ளை என்னும் கணக்குப்பிள்ளை ஒருவர் புதுக்கோட்டைக்கு அனுப்பப்பட்டார். புதுக்கோட்டையில் நடக்கும் செய்திகளைத் தினந்தோறும் பிளாக்பர்னுக்குத் தெரிவிக்க வேண்டியது அவர் கடமையாகும்.

காரியஸ்தரான ஆனந்தய்யா வரம்புமீறி நடந்து கொண்டதை அடுத்து 1814ல் மூவர் அடங்கிய ஒரு குழுவிடம் இராச்சியக் காரியங்களைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பு

தரப்பட்டது. சைரோப நாயக், ஆனந்தய்யா, தாணுப் பிள்ளை ஆகியோர் குழுவின் அங்கத்தினராக நியமிக்கப் பட்டனர். சைரோப நாயக்கர் குழுத்தலைவராக நியமனம் பெற்றார்.

இக்குழுவின் உறுப்பினர் மூவரும் மானேஜர்கள் என்றே அழைக்கப்பட்டு வந்தனர். பிறகு கவுன்சிலர்கள் என குறிப் பிடப்பட்டனர்.

இதுவரை நிலவரி வசூலில் நிலவிவந்த அமனிமுறை ஒழிக்கப்பட்டது. நிர்வாக வசதிக்காக புதுக்கோட்டைப் பகுதிகள் ஐந்து தாலுக்காக்களாகப் பிரிக்கப்பட்டன. அவைகளாவன ஆலங்குடி, கீழாநிலை, குளத்தூர், கவிநாடு, பெருமாநாடு.

அரசு காரியங்கள் அனைத்தும் பொதுக் கச்சேரியிலேயே நடத்தப்படவேண்டும். ஒவ்வொரு தாலுகா கச்சேரிக்கும் தேவையான அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். அதன்கீழ் கிராமங்களுக்கு கர்ணம்களும் நியமிக்கப்பட்டனர்.

வாராந்திர அறிக்கைகளும், கணக்குகளும் புதுக்கோட் டையிலிருந்த பதிவுப் பணியகத்திற்கு (Record Office) அனுப்பப்படும். 'சர்க்கிள்' தான் அதன் கண்காணிப்பாளர். எல்லா நிலவரிகளும் சர்க்கிளிடம் செலுத்தப்பட்டன. சர்க்கிளிடம் செற்ற ரசீதே தகுந்த அத்தாட்சியாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.

1812ல் புதுக்கோட்டையில் நியாய சபை (Court) ஏற் படுத்தப்பட்டது. அதைத் தொடர்ந்து பல உத்தியோகஸ் தர்கள் சட்டங்கள் ஒழுங்கை நிலைநாட்ட அமர்த்தப்பட் டனர். புதுக்கோட்டை நகரில் அமைதி காக்கவும், குற்ற வாளிகளைப் பிடிக்கவும் கொத்தவால் ஒருவர் நியமிக்கப்பட் டார்.

நியாய சபையில் ஐந்துபேர் அடங்கியிருந்தனர். நாராயணப்பய்யன், ஏகநாயகம்முதலி, முத்துக்கருப்பமுதலி, வெங்கிடகிருஷ்ண ஐயன், அய்யாத்துரை அய்யாங்கார் ஆகி யோர் அந்த ஐவராக இருந்தனர்.

இந்நியாய சபை தினந்தோறும் தலைநகரில் கூடும். வழக்குகளைப் பெற்று அவற்றின் தன்மைகளை ஆராய்ந்து தங்கள் கருத்துகளை எழுதும்.

இவர்களுக்கு மேலாக ற்ெறெரு குழு உச்சநீதி மன்றக் குழுவாக விளங்கி வந்தது. ராஜாவின் நான்கு அதிகாரி களும் ஐந்து நீதிபதிகளும் கொண்டதாய் இது இருந்து வந்தது.

பிறகு அந்த ஏற்பாடு மாற்றி அமைக்கப்பட்டது. இதன் படி சிவில் வழக்குகளையும், குற்ற வழக்குகளையும் விசாரிக்க தனித்தனி சபைகள் ஏற்படுத்தப்பட்டன. சிறு சிவில் வழக்கு களை விசாரிப்பது முத்திர சபையென்றும் குற்ற இயல்வழக்கு களை விசாரிப்பது தண்டசபையென்றும் குறிப்பிடப்பட்டது.

இவர்களுக்கும் மேலாக ஒரு தலைமை நீதிபதி முதல் தலைமை நீதிபதியாக சக்கரவர்த்தி அய்யங்கார் என்பவர் நிய மிக்கப்பட்டார். இவர் தஞ்சையில் பிரசித்திப்பெற்ற நீதி மானக விளங்கியவராகும். இவர் பெயரால் சச்கரவர்த்தி அய்யங்கார் சந்து என்று ஒரு தெரு புதுக்கோட்டை நகரில் இன்றும் இருக்கிறது.

விக்னேஸ்வரீயா, ஸ்மிருதி சந்திரிகா ஆகிய இரண்டு நீதி நூல்கள் புதுக்கோட்டை நீதிமன்றத்தின் ஆதார நீதி நூல் களாக ஏற்றுக் கொள்ளப்படடன.

புதுக்கோட்டை வரலாற்றில் 1812ம் வருடம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த வருடமாகும்.

இந்த ஆண்டில் புதுக்கோட்டையில் பெரும் தீ விபத் தொன்று ஏற்பட்டது. இதனல் நகரில் பெருத்த சேதம். இதைப் பயன்படுத்திக்கொண்டு புதிய முறையில் நகரை மாற்றி அமைக்கும்படி பிளாக்பர்ன் அரசருக்கு யோசனை கூறினர். இதன் பலனய் புதுக்கோட்டை நகரம் புதிய அமைப்புடன் உருவாக்கப்பட்டது. கிழக்கு மேற்காக எட்டு வீதிகளும், வடக்கு தெற்காக எட்டுவீதிகளும் ஆகக்கூடி 16 வீதிகளைக்கொண்ட புதிய புதுக்கோட்டை நகரம் உருவாக் கப்பட்டது. அதற்கு மத்தியில் ஒரு புதிய கோட்டை கட்டும் பணியும் தொடங்கப்பட்டது. இக்கோட்டை 1818ல் கட்டி

முடிக்கப்பட்டது. தற்போது மாவட்ட நீதிமன்ற கட்டிடத்திற்கு எதிரேயுள்ள பேருந்து கட்டிடத்தை ஒட்டி சிதைந்திருக்கும் கோட்டைச் சுவர் பகுதிகள் இக்கோட்டையின் பகுதிகளே.

விராமலேக்கு வடகிழக்குப் பகுதியில் உள்ள நிலங்களைக் குறித்த தகரூர் நீண்ட நாட்களாக சிவகங்கைக்கும், புதுக்கோட்டைக்கும் இடையே இருந்து வந்தது. இந்த விவகாரத்தில் பிளாக்பர்ன் தலையிட்டுத் தீர்த்து வைத்தார். அந் நிலப்பகுதி இரண்டாகப் பிரிக்கப்பட்டு இருவருக்கும் அளிக்கப்பட்டது.

ராஜா ரகுநாதராயத் தொண்டைமான் காலத்தில் நடைபெற்ற நாலாவது மைசூர் போரில் புதுக்கோட்டைப் படைகாட்டிய தீரத்தை மெச்சி அப்போர் வீரர்களுக்குப் பரிசாக 4452 ஸ்டார் பகோடாக்களை சென்னை கும்பெனியார் அனுப்பியிருந்தனர். இத்தொகை ராஜாவுக்கான (நஸார்) என்று சொல்லி மாப்பிள்ளை பல்லவராயரும், திருமலைத் தொண்டைமானும் முடக்கி வைத்திருந்தனர். அத்தொகை பிளாக்பர்ன் தலையீட்டால் போரில் பங்கேற்ற படைவீரர்களுக்கு அளிக்கப்பட்டது.

இதே 1812ல் தான் அரச குமாரர்களுக்கு திருமணங்கள் நடத்தி வைக்கப்பட்டது. பட்டத்திற்குரிய விஜயரகுநாதத் தொண்டைமான் சிங்கம் புலி ஐயாவின் மகளையும் அவரது தம்பியான ரகுநாதத் தொண்டைமான் காட்டக்குறிச்சி சூரியமூர்த்தி பன்றி கொண்டாரின் குமாரியையும் மணந்து கொண்டனர். அப்பொழுது அரசகுமாரர்களுக்கு முறையே வயது 15ம், 13ம் தான் ஆகியிருந்தது.

திருமணத்திற்குப் பிறகு குடும்பம் ராமேஸ்வர யாத்திரை சென்று வந்தது.

1812ல் புதுக்கோட்டை நகரைப் புதுப்பித்ததை ஆங்கிலேயர் வெகுவாகப் பாராட்டினர். மேலும் அவ்வாண்டில் அறிவியல் பூர்வமாக அம்மை குத்தும்முறை புதுக்கேட்டையில் தொடங்கி வைக்கப்பட்டது. இந்த அம்மை நோய் தடுப்பு முறையை ஊக்குவிக்கும் முக

மாக அரசரும் அவரது சகோதரரும் முதலில் தடுப்பு ஊசி போட்டுக்கொண்டனர்.

இச்செயலைப் பாராட்டி 1813 ஆண்டு ஆரம்பத்தில் கிழக்கிந்திய கம்பெனி டைரக்டர்கள் அரசரை வெகுவாகப் பாராட்டிக் கடிதம் எழுதினர். முதன் முறையாக அக்கடிதத்தில்தான் அரசருக்கு பெரும் மதிப்பு தருகிற வகையில் 'ராஜா பகதூர்' என்று குறிப்பிட்டு விளிக்கப் பட்டிருந்தது. அன்றிலிருந்து புதுக்கோட்டை அரசர்களுக்கு ராஜா பகதூர் பட்டம் ஆங்கிலேயரால் உறுதி செய்யப் பட்டதாக அமைந்தது.

1813 மே மாத வாக்கில் புதுக்கோட்டையில் உப்புக் காய்ச்சலைத் தடை செய்யுமாறு தஞ்சை கலெக்டரிடமிருந்து அறிவிப்பு வந்தது. இது புதுக்கோட்டை சமஸ்தானத்தின் பொருளாதாரத்தையும், புதுக்கோட்டை மக்கள் ஆங்கிலக் கம்பெனியாரிடம் கொண்டுள்ள அபிமானத்தையும் பாதிக்கும் என்பதாக பிளாக்பர்ன் வன்மையாக சுட்டிக் காட்டப்பட்டதின்பேரில் இவ்வுத்திரவு வாபஸ் பெறப் பட்டது.

நிலங்கள் ஒழுங்காக அளக்கப்பட்டு தரம் பிரிக்கப்பட வேண்டிய அவசியத்தை சென்னை அரசாங்கத்தார் அறிவுறுத்தினர். அதன் அடிப்படையில் இவ்வாண்டில் ஒரு சிறந்த நில அளவை எடுக்கப்பட்டது. அந்த அளவைகளின் அடிப் படையில் ஒரு நில அளவைப் புள்ளியியல் கணக்கு அரசு வெளியிடாக வெளியிடப்பட்டது. ஓலைச் சுவடியில் எழுதப் பட்ட இவ்வரசு வெளியீட்டின் ஓலைச் சுவடி பிரதி ஒன்றை இன்றும் புதுக்கோட்டை அரசு அருங்காட்சி அகத்தில் (கவர்மெண்ட் மியூசியத்தில்) காணலாம்.

இதில், நிலங்களின் தன்மை, அவற்றில் விளையும் பொருட்கள், ஊரிலுள்ள கட்டிடங்கள், கோயில்கள், குளங்கள், செய்தொழில்கள் போன்ற பல விபரங்கள் குறிக் கப்பட்டுள்ளன.

அமரக்காரர்களுக்கு ஏற்கெனவே கொடுக்கப்பட்டிருந்த நிலங்களை அரசாங்கத்துக்கு விட்டுவிடுமாறு ரெஸிடெண்

டைக் கலந்தாலோசியாமல் 1814-ல் ஆனந்தையா அறிவிப்பு விடுத்தார். பல காலமாக தங்கள் நிலம் என்று கருதி கிணறு கள் வெட்டி வளப்படுத்தி வைத்திருந்த நிலங்களை விட்டுக் கொடுப்பதென்பது அமரக்காரர்களுக்குப் பேரிடியாக அமைந்தது. மாற்று நிலங்கள் தருவதாகக் கூறினாலும் தாங் கள் பண்படுத்தி வைத்திருக்கும் நிலங்களுக்கு அவை ஈடா காது என்பது அமரக்காரர்களின் வாதம். இச்செய்தி பிளாக் பர்னுக்கு எட்டியதும் உடனடியாக ஆனந்தய்யாவின் செயலைக் கண்டித்து அவரது அறிவிப்பை நிராகரித்தார்.

புதுக்கோட்டையில் ஒரு தொழிற்சாலை ஏற்படுத்த விரும்பிய மன்னர், பிளாக்பர்னின் சகோதரரான ஜான் பிளாக்பர்னுடன் கூட்டு சேர்ந்து 1814-ல் கரம்பக்குடியில் ஒரு சாயத் தொழிற்சாலை தனிப்பட்ட முறையில் ஏற்படுத்தினார்.

1815-ல் இலங்கையில் கண்டி அரசர் விக்கிரம ராஜசிங்கா விற்கும், ஆங்கிலேயருக்கும் ஏற்பட்ட தகராறைத்தொடர்ந்து ஏற்பட்ட போரில் கம்பெனியார் பிடித்த கண்டி வீரர்கள் 13 பேர் அரசியல் கைதிகளாக புதுக்கோட்டை பகுதிக்கு அனுப்பி வைக்கப்பட்டனர்.

1817-ல் விஜய ரகுநாதராயத் தொண்டைமான் அரச ராக முழுப் பொறுப்பேற்றார்.

தஞ்சை அரசரான சரபோஜிக்கு புதுக்கோட்டையின் வளர்ச்சியையும் அரசியல் அந்தஸ்து உயர்வையும் ஜீரணிக்க முடியவில்லை. புதுக்கோட்டையின் அந்தஸ்தை குறைவு படுத்தும் விதத்தில் புதுக்கோட்டை தொண்டைமான் வெறும் ஜமீன்தார்தானென்றும் அவருக்கு 'சர்க்கிள்' வைத்துக் கொள்ளும் அதிகாரமில்லையென்றும் தெரிவித்தார். 1822 டிசம்பர் 3-ம் தேதியில் பிளாக்பர்ன் தஞ்சை அரசருக்கு ஒரு கடிதம் எழுதினார். புதுக்கோட்டை அரசர் ஆங்கிலக் கம்பெனியைச் சார்ந்ததொரு அரசர் என்றும் உள்நாட்டு விவகாரங்களில் முழு அரசுரிமையும் அவருக்கு இருப்ப தாகவும், அத்தகைய ஒருவரை ஜமீன்தாராகக் கருதுவது கூடாதென்றும், தம் மனப்போக்கை சரபோஜி மாற்றிக் கொள்ள வேண்டுமென்றும் அதில் அவர் தெரிவித்திருந்தார்.

1822-ல் சென்னை வெள்ளை அரசிலிருந்து ஒரு கோரிக்கை வந்தது. திருச்சியிலிருந்து பாளையங்கோட்டை வரை ஐரோப்பிய பிரயாணிகள் தங்குவதற்கேற்ப பயணிகள் விடுதி கட்ட வேண்டுமென்று அதில் பொதுவாக அறிவிக்கப்பட்டிருந்தது. அத்தகைய விடுதி ஒன்றை புதுக்கோட்டையிலும் கட்டுமாறு பிளாக்பர்ன் தொண்டைமானுக்குக் கூறினர். இதன்படி விராலிமலையில் ஒரு பங்களா கட்டப்பட்டது.

இந்த ஆண்டில் சைரோப நாயக் புதுக்கோட்டையில் 'சர்க்கிள்' ஆக நியமிக்கப்பட்டார்.

இதற்கு அடுத்த ஆண்டு அதாவது 1823-ல் மார்ச் மாதம் 24-ம் தேதியன்று தன் பணியை ராஜிநாமா செய்துவிட்டு மேஜர் வில்லியம் பிளாக்பர்ன் இங்கிலாந்துக்குப் பயணமானுர். தொண்டைமான் நலங்களில் மிகவும் அக்கறை கொண்டிருந்த அவர், இங்கிலாந்து செல்வதற்குமுன் அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமான சைரோப நாயக், தாணுப் பிள்ளை, தியாகராஜ் ஆகியவர்களை அரசருக்கு உதவியாய் இருக்கும்படி அமர்த்திவிட்டுச் சென்ருர். இதனையடுத்து சைரோப நாயக் முதல் மந்திரியாகவும், தாணுப் பிள்ளை நிதி மந்திரியாகவும் செயலாற்றினர். அரசரின் தனிச் செயலாளராக தியாகராஜ் பணியாற்றியிருக்கக் கூடுமென்று தெரிகிறது.

வில்லியம் பிளாக்பர்ன் தாயகம் திரும்பியதைத் தொடர்ந்து அவரது சகோதரரான ஜான் பிளாக்பர்னும் சீமை திரும்ப நேர்ந்தது. எனவே அரசருடன் கூட்டாக இருந்து நடத்தி வந்த சாயத் தொழிற்சாலையில் தனக்கிருந்த பங்கை அரசரிடம் கொடுத்துவிட்டு இங்கிலாந்து திரும்பினுர். அச் சாயத் தொழிற்சாலையும் லாபகரமாகவே இயங்கி வந்தது.

1825-ல் புதுக்கோட்டை மன்னரான விஜயரகுநாத ராயத் தொண்டைமான் இயற்கை எய்தினுர். அவர் இறக்கும்போது அவருக்கு வயது 28தான்!

அவருக்குப்பின் அரசு பொறுப்பேற்க பிள்ளை எவருமில்லை. எனவே அவரது தம்பியான ரகுநாதத் தொண்டைமான் அரசரானார்.

விஜய ரகுநாதராயத் தொண்டைமான் இறந்ததும் அவருடன் அவரது மனைவியார் உடன்கட்டை ஏற விரும்பினார். ஆனால் ரகுநாதத் தொண்டைமானின் பெருமுயற்சியால் அது தடுத்து நிறுத்தப்பட்டது.

## 15. ராஜ இரகுநாதத் தொண்டைமான் பகதூர்

1825 ஜுலை 20-ம் தேதி, தமது மூத்த சகோதரரை அடுத்து மன்னரான ராஜா இரகுநாதத் தொண்டைமான் பகதூர், முதல் வேலையாக அவரது தமையனார் பெயரில் இருபது இல்லங்கள் கொண்ட அக்ரகாரமொன்றை ஏற்படுத்தினார். நகருக்குக் கிழக்கே நான்கு மைல் தொலைவில் அமைக்கப்பட்ட இப்பகுதி "விஜயரகுநாதபுரம்" என்ற பெயரால் அழைக்கப்பட்டது. அதை அடுத்து தன் தந்தையின் பெயரில் மற்றொரு அக்ரகாரத்தை கட்டினார். கடையக்குடிக்கு அருகே ஏற்படுத்தப்பட்ட அந்த அக்ரகாரத்துக்கு "பிரசன்ன ரகுநாதபுரம்' என்று பெயரிடப்பட்டது.

ராஜா இரகுநாதத் தொண்டைமான் பகதூர் மிகுந்த தெய்வ பக்தியுடையவராய் விளங்கி வந்தார். நாட்டில் ஏற்பட்டிருந்த கொடிய பஞ்ச நிலையிலும் அக்ரகாரங்கள் கட்டுதல், தீர்த்த யாத்திரை செல்லுதல் போன்றவற்றில் மன்னர் அதிகமாகச் செலவழித்தது நாட்டுப் பொருளாதார நிலையைப் பெரிதும் பாதித்தது. சீமை சென்றும்கூட அரச குடும்பத்தின்மீது வைத்திருந்த அபிமானத்தால் அவ்வப்போது கடிதத் தொடர்பு கொண்டிருந்த பிளாக்பர்ன்

இதுபோன்ற செலவுகளைத் தவிர்க்குமாறு மன்னருக்கு கடிதம் மூலம் அறிவுறுத்தினர்.

1826 ஆகஸ்ட் 18ம் தேதி சென்னை கவர்னரான ஸர் தாமஸ் மன்றோவை தொண்டைமான் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அவர்களுக்கிடையே சிறந்த ஒரு உரையாடலும் நடைபெற்றது.

அரசு வட்டாரத்தில் சைரோப நாயக்கும் பவுஜ்தார், அண்ணு ஐயரும் செல்வாக்கு மிகுந்த அதிகாரிகளாக விளங்கி வந்திருக்கின்றனர். சைரோப நாயக்கின் இரு பிள்ளைகளான லட்சுமண் நாயக், கோபால் நாயக்கும் அரசாங்கத்தின் முக்கிய அதிகாரிகளாக நியமனமாகியிருந்தனர். சைரோப நாயக்கின் சகோதரர் பிள்ளைகளான கிருஷ்ணசாமி நாயக் சகாரம் நாயக் ஆகியோரும் முக்கிய அதிகாரிகளாக விளங்கி வந்தனர். சைரோப நாயக்கின் குடும்பத்தினர்களாகிய இவர்கள் ஐவரும் 'பஞ்ச பாண்டவர்கள்' என்று மக்களால் அழைக்கப்பட்டனர்.

1830 மார்ச் வாக்கில் இரகுநாத தொண்டைமானுக்கு "ஹிஸ் எக்ஸலன்ஸி" என்ற விருது ஆங்கிலக் கம்பெனியால் அளிக்கப்பட்டது.

இவ்விருது கிடைப்பதற்கு முக்கிய காரணகர்த்தா வில்லியம் பிளாக்பர்னே ஆவார். இந்தச் சமயத்தில் சென்னை கவர்னராக இருந்தவர் லூசிங்டன். இவர் தொண்டைமானின் தந்தை காலத்தில் நடைபெற்ற பாளையப் போரில் தளபதியாக இருந்தவர். இந்திய கவர்னர் ஜனரலாக அப்போது இருந்தவர் வில்லியம் பெண்டிங். இவர் ஏற்கனவே சென்னை கவர்னராக இருந்தவர். ராஜா இரகுநாதராயத் தொண்டைமானுக்கு இரு தங்க தடிகள் அளித்தவர். இவர்களெல்லாம் தொண்டைமான் அரச குடும்பத்திற்கு வேண்டியப்பட்டவர்களாக இருந்ததால் இவ்விருதை வழங்குவதில் ஆர்வம் காட்டியது இயல்பே.

1830 மார்ச் 25ம் தேதியன்று சென்னை கவர்னரால் தொண்டைமானுக்கு எழுதப்பட்ட கடிதத்தில் முதன்முறை

யாக புதுக்கோட்டை மன்னரை "ஹிஸ் எக்சலன்ஸி" என்பதாக விளித்து எழுதப்பட்டிருந்தது.

விஜயஇரகு நாதராயத் தொண்டைமான் காலத்தில் 1814ல் தொடங்கப்பட்ட கரம்பக்குடி சாயத்தொழிற்சாலை லாபகரமாக இயங்கி வந்ததால் 1830ல் மற்ெருரு சாயத் தொழிற்சாலை காரைத் தோப்பில் ஏற்படுத்தப்பட்டது.

இம்மன்னரின் காலத்திற்கு முன்பிருந்தே ஒரு நாட்டின் பகுதியிலிருந்து வேறு நாட்டுப் பகுதிக்கு கொண்டு செல்லபடும் பொருட்களின் மீது சுங்கச்சாவடிகளில் வரி வசூலிப்பது வழக்கமாய் இருந்தது. இதற்கு சாயர் வரி என்று பெயர். சோழர் காலத்தில் இவ்வரி "வழி ஆயம்" என்று குறிப்பிடப்பட்டது. ஆற்காடு நவாபும் தொண்டைமான் மன்னர்களும் இந்த வரிகளைத் தங்கள் நாட்டுப் பகுதியில் வசூலித்து வந்தனர். கர்நாடகத்தின் ஆட்சிப் பொறுப்பை ஆங்கிலேயர்கள் எடுத்துக் கொண்டபிறகு இவ்வரிகள் அவர்களுடைய வியாபாரத்திற்குத் தொல்லையாய் இருப்பதை உணர்ந்தனர். எனவே 1837 ஆகஸ்ட் மாதத்தில் 36 பொருட்களுக்கு மட்டும் வரி விதிப்பதை ஏற்படுத்தி பிறவற்றின் மீது "வழி ஆயம்" விதிக்க வேண்டாமென்று முடிவெடுத்தனர். புதுக்கோட்டையிலும் இந்த "சாயர் வரி" (வழி ஆயம்) ஆற்றி அமைக்கப்பட்டது.

இரகுநாதத் தொண்டைமான் பகதூரின் காலம் போர் எதுவுமில்லாமல் அமைதி மிகுந்த காலமாகும். இவர் காலத்தில் புதுக்கோட்டையில் இசை வளர்ச்சி பெரிதும் செழித்தது கிருஷ்ணய்யர், வீணை சுப்புக்குட்டி ஐயர், சேஷாசல ஐயர், இராமதாஸ், மாத்ரு பூதம் ஐயர், சந்தைப் பேட்டை ராமு சாஸ்திரி, புதுக்கோட்டை. சுப்ராய ஐயர் திருக்கோகர்ணம் சுப்ராம ஐயர், வைத்தியக் கவீஸ்வரர் ஆகியோர் அரசவை இசைக் கலைஞர்களாக விளங்கினர்.

1838ல் காவிரியிலிருந்து புதுக்கோட்டைக்கு ஒரு வாய்க்கால் வெட்டும் திட்டம் தயாரிக்கப்பட்டது. கும்பெனி அரசும் இதற்கு அனுமதியளித்தது. இருந்தும் இத்திட்டம்

நிறைத்துவற்றப்படாமல் போனதன் காரணம் அறியக் கிடைக்கவில்லை.

1838 ம்ஆண்டில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி புதுக்கோட்டையில் முதல் தபால் நிலையம் துவங்கப்பட்டதாகும். இந்த தபால் நிலையம் புதுக்கோட்டை அரசினுல் துவங்கப் பட்டது. இத்தபால் நிலையம் வெளியூர்களிலிருந்து வருகிற தபால்களையும் பார்சல்களையும் மட்டுமே பட்டுவாடச்செய்து வந்தது.

ராஜா ரகுநாதத் தொண்டைமான் பகதூர் 1839 ஜுலை 13ம்தேதியன்று இயற்கை எய்தினுர்.

இரகுநாதத் தொண்டைமானுக்கு இரு பெண்களும் இரு பிள்ளைகளும் இருந்தனர். இவர்களுள் மூத்த பெண்ணை ரெங்கன் பல்லவராயர் என்பவருக்கு !828 மே 15ல் திருமணம் செய்து கொடுத்தார்கள். இந்த ரெங்கன் பல்லவ ராயர் என்பவர் 1769 முதல் 1789 வரை அரசராயிருந்த இராய ரகுநாத ராயத் தொண்டைமானின் மகளாகிய அம்மாள் ஆயியின் வளர்ம்பு மகனுவார்.

மற்ருெரு மகளை ரகுநாத சுவாமி பன்றிகொண்டார் என்பவருக்கு 1831 ஜுன் 26ம் தேதி மணம் முடிக்கப்பட்டது.

இரண்டு பிள்ளைகளின் பெயர்கள் முறையே இராமச்சந்திரத் தொண்டைமான், திருமலைத் தொண்டைமான் என்பதாகும். இருவருக்கும் இரண்டே வயதுதான் வித்தியாசம்.

ராஜா ரகுநாதத் தொண்டைமான் பகதூரை அடுத்து மூத்த புதல்வரான இராமச்சந்திரத் தொண்டைமான் அரசரானுர். பதவி ஏற்றபோது இவருக்கு வயது ஒன்பதுதான் ஆகியிருந்தது.

**வில்லியம் பிளாக்பர்ன்**

சர் வில்லியம் பிளாக்பர்ன் புதுக்கோட்டை வரலாற்றில் ஒரு முக்கிய இடம் வகிக்கிருர். அவரைப் பற்றி குறிப்பு இன்றி புதுக்கோட்டை வரலாறு நிறைவுடையது ஆகாது.

1764ம் ஆண்டு பிறந்த வில்லியம் பிளாக்பர்ன் அவரது 18ம் வயதில் கர்னல் புல்லக்ட்டன் கீழ் சென்னை ஆங்கில கும்பெனியாரின் படையில் சாதாரண ஒரு போர் வீரனாகச் சேர்ந்தார். மதுரை, திருநெல்வேலி பகுதிகளில் நடந்த பாளையப் போரிலும், 1792ல் திப்புசுல்தான் மீது தொடுத்த போரிலும் இவர் பங்கு கொண்டார். இவர் இந்திய மொழிகள் பலவற்றில் தேர்ச்சி பெற்றிருந்தார். 1787ல் தஞ்சை அரசியலில் ஏற்பட்ட வாரிசு உரிமைப் போராட்டக் குழப்பத்தைத் தீர்க்கும் பணியில் கும்பனி ஈடுபட்டிருந்தபோது மராத்தியை மொழி பெயர்க்க துவிபாஷியாக இவர் நியமிக்கப்பட்டார். பின்னர் தஞ்சையிலிருந்த பிரிட்டிஷ் ரெஸிடெண்டுக்கு துவி பாஷியாக இருந்தார். இராணுவத்தில் கேப்டன் பதவியைப் பெற்றதைத் தொடர்ந்து 1801ல் தஞ்சை ரெஸிடெண்டாக நியமிக்கப்பட்டார்.

1801ல் ராஜா விஜயரகுநாதத் தொண்டைமான் இறந்ததை அடுத்து அவரது பத்தே வயது நிரம்பிய மூத்த மகன் விஜயரகுநாத ராயத் தொண்டைமான் அரசரானார். அரசர் மைனராக இருந்ததால் அரச காரியங்களைக் கவனித்துக் கொள்ளவும், சிறு பிள்ளையாயிருக்கும் அரசரையும் அவரது சகோதரரையும் பேணி வருகின்ற பணிக்கும் வில்லியம் பிளாக்பர்ன் நியமிக்கப்பட்டார்.

சிறுவர்களாயிருக்கும் போதே தந்தையை இழந்துவிட்ட அரசிளம் குமாரர்களுக்கு அந்த இழப்பு வில்லியம் பிளாக்பர்னால் பெரும் அளவிற்கு ஈடுகட்டப்பட்டது. இவர்கள் மீதும் புதுக்கோட்டை சமஸ்தானத்தின் மீதும் மிகுந்த பரிவும் பாசமும் கொண்டு செயல்பட்டார் பிளாக்பர்ன். அரசிளம் குமாரர்களுக்கு சிறந்த கல்வி அறிவும் செயல் திறமையையும் நன்கு போதித்து அவர்களை பொறுப்புணர்ந்தவர்களாக விளங்க வைத்தார். அவரது காலத்தில் புதுக்கோட்டைக்குத் தொடர்ந்து தொல்லை தந்த எல்லைத் தகராறு பலவற்றைத் தீர்த்து வைத்தார். கீழாநிலைக் கோட்டையை புதுக்கோட்டைக்குக் கிடைக்கச் செய்ததும் அவரது பெரு முயற்சியேயாகும். புதுக்கோட்டை மன்னர்களைப் பற்றி

சென்னை கவர்னரிடத்திலும், இந்திய கவர்னர் ஜெனரலிடத்திலும் பரிந்துரைகள் பல செய்தார். இந்தப் பரிந்துரைகளே தொண்டைமான் மரபிற்கு "ஹிஸ்எக்ஸலன்ஸி" என்னும் விருது கிடைக்கப் பெரும் தூண்டு கோலாய் இருந்தது. புதுக்கோட்டை புதிய நகராக உருவெடுத்ததும், நீதி சபைகள் ஏற்படுத்தப்பட்டதும் நிர்வாக வசதிக்காக தாலுக்காக்கள் பிரிக்கப்பட்டதும், இவருடைய முயற்சியின் விளைவுகளே. புதுக்கோட்டை தொண்டைமான் மரபின் மதிப்பு பெருமளவிற்கு உயர்த்தப்பட்டதே இவரால்தான் எனலாம். தாய்நாடு திரும்பிய பிறகு கூட இங்கிலாந்தில் இருந்தபடி அவரது வாழ்நாள் முழுதுமே புதுக்கோட்டை மன்னர்களின் நலனில் பெரிதும் அக்கறை காட்டி வந்திருக்கிறார்!

## 16. இராமசந்திரத் தொண்டைமான்

ராஜா இரகுநாதத் தொண்டைமான் பகதூரை அடுத்து பதவியேற்ற ராமச்சந்திரத் தொண்டைமான் மிகச் சிறியவராக இருந்ததால், அரசு பரிபாலனம்ஒருகுழுவால் நிர்வகித்து வரப்பட்டது. காலஞ்சென்ற மன்னரின் விருப்பப்படி ராணி கட்டக்குறிச்சி ஆயி, சர்க்கிள் சைரோப நாயக், பவுஸ்தார் அப்பாவையர் ஆகியோர் அந்தக் குழுவில் அடங்கியிருந்தனர். பவுஸ்தார், அப்பாவையர் மிகுந்த செல்வாகுடன் விளங்கி வந்தார்.

இரண்டாண்டு காலம் இக்குழு சரிவரவே அரசு நிர்வாகத்தை நடத்தி வந்தது.

1841ல் குழுவில் ஒருவராயிருந்த பவுஸ்தார் அப்பாவையர்மீது குற்றம் சுமத்தி சிலர் சென்னை கவர்னருக்குப் புகார் மனுக்கள் அனுப்பினர். புகார் கொடுத்தவர்களில் காலஞ்சென்ற மன்னரின் மாப்பிள்ளைகளும் ராணியின் உறவினர்களும் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர். இப்புகார் மனுக்களின் விளைவாக ரெஸிடெண்ட் டெய்ஸி புதுக்கோட்

டையில் தங்கியிருந்து நாட்டு நிலவரத்தையும் மந்திரிகளின் போக்கையும் கவனிக்குமாறு பணிக்கப்பட்டார்.

1845 ஜூன்மாதம் 15ம்தேதி ராஜா இராமச்சந்திரத் தொண்டைமானுக்கும் அவரது சகோதரர் திருமலைத் தொண்டைமானுக்கும் திருமணம் செய்து வைக்கப்பட்டது. கல்லாக்கோட்டை ஜமீன்தாரின் இருபெண்களை இவ்வரசச் சகோதரர்கள் மணந்து கொண்டனர். இத்திருமணத்தின் போது அரசசகோதரர்களுக்குத் ஆங்கிலக் கும்பெனியாரால் தமது பொலிடிகல் ஏஜெண்டு மூலம் வெண்சாமரங்கள் பரிசாக அளிக்கப்பட்டன.

இத்திருமணத்திற்குப் பிறகு மூன்று ஆண்டுகள் கழித்து 1848 ஆகஸ்ட் 31ம்தேதியன்று ராஜா இராமச்சந்திரத் தொண்டைமான் நெடுவாசல் ஜமீந்தார் மகளைத் திருமணம் செய்து கொண்டார்,

1849 வரை புதுக்கோட்டை ரெஸிடென்சி பொறுப்பு தஞ்சை கலெக்டரிடம் ஒப்புவிக்கப்பட்டருந்தது. இவ்வாண்டு அதில் மாற்றம் ஏற்பட்டு மதுரை கலெக்டர் வசம் ஒப்புவிக்கப்பட்டது.

1851 ம் ஆண்டு அக்டோபர் மாதம் 14ம்தேதி தலைநகரில் மருத்துவமனை ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. இம் மருத்துவமனைக்கு பிளாக்பர்ன் ஞாபகார்த்தமாக 'பிளாக் பர்ன்' எஸ்கொயர்' என்று பெயர் சூட்டப்பட்டது.

1852 செப்டம்பர் மாதத்தில் மன்னரின் தாயாரான கட்டக்குறிச்சி ஆயி என்று அழைக்கப்பட்ட கமலாம்பா ராணி சாகேப் இயற்கை எய்தினர்,

1848ல் அப்பாவையரின் மகனான அண்ணுசாமி ஐயர் பவுஸ்தாராக நியமிக்கப்பட்டார். 1851ல் சைரோப நாயக்கின் மகனான கோபால் நாயக் உதவி சர்க்கிளாக நியமிக்கப்பட்டார். 1854ல்அண்ணுசாமி ஐயர் சர்க்கிளாக நியமிக்கப்பட்டார். உதவி சர்க்கிள் பதவி நீக்கப்பட்டது. மதுரை கலெக்டர் அலுவலகத்தில் மொழி பெயர்ப்பாளராக பணியாற்றி வந்த இராமசாமி ஐயர் என்பவர் ஆங்கிலக் கணக்

கெழுதும் முறைமை அறிமுகப்படுத்துவதற்காக கூடுதல் கர்பாராக நியமிக்கப்பட்டார்.

ராஜா இராமச்சந்திரத் தொண்டைமான் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்ட சில ஆண்டுகளுக்குப் பிறகு 1854 ஆரம்பத்தில் அரசுக்கு எதிராகக் கிளர்ச்சி ஒன்று தோன்றியது.

இக்கிளர்ச்சியை முன்னின்று நடத்தியவர்களில் வெங்கண்ண சேர்வைக்காரர், கிருஷ்ணன் பன்றி கொண்டார், முத்துசாமி பன்றி கொண்டார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். வெங்கண்ண சேர்வைக்காரர், இரகுநாதத் தொண்டைமான் காலத்தில் அரசுப் பணியில் இருந்தவர், அவரது ஒழுங்கீனமான நடத்தைக் காரணமாக வேலைநீக்கம் செய்யப்பட்டவர். அவர் சில ராணுவ அதிகாரிகளையும், குடிமக்களையும் அரசுக்கு எதிராகச்செயல்படுமாறு தூண்டினர். கட்டக்குறிச்சி பன்றி கொண்டார், முத்துசாமி பன்றி கொண்டார் ஆகியோர் அரசக் குடும்பத்தோடு உறவு கொண்டவர்கள். முத்துசாமி பன்றி கொண்டார் மன்னரின் சொந்த மைத்துனர் ஆவர்.

இக்கிளர்ச்சிக்கு சரியான காரணம் எதுவும் தெரியக் கிடைக்கவில்லை. மன்னரின் அடக்கு முறைதான் காரணம் என்பதாக கிளர்ச்சிக்காரர்கள் கூறியதாக பொதுவாகக் கூறப்பட்டது. 1854ம் ஆண்டின் நடுப்பகுதியில் ஆங்கிலயேர் படையொன்று புதுக்கோட்டைக்கு வந்து நிலைமையைச் சமாளிக்கும் அளவிற்கு இக்கிளர்ச்சி வலுப்பட்டிருந்தது.

இக்கிளர்ச்சியின் காரணங்களை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிக்குமாறு புதுக்கோட்டையின் பொலிடிகல் ஏஜெண்டான பார்க்கர் என்பவரை சென்னை கும்பெனி அரசு பணித்தது.

மிஸ்டர் பார்க்கரால் ஒரு அறிக்கை சமர்பிக்கப்பட்டது. அந்த அறிக்கையில் அடக்குமுறைக் குற்றச்சாட்டுகள் மன்னர் சம்பந்தப்பட்டவரை, பொறுத்தமற்றதென்றும், ஆனல் அரசரின் சில நடவடிக்கைகள் புரட்சியைத் தோற்றுவிக்கக் காரணமாயிருந்தன என்றும் குறிப்பிட்டிருந்தார்.

மேலும், நிதி விஷயங்களில் அரசருக்குள்ள அதிகாரத்தைக் கட்டுபடுத்த வேண்டுமென்றும் அவர் அதில் கருத்துத் தெரிவித்திருந்தார்.

இந்த அறிக்கையின் விளைவாக சென்னை கும்பெனி அரசால் மன்னரின் அதிகாரங்கள் குறைக்கப்பட்டன. பொலிடிகல் ஏஜெண்டுக்கு அரசு நிர்வாகத்தில் அதிக அதிகாரம் அளிக்கப்பட்டது. சர்க்கிள் வாயிலாக மன்னர் இடும் நியமனங்கள் பொலிடிகல் ஏஜெண்டின் பரிசீலனைக்கு உட்பட்டதாக ஆக்கப்பட்டது.

வில்லியம் பிளாக்பர்ன் காலத்திலிருந்து மராத்தி மொழி புதுக்கோட்டை அரசியலில் பெரும் செல்வாக்குப் பெற்று விளங்கியது. வில்லியம் பிளாக்பர்னுடன் தஞ்சையிலிருந்து வந்த மராத்திய அதிகாரிகள் புதுக்கோட்டை அரசின் முக்கிய பதவிகளை ஏற்று அரசின் கணக்கு வழக்குகள் நிர்வாகக் குறிப்புகள் அனைத்தையும் மராத்திய மொழியிலேயே நடத்தி வந்தனர். இது 1864 ம் ஆண்டுவரை நடைமுறையில் இருந்து வந்தது. இதற்கு எதிர்ப்பு வெகு நாளாக இருந்து வந்தது. அது இப்போது முற்றியது. எதிர்ப்பு வலுக்கவே 1858ல் மராத்தி கணக்கு முறைகளை ஒழித்து ஆங்கிலக் கணக்கு முறைகளை கொண்டுவர உத்திரவு பிறப்பிக்கப்பட்டது. ஆனால் ஆறு ஆண்டுகள் கழிந்த பிறகே 1864 பிப்ரவரி முதல் தேதிதான் இந்த உத்திரவு அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது.

1855, 1857ம் ஆண்டுகளில் சென்னையில் நடைபெற்ற கண்காட்சிகளில் புதுக்கோட்டையும் கலந்து கொண்டது. முதல் தர மெடல்களையும் பெற்றது.

1854ல் சர்க்கிளாக நியமிக்கப்பட்ட அண்ணுசாமி ஐயர், ஓர் ஆண்டுக்குள் மன்னரின் கோபத்திற்குள்ளானார். 1855 வாக்கில் அண்ணுசாமி ஐயர் உதவியின்றி கார்பார் ஜம்பு நாயக் மூலமாக மன்னர் அரசு நிர்வாகத்தை நடத்தி வந்தார். மேலும் அண்ணுசாமி ஐயரின் நடவடிக்கைகளால் பெரிதும் சினம் கொண்ட மன்னர், தமது அனுமதியின்றி அவர் நாட்டைவிட்டு வெளியே செல்லக் கூடாதென்று தடைவித்தி

தார். 1863 ம் ஆண்டில் அவருக்கு எதிராக முறையான குற்றச்சாட்டுகளும் சுமத்தப்பட்டன. இதற்கிடையில் அண்ணுசாமி ஐயர் இராஜினுமா செய்யவே, அவர்மீது தொடுக்கப்பட்டிருந்த வழக்கு விசாரணைகள் மன்னரால் திரும்பப் பெறப்பட்டன.

1883 டிசம்பரில் பவானி சங்கர் ராவ் என்பவர் சர்க்கிளாக (வட்ட அதிகாரி) நியமிக்கப்பட்டார்.

ராஜா ராமச்சந்திரத் தொண்டைமான் தன் வாழ்நாள் இறுதிவரை தமது கௌரவத்தையும் அந்தஸ்தையும் நிலை நாட்டிக் கொள்வதில் மிகுந்த கவனம் கொண்டிருந்தார் என்பது அவரது சில நடவடிக்கைகளிலிருந்து புலனுகிறது,

இதற்குச் சில உதாரணங்களாவன;

மன்னரின் சகோதரரான திருமலைத் தொண்டைமானுக்கு சின்ன அரண்மனை ஜாகீர் தரப்பட்டிருக்கவேண்டும். ஆனுல் 1864ம்ஆண்டுவரை அந்த அரண்மனை ஜாகீர் மன்னர் வசமே இருந்தது. பிறகு சென்னை அரசு சின்ன அரண்மனை ஜாகீரை திருமலைத் தொண்டைமானிடம் திரும்ப ஒப்புவிக்குமாறு அறிவித்தாகத் தெரிகிறது.

இதைவிட முக்கியமான நடவடிக்கைகள் 1866 பிப்ரவரி மாதத்திலும் மே மாதத்திலும் மன்னரால் பிறப்பிக்கப்பட்ட இரு உத்திரவுகளாகும்.

இவ்வுத்திரவுகளின் மூலம் சின்ன அரண்மனை ஜாகீரிலும் மேல அரண்மனை ஜாகீரிலும் கடைப்பிடிக்கப்பட்டுவந்த விஷே அந்தஸ்த்துக்குரிய வழக்கங்களில் சில நீக்கப்பட்டன. சின்ன அரண்மனை ஜாகீர்தாரின் காவலர்கள் அதிகாரத் தகுதியைக் குறிக்கும் கச்சை (Belt) அணிவது வழக்கமாயிருந்து வந்தது. இதுவும் அகற்றப் படவேண்டும் என்பது மன்னரது மற்ருெரு உத்தரவாகும். மேலும் மேல அரண்மனை ஜாகீர்தார் இராதாகிருஷ்ண தொண்டைமான் 'நகரா' 'சௌபத்' போன்ற வாத்யக் கருவிகளை உபயோகித்துக் கொள்ளக் கூடாது என்றும் தடுக்கப்பட்டது.

ராஜா ராமச்சந்திரத் தொண்டைமான் காலத்தில் பெர்லிடிகல் ஏஜெண்டு பொறுப்பு தஞ்சை கலெக்டரிடமும்

மதுரை கலெக்டரிடமும் மாறி மாறி ஒப்படைக்கப்பட்டு வந்தது. 1865 செப்டம்பர் மாதம் 27-ம் தேதிய ஆணைப்படி புதுக்கோட்டை பொலிடிகல் ஏஜன்ஸி பொறுப்பு தஞ்சை கலெக்டருக்கு மாற்றப்பட்டது.

அப்போது தஞ்சை கலெக்டராகப் பதவி வகித்தவர் ஜீ. வீ. மோரிஸ் என்பவராகும்.

இந்தக் கலெக்டரை நேரடியாக புதுக்கோட்டைக்குச் சென்று நிர்வாகநடைமுறைகளைப் பார்த்து அறிக்கை சமர்ப்பிக்குமாறு மேலிடம் பணித்தது.

அவ்வாறே செயல்பட்ட மோரிஸ் ஒரு அறிக்கை சமர்ப்பித்தார். அதில் ராணியின் மூன்று சகோதரர்களும் உடனடியாக புதுக்கோட்டையிலிருந்து வெளியேற்றப்பட வேண்டுமென்றும், அவர்கள் இருக்கும்வரை அமைதியும் சீரான நிர்வாகமும் இருக்காது என்றும் குறிப்பிட்டிருந்தார்.

அந்த அறிக்கையின் அடிப்படையில் சென்னை அரசு புதுக்கோட்டை சமஸ்தானத்தின் நிர்வாக யந்திரஅமைப்பை மாற்றி, 1867 ஆகஸ்ட் முதல் தேதி ஒரு ஆணையை பிறப்பித்தது. அந்த ஆணையின்படி பின்வரும் அலுவலகங்கள் ஏற்படுத்தப்பட்டன.

1. சர்க்கிள் பணியகம்
2. வருவாய்த் துறை உள்ளாட்சிப் பணியகம்
3. கிராம வருவாய்த்துறை பணியகம்
4. நகர் காவல்
5. சிறை
6. தபால் நிலையம்
7. பங்களா பராமரிப்புகள்
8. மராமத்துத் துறை
9. அப்காரி
10. காடு பாதுகாப்பு
11. நீதித் துறை

மேற்கண்ட அலுவலகங்கள் தொடர்பாக அதிகார மாற்றங்களும் செய்யப்பட்டன.

ஏற்கெனவே ஐந்து தாலுக்காக்களாகப் பிரிக்கப்பட்டிருந்த வருவாய்த் துறைப் பிரிவி, பெருமா நாடு, கவி நாடு தாலுக்காக்கள் ஏனைய தாலுக்காக்களுக்குள் உட்படுத்தப்பட்டு மூன்று தாலுக்காக்களாக குறைக்கப்பட்டது.

துணை கார்பார், இணை மாஜிஸ்ட்ரேட் என்ற பதவிகள் நீக்கப்பட்டு, அதற்குப் பதிலாக முதல் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் என்ற பதவி கொண்டு வரப்பட்டது.

கார்பார் பதவி தொடர்ந்து வைத்துக் கொள்ளப்பட்டது. இப்பதவி வகிப்பவர் தலைமை மாஜிஸ்ட்ரேட்டாக இருப்பதுடன் வருவாய்த் துறை தலைமைக் கண்காணிப்பாளராகவும் இருந்து தாசில்தார்களின் நடவடிக்கையைக் கவனிக்கும் பொறுப்பு கூடுதலாகக் கொடுக்கப்பட்டது.

ஏற்கெனவே இருந்து வந்த ஒன்பது நீதித் துறைப் பிரிவுகள் அகற்றப்பட்டு, நான்கு இரண்டாம் வகுப்பு மாஜிஸ்ட்ரேட் பதவிகள் ஏற்படுத்தப்பட்டன,

மேற்கண்ட பதவிப் பொறுப்புகளை மூன்று தாலுக்காக்களிலிருந்த மூன்று தாசில்தார்களும், புதுக்கோட்டை நகரில் தனியாக நியமிக்கப்பட்டிருந்த சப்-மாஜிஸ்ட்ரேட்டும் ஏற்றுக் கொண்டனர்.

ஆப்காரி, மோட்டர் பா (Mohter pha) ஆகியவற்றுக்காக இருந்த நிர்வாகப் பிரிவுகள் அகற்றப்பட்டன.

ஒவ்வொரு தாலுக்காவிற்கும் ஒரு வருவாய்த் துறை ஆய்வாளர் நியமிக்கப்பட்டார்.

பவுஸ்தார் பதவியில் கை வைக்கப்படவில்லை.

நிர்வாகப் பிரிவுகள் அதிகரிக்கப்பட்டதால் நிறையப் பேருக்கு வேலை வாய்ப்பு கிடைத்தது. ஆனல் சம்பளம் மிக மிக குறைவாய் இருந்தது.

### விருது எடுத்ததும், கொடுத்ததும்

ராஜா ராமச்சந்திரத் தொண்டைமான் தாறுமாறுகச் செலவு செய்து 1857–58 நடப்பு ஆண்டில் ஐந்தரை லட்சத்

துக்கு கடனாளியாகி விட்டார். மன்னர் பதவியில் இருப்பவர்கள் இப்படி கடனாளியாவது தவறு என்று குற்றம் கூறி, மன்னரின் மதிப்பை குறைக்கும் தன்மையில் தொண்டைமான் மன்னர்கள் அனுபவித்து வந்த "ஹிஸ் எக்ஸலன்ஸி" என்ற விருதை சென்னை அரசு பறித்துக் கொண்டது.

ஆங்கில ஆட்சியின் இச்செயல் சற்று மிகையானதே ஆகும். வேறொரு நடப்பை ஆராய்கையில் சென்னை அரசின் உள்நோக்கம் வேறாயிருக்க வேண்டும் என்று கருதுவதற்கு இடமுள்ளது.

1857ல் நடந்த இந்தியப் புரட்சி சுதேச மன்னர்களை மேலும் அடக்கி ஒடுக்க வேண்டும் என்ற குரோத உணர்வை ஏற்படுத்தியிருந்ததன் பிரதிபலிப்பாக ஆங்கிலேயர் புதுக்கோட்டையின்பாலும் ஆத்திரத்தை காட்டியிருக்கக்கூடும் எள்று கருதுவதற்கும் இடமுண்டு.

1859ல் பறித்துக் கொள்ளப்பட்ட "ஹிஸ் எக்ஸலன்ஸி" விருது, 1870ல் எடின்பரோ கோமகனின் இந்திய விஜயத்தின் கொண்டாட்டத்தை ஒட்டி திரும்ப அளிக்கப்பட்டது.

## பஞ்சமும் நிவாரணப் பணியும்

1876 முதல் 1878 வரை புதுக்கோட்டையில் பெரும் பஞ்சம் நிலவியது. பஞ்சத்தின் கொடுமையை குறைக்கும் வகையில் அரசினால் ப ச நிவாரணப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. இதன் நிமித்தம் புதுக்கோட்டையிலிருந்து மதுரைக்கு செல்ல சாலை போடும் திட்டம் மேற்கொள்ளப்பட்டது. தஞ்சையிலிருந்து மொத்தமாக அரிசி வாங்கி அடக்க விலைக்கே மக்களுக்கு விற்கப்பட்டது. கஞ்சித் தொட்டிகளும் ஏற்படுத்தப்பட்டன. ரூபாய் எட்டுக்கு குறைவாக ஊதியம் பெற்றவர்களுக்கு கூடுதலாக ஒரு ரூபாய் தரப்பட்டது.

பஞ்சம் தலை விரித்தாடிய இந்தச் சமயத்தில் ஒரு ஆடம்பரச் செலவு செய்ய வேண்டிய அவசியம் புதுக்கோட்டை அரசுக்கு ஏற்பட்டது. இங்கிலாந்து ராணியான விக்டோ

ரியா மகாராணியார் என்ற விருதை ஏற்றுக்கொள்ள இருந்ததை கொண்டாடும் வகையில் 1766 ஜனவரி மாதம் கோலாகலமாக ஒரு தர்பார் நடத்தப்பட்டது.

**வாரிசுக்கு தத்து எடுத்தல்**

ராஜா இராமச்சந்திரத் தொண்டைமானுக்கு ஒரு ஆண் குழந்தை வாரிசுக்கு இருந்தது. அதற்கு சிவராம ரகுநாதத் தொண்டைமான் என்று பெயரும் இடப்பட்டு வளர்ந்து வந்தது. துரதிருஷ்டவசமாக அப்பாலகனுக்கு வைசூரி கண்டு 1867ல் இறந்து விட்டான். இருந்த ஒரே ஆண் வாரிசும் இறந்துவிடவே வாரிசுக்கு ஒரு பிள்ளையை தத்து எடுத்து கொள்ள வேண்டிய அவசியம் தொண்டைமானுக்கு ஏற்பட்டது.

சகோதரரான திருமலைத் தொண்டைமானுக்கு ஒரு குமாரன் உண்டு. பெயர் பாலசுப்ரமண்ய ரகுநாதத் தொண்டைமான். இந்தப் பிள்ளையை மன்னர் தத்து எடுத்துக் கொண்டிருந்திருக்கலாம். ஆனல் அவர் விரும்பவில்லை. ஆரம்ப காலத்திலிருந்தே சகோதரர்களிடையே நிலவிய ஒற்றுமைதான் காரணமோ என்னவோ! தனது மூத்த மகளின் மகனை சுவீகாரம் எடுத்துகொள்ள முற்பட்டார்.

மூத்த மகளின் பெயர் பிரகதாம்பாள் அம்மணி. அவள் குழந்தைசாமி பல்லவராயர் என்பவருக்கு மணம் முடித்து கொடுக்கப்பட்டிருந்தாள். அத்தம்பதிகளுக்கு ஐந்து குழந்தைகள் பிறந்தன. ஆண்களில் மூன்று; பெண்கள் இரண்டு. கடைகுட்டியாகவும் மூன்ருவது ஆண் மகவாகவும் பிறந்தவன் பெயர் மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான். இவனையே தனக்கு வாரிசாக தத்து எடுத்து கொண்டார் இராமச்சந்திரத் தொண்டைமான்.

தத்து எடுத்துகொண்ட விபரத்தை முறைப்படி இந்திய அரசுக்குத் தெரிவித்தாக வேண்டும். எனவே இதனை 1877 மார்ச் மாதம் 2ம் தேதி இந்திய அரசிற்கு விண்ணப்பம்மூலம் அறிவித்தார். தனக்குப் பிறகு வாரிசு உரிமை சச்சரவுகள் ஏற்படுவதைத்தவிர்த்திடும்வாயில் மார்த்தாண்ட பைரவத்

தொண்டைமானை தாம் தத்து எடுத்துக் கொண்டிருப்பதாக வும், இதை அங்கீகரிக்குமாறும் பொலிடிகல் ஏஜண்ட் மூலம் கோரப்பட்டது. அவ்விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டு, 1878 ஜனவரி 23ம் தேதி பொலிடிகல் ஏஜண்ட் மூலம் அங்கீ காரம் கொடுக்கப் பெற்றது.

இதைக் கொண்டாடும் வகையில் 1878 பிப்ரவரி 10ம் தேதியன்று ஒரு சிறப்பு தர்பார் கூட்டப்பட்டது.

## 17. புதிய பதவியும் ஏ. சேஷையாவும்

மன்னர் இராமச்சந்திரத் தொண்டைமான் கலைகளிலும் இலக்கியங்களிலும் மிகுந்த ஆர்வம் கொண்டவர். இளகிய மனமுடையவராதலால் கையும் பெரிதாக இருந்தது. எனவே அரசின் செலவு அதிகரித்து சுமையும் மிகுந்தது. இதனுல் சமஸ்தானத்தின் பொருளாதார நிலை மிகவும் கவலைப்படத் தக்கதாகி விட்டது. இந்தநிலையைச் சீர்படுத்த தக்கவர் சேஷய்யா சாஸ்திரிகள் என்று உணர்ந்து அவரை புதுக் கோட்டை திவானுக நியமித்துக் கொள்ளுமாறு ஸர். டி. மாதவராவ் யோசனை கூறினுர். அவரது முயற்சியின் பலனுய் 1878 ஆகஸ்ட் 8ம்தேதி ஏ.சேஷய்ய சாஸ்திரி புதுக்கோட்டை சமஸ்தானத்தின் திவானுகப் பதவியேற்ருர்.

தொண்டைமான் அரச பரம்பரையின் உயர்வுக்கும் புதுக்கோட்டையின் நலன்களுக்கும் வில்லியம் பிளாக்பர்ன் எவ்வளவு சிறப்பான அக்கரை காட்டினுரோ, அதற்கு ஈடா கச் செயலாற்றிய திவான் சேஷய்யா சாஸ்திரிகளைப் பற்றி இங்கே குறிப்பிடுவது அவசியமாகும்.

வெட்டாற்றின் தென்கரையிலிருக்கும் அமராவதி என் னும் குக்கிராமத்தில் சேஷய்யா சாஸ்திரி ஓர் ஏழைப் பிரா மணக் குடும்பத்தில் 1829ம் ஆண்டில் பிறந்தவர். ஆங்கிலப் படிப்பில் நாட்டம் கொண்டு சென்னையில் இருந்து தனது மாமன் வீட்டிற்குச் சென்ருர். அங்கு ஆண்டர்ஸன் பள்ளி

யில் சேர்ந்து படித்துக் கொண்டிருக்கையில் அப்பள்ளி நிர்வாகஸ்தர்கள் மாணவர்களை கிறிஸ்துவ மதத்திற்கு மாற்றும் முயற்சியில் ஈடுபடவே, இரண்டாண்டு படிப்போடு அப்பள்ளியிலிருந்து விலக வேண்டிய கட்டாயம் சேஷய்யாவுக்கு ஏற்பட்டது. பின்னர் பிரிப்பரேட்ரி என்னும் பள்ளியில் சேர்ந்து படிப்பைத் தொடர்ந்தார். தாய் வீட்டைப்போலவே மாமன் வீடும் வறுமையில் இருந்ததாலும் ஊக்கம் தளராது படிப்பில் தீவிர கவனம் செலுத்தி வந்தார். மிக இக்கட்டான இந்த நிலையில் பச்சையப்பர் அறநிலையக் கட்டளையிலிருந்து உதவித்தொகை கிடைத்தது. இத்துடன் அரசினர் உதவித்தொகையும் கிட்டவே பள்ளிப்படிப்பை நன்கு முடித்தார். 1848-ல் வருவாய் துறை குழுமத்தில் (Revenue Board)ரூபாய் இருபத்தைந்து மாதச் சம்பளத்தில் எழுத்தாளராகப் பணியில் சேர்ந்தார். பணியகக் கோப்புகள் வரைவதில் மெத்தப் புகழ் பெற்றிருந்த ஸர். ஹென்றி பைக்ராப்டஸின் கீழ் பணி ஏற்றார். விரைவில் ஸர் வால்டர் எல்லியர்ட்ஸின் தனி உதவியாளராக உயர்ந்தார். 1851 மே மாதத்தில் மசூலிப்பட்டிணத்தில் தலைமை செரிஸ்தராகவும் பதவி உயர்வு பெற்றார். 1859 -ல் டெபுடி கலெக்டராகவும் தனி உதவியாளராகவும் சிறப்புப் பணியாற்றினர். 1866.ல் கருவூலத் துணை கலெக்டராகவும் 1868ல்வருவாய் வாரியத்தின் தலைமைச் செரிஸ்தராகவும் பதவி ஏற்றம் பெற்றார்.

1872ஜூலையில் ஸர். டி.மாதவராவை அடுத்து திருவாங்கூரின் திவானாக நியமிக்கப்பட்டார். ஐந்து வருடகாலம் அங்கு திவானாக இருந்து அந்த சமஸ்தானம் பலவிதங்களிலும் முன்னேற்றம் காணப் பாடுபட்டார். 1877ல்ரூ500 பென்ஷனோடு ஓய்வு பெற்றார்.

ஓய்வு பெற்றவர் ஒய்ந்து இருந்து விடவில்லை. 1878-ல் தஞ்சை, திருச்சி ஆகிய மாவட்டங்களில் பஞ்சம் தலைவிரித்தாடியது. அப்போது மிஸ்டர் வெப்ஸ்டர் என்பவரோடு சேர்ந்து மக்களின் துயர் துடைக்கும் சமூக சேவையில் ஈடுபட்டார். இச்சமயத்தில் மெட்ராஸ் லெஜிஸ்லேடிவ் கவுன்

ஸிலின் உறுப்பினராய் நியமிக்கப்பட்டார். வைஸ்ராய் லெஜிஸ்லேடிவ் கவுன்ஸிலிலும் அவருக்கு ஓரிடம் தரப்பட்டது. ஆனால் என்ன காரணத்தினாலோ பின்னதை அவர் ஏற்றுக் கொள்ளவில்லை.

இந்த சமயத்தில்தான் ஸர். டி. மாதவராவின் முயற்சியின் பயனாக சேஷய்ய சாஸ்திரி 1878 ஆகஸ்டில் புதுக்கோட்டையின் 'சர்க்கிள்' ஆகப் பதவி ஏற்றார்.

பதினாறு வருடங்கள் இந்தப் பதவியை வகித்து புதுக்கோட்டையை பல வகைகளிலும் நல்ல முன்னேற்றம் காண வைத்தார். புதுக்கோட்டை நகரின் புது அமைப்பிற்கும், நேர்த்தியான கட்டிடங்களும், சுகாதாரமான நகர் அமைப்பிற்கும் இவரே காரணமாகும். இவரைப் புதிய புதுக்கோட்டையினை நிர்மாணித்த சிற்பி எனலாம்.

**சீர்திருத்தங்கள்**

இது நாள் வரை நிலவரி வசூல் செய்வதில் அமானி முறையைப் பின்பற்றி வந்தது. அதாவது அறுவடை காலத்தில் களத்து மேட்டில் அரசு அதிகாரி முன்னிலையில் நெல் அடிக்கப்படும். விளைச்சலின் அளவை அதிகாரி குறிப்பெடுப்பார். இதில் அரசுக்குச் சேர வேண்டிய பகுதியை அரசின் சார்பாக அந்த அதிகாரி பெற்றுக்கொள்வார்.

இந்த முறை அதிகாரிகளை ஊழல்பேர்வழிகளாக்கி, அரசுக்குச் சேரவேண்டிய வரி சரிவர சேர முடியாத நிலையைத் தோற்றுவித்து வந்தது. இதை உணர்ந்த சேஷய்ய சாஸ்திரி இம்முறையை ஒழித்து ரயத்து வாரி முறையை ஏற்படுத்தினார்.

மிகவும் சீர்கேடடைந்திருந்த தேவஸ்தான நிர்வாகத் துறை ஒழிக்கப்பட்டது. கோவில்களையும், அவற்றின் சொத்துக்களையும் தக்க வரவு செலவுக் கணக்குடன் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு தாசில்தாருக்கு மாற்றித் தரப் பட்டது.

கோயில் நடைமுறைக் காரியங்களை கண்காணிப்பதற்காக இரு கண்காணிப்பாளர்கள் நியமிக்கப்பட்டனர். இவர்களில் ஒருவர் புதுக்கோட்டை சமஸ்தானத்திற்குள் இருக்

கின்ற கோவில்களைக் கண்காணித்தார். மற்றவர் சமஸ்தானத்திற்கு வெளியே பிரிட்டிஷ் பிரதேசத்தில் இருக்கும் கோவில்களை (சமஸ்தானத்தின் செலவில் விழாக்கள் நடத்தப்படும் கோவில்களை) கண்காணித்தார்.

மேல அரண்மனையின் பெருவாரியான நில புலன்களின் வருமானம் கடன்காரர்களுக்கு வட்டி கொடுப்பதற்கே சரியாயிருக்கிற நிலையில் இருந்தது. எனவே மேல அரண்மனை 1881ல் அரசினுல் எடுத்துக் கொள்ளப்பட்டது. இதற்கு ஈடாக மேல அரண்மனை ஜாகீர் குடும்பத்திற்கு ஆண்டொன்றுக்கு ரூபாய் 15,000 வீதம் தருவதென்ற ஒப்புதலோடு இது மேற்கொள்ளப்பட்டது.

இவ்வித நடவடிக்கைகளால் புதுக்கோட்டை சமஸ்தானத்தின் பொருளாதார நிலை ஓரளவு சரிப்பட்டு முன்னேறியது.

1883-84ல் புதுக்கோட்டையிலிருந்து குளங்கள் அனைத்தும் சுத்தம் செய்யப்பட்டன. இவற்றுள் நகரின் மத்தியில் பழைய அரண்மனைக்குக் கிழக்கே இருக்கும் பல்லவன் குளமும் தூர்வாறி, சேறு நீக்கப்பட்டது. சேறு எடுத்து சுத்தப்படுத்தப்பட்ட பல்லவன் குளத்திற்கு 'சிவகங்கை' என்று புதிய பெயரை சேஷய்ய சாஸ்திரி சூட்டினுர். ஆனல் பொது மக்கள் இன்றளவும் அக்குளத்தை பல்லவன் குளம் என்றே அழைத்து வருகின்றனர்.

### ஹிஸ் ஹைனஸ் விருது

பலவகைகளில் புதுக்கோட்டை சமஸ்தானத்தை நன்னிலைக்குக் கொண்டுவந்த திவான் சேஷய்ய சாஸ்திரி தனது மன்னரும் அதற்கேற்ப கௌரவிக்கப்பட வேண்டுமென்று கருதினுர். எனவே மன்னரின் அந்தஸ்து மேலும் உயர்த்தப்படவேண்டுமென்று முறைப்படி இந்திய அரசுக்குத் தெரிவிக்கப்பட்டது. இந்திய அரசாங்கத்தாரால் இது ஏற்றுக்கொள்ளப்பட்டது. பதினேரு குண்டுகள் முழங்கி புதுக்கோட்டை மன்னரை கௌரவிக்கும் அந்தஸ்து அளிக்கப்பட்

டது. ஏற்கனவே ,ஹிஸ் எக்ஸலன்ஸி' என்ற விருது மன்னருக்கு அளிக்கப்பட்டிருந்தது. அதற்கும் உயர்வான மதிப்புடைய 'ஹிஸ் ஹைனஸ்' என்ற விருதும் இப்போது புதுக்கோட்டை மன்னருக்கு அளிக்கப்பட்டது.

மேற்கண்ட விருதும் அந்தஸ்த்து உயர்வும் கிடைத்தைக் கொண்டாடும் விதத்தில் 1884 மே மாதம் 19 ம் தேதி ஒரு பெரிய தர்பார் கூட்டப்பட்டது.

இராஜா இராமச்சந்திரத் தொண்டைமான் காலத்திற்கு முன்னதாக தொண்டைமான் மன்னர்களுக்கு 'ஸ்ரீபிரகதாம்பாதாஸ்' என்ற முன் அடைமொழி கிடையாது. குல தெய்வமான அம்பிகையின் பெயரும் இடம் பெறவேண்டுமென்ற வழக்கத்தை இராமச்சந்திரத் தொண்டைமான் தான் தொடங்கி வைத்தார். இதற்கு ஆங்கில அரசிடமிருந்து அனுமதியும் பெற்ருர். 'ஸ்ரீ பிரகாதாம்பாள்தாஸ்' என்பதாகக் குறிப்பிடும் SBD என்ற முன் அடைப் பெயரை இவருக்கு பின் வந்த அரசர்களும் சூடிக்கொள்ளலாயினர்.

புதுக்கோட்டை அரசின் மிகப் பெரிய மூன்று உத்தியோகங்கள் சர்கிள், கர்பார், டெபுடி கர்பார் என்பவையாகும். இப்பதவிகளின் பெயர்கள் முறையே திவான், திவான் பேஷ்கர், உதவி பேஷ்கர் என்பதாக மாற்றப்பட்டன. இப்பெயர் மாற்றம் 1885 ஜூலை முதல் தேதி முதல் நடைமுறைக்கு வந்தது.

1586 பிப்ரவரி 2,3,4, ஆகிய தேதிகளில் சென்னையில் கவர்னராக இருந்த ஸர். மௌண்ட் ஸ்டுவர்ட் கிராண்ட் டர்ப் புதுக்கோட்டைக்கு வருகை தந்தார். புதுக்கோட்டை வரலாற்றில் சென்னை கவர்னர் புதுக்கோட்டைக்கு வருகை தருவது இதுதான் முதல் தடவையாகும். எனவே அவருக்கு சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டு, பெரிய தர்பார் ஒன்றும் கூட்டப்பட்டது.

இதுவே ராஜா இராமச்சந்திர தொண்டைமான் நடத்திய கடைசி தர்பாராகும். இரண்டு மூன்று மாதத்திற்கெல்லாம் அதாவது 1886 ஏப்ரல் 15ம் தேதியன்று இயற்கை எய்தினர். அப்போது அவருக்கு வயது ஐம்பத்தி ஏழு.

## 18. மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான்

மார்த்தாண்ட பைவரவத் தொண்டைமானுக்கு முடி சூட்டப்பட்டபோது அவருக்கு வயது பதினென்று. 1886மே 2ம்தேதியன்று ஹிந்து முறைப்படி திருக்கோகர்ணம் ஸ்ரீபிரகதாம்பாள் சன்னதியில் பட்டாபிஷேக விழா நடத்தப்பட்டது. இதற்குப் பிறகு இரண்டு மாதம் கழித்து ஜூலைமாதம் எட்டாம் தேதியன்று அரசாங்க முறைப்படி பொலிடிகல் ஏஜெண்டினல் அரசிளங்குமரர் அரியணையில் அமர்த்தப் பட்டார்.

இம்மன்னர் சிறுவயதிலிருந்ததால் ராஜ்ய காரியங்களை நடத்திச் செல்லும் பொறுப்பும் இளமன்னரைக் காத்துவரும் பொறுப்பும் திவான் சேஷய்ய சாஸ்திரிகளுடையதாயிற்று. 1885 வரை சர்க்கிளாகவும், பின்னர் திவானுகவும் பணியாற்றிய சேஷய்ய சாஸ்திரி இப்போது ரீஜண்ட் திவானுகவும் பணியாற்ற நேர்ந்தது.

இவ்விள மன்னன் திறமை மிக்கவராக விளங்கித் தகுந்த முறையில் கல்வி போதிக்கப்பட்டு வந்ததுடன் இதர அறிவு வளர்ச்சிக்கும் தக்க பயிற்சியாளர்கள் நியமிக்கப்பட்டனர். ஆரோக்கிய வளர்ச்சிக்கும் ஒரு பொறுப்பாளர் ஏற்படுத்தப் பட்டார். ஆங்கிலம், வடமொழி, பிரெஞ்சு ஆகிய மொழிகளும் அவருக்குப் போதிக்கப்பட்டு வந்தது. ஓவியம் வரைவதிலும், வேட்டையாடுவதிலும் இளம் மன்னருக்கு மிகுந்த ஆர்வமிருந்தது. சுற்றுப் பயணங்களை மேற்கொள்வது வளரும் மன்னரின் அனுபவ அறிவைப் பெருக்கும் என்ற எண்ணத்தோடு பல பயணங்கள் அவரது இளமை காலத்தில் ஏற்பாடு செய்துத் தரப்பட்டது. அவரது பதினைந்தாவது வயதில் அதாவது 1889 ல் சென்னைக்குச் சென்றுஇரண்டுமாத

காலம் தங்கியிருந்தார். இச்சமயத்தில் அங்கு பலரைச் சந்தித்துப்பழகும் வாய்ப்பு கிடைத்தது. சென்னையிலிருந்து திரும்புகிற போது பாண்டிச்சேரிக்கும் சென்றார். பிரெஞ்சு கவர்னரின் விருந்தினராய் இருநாட்கள் தங்கினார். அடுத்த ஆண்டுமறுமுறையும் சென்னைக்குச் சென்றபோது திருவாங்கூர் மகாராஜாவின் நட்பு கிடைத்தது. பிறகு சென்னையிலிருந்து மைசூருக்கும், பெங்களூருக்கும் அரசு விருந்தினராய் சென்று திரும்பினார்.

லோகானுபவம் மன்னருக்குப் பெரிதும் பயன்தரும் என்று செய்யப்பட்ட இந்தப் பயண ஏற்பாடுகள் ஒரு விதத்தில் மாறுபட்ட நடைமுறையை மன்னரின் இளமனதில் பதித்து விட்டதாகத் தோன்றுகிறது. இதற்குப் பின், மன்னர் மார்த்தாண்ட வைரவத் தொண்டைமான் பெரும்பாலும் தலைநகரில் இராமல் வெளியிடங்களிலேயே தங்குவதை வழக்கமாக வைத்துக் கொண்டுவிட்டார். 1891லேயே திருச்சியில் தங்கியிருப்பது வழக்கமாகி விட்டது! ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்வதற்கு முன் 1893ல் வடஇந்தியா சுற்றுப் பயணத்தை மேற்கொண்டார். இந்த இளம் மன்னர் அப்பயணத்தில் பம்பாய், அலகாபாத், காசி கல்கத்தா ஆக்ரா, அகமதாபாத், பரோடா ஆகிய இடங்களுக்குச் சென்று வந்தார்.

1894 நவம்பர் 26ல் மன்னர் மார்த்தாண்ட பைரவத் தொண்டைமானுக்கு 19 வயது பூர்த்திபெறவே அரசின் நிர்வாகப் பொறுப்பை அவரிடம் ஒப்புவிக்க வேண்டியதாயிற்று. இதற்காகக் கூடிய ஒரு சிறப்பு தர்பாரில் சென்னை கவர்னராக லார்டுவென்லாக் (Lord Wenlock)நாட்டின் நிர்வாகப் பொறுப்பையும் அதிகாரங்களையும் மார்த்தாண்டனிடம் மன்னர் ஒப்புவித்தார்.

இதுவரை புதுக்கோட்டை சமஸ்தானத்தின் திவானாகவும் அரசரின் பாதுகாவலராயும் திறம்பட சேவை செய்து வந்த சேஷய்ய சாஸ்திரியார் தமது பதவி பொறுப்புகளிலிருந்து விலகி ஓய்வு பெறுூர்.

இங்கே திவான் சேஷய்ய சாஸ்திரியார் அவர்களின் ஆட்சித் திறமையையும் ஆற்றிய அருந்தொண்டுகளையும் அவசியம் குறிப்பிட்டாக வேண்டியுள்ளது. அவர் பதவி யேற்றுப் பணியாற்றிய எட்டாண்டுகள் புதுக்கோட்டை வரலாற்றில் ஒரு பொற்காலம் என்றுகூடக் கூறலாம். இக்காலத்தில் பல நற்காரியங்கள் நடைபெற்றன.

புதுக்கோட்டை நகர அமைப்பு முற்றிலும் சுகாதார முறைப்படி மாற்றி அமைக்கப்பட்டது. இப்போது இருந்த வரும் சத்தியமூர்த்தி ரெஸ்ட் அவுசிற்கு எதிரே ஆர்ச் இருக்கும் இடம் முன்பு ஒரு சேரியாய் இருந்தது. அது அகற்றப்பட்டு சுத்தமான காற்று நகருக்குவர வழி செய்யப்பட்டது. புதுக்குளம் நன்கு செப்பனிடப்பட்டு நகருக்குச் சுத்தமான குடிநீர் வழங்கும் திட்டம் செயல்படுத்தப்பட்டது. தனியார் வீடுகளிலும் பல்வேறு இடங்களிலும் இருந்த அரசு அலுவலகங்களுக்கு நல்ல கம்பீரமான கட்டிடங்கள் கட்டி முடிக்கப்பட்டன. புதுக்கோட்டை மன்னர் கல்லூரி தற்போதுள்ள மாவட்ட நீதிமன்றங்களும் துணைமாவட்ட ஆட்சியர் பணியகம் கருவூலம் ஆகியவை நடைபெறும் பொதுத் துறைப் பணியகம் மருத்துவமனை ஆகியவை இக்காலத்தில் கட்டிய கட்டிடங்களின் கட்டிடக் கலைச் சிறப்பிற்கு நல்ல சான்றுகளாக இன்றும் விளங்குகின்றன.

இவை தவிர பாசனத்திற்கு உதவும் குளங்கள் அத்தனையும் தூர் எடுத்துச் செப்பனிடப்பட்டன. திருச்சி, தஞ்சை மதுரை ஆகிய பெருநகர்களுக்குச் செல்லும் பாதைகளும் சீராக அபிவிருத்தி செய்யப்பட்டன.

### மண் உப்புத் தடைச் சட்டம்

புதுக்கோட்டையில் மண்ணுப்பு காய்ச்சும் முறை ஏற்கெனவே வெகுவாகப் பழக்கத்தில் இருந்தது. இம்மண்ணுப்பின் விலை பிரிட்டிஷ் பகுதிகளில் தயாரிக்கப்படும் கடல் உப்பைவிட சகாயமாகஇருந்ததால்புதுக்கோட்டையிலிருந்து மண் உப்பு பிரிட்டிஷ் பகுதிக்கு கடத்தப்பட்டு நன்கு

விற்பனையாயிற்று. இதைக் கண்ட ஆங்கில அரசு கடத்தலைத் தடுக்க ஆவன செய்திருக்கலாம்; அதை விட்டுவிட்டு புதுக்கோட்டையில் மண்ணுப்பு தயாரிப்பதை தடைசெய்து விட முயற்சித்து புதுக்கோட்டை அரசுக்கு கோரிக்கை விடுத்தது. 1817-ம் ஆண்டே இந்தத் தகரூர் எழுப்பப்பட்டது. இதுபற்றிய கருத்து வேற்றுமை ராஜா ராமச்சந்திரத் தொண்டைமான் காலத்தில் 1881-82-ல் மேலும் வலுப்படுத்தப்பட்டது. இதுபற்றி நடைபெற்ற பேச்சு வார்த்தையில் புதுக்கோட்டை அரசு தம் பிரதேசத்தில் மண்உப்பு காய்ச்சுவதைத் தடைசெய்ய வேண்டுமென்றும், இதனுல் ஏற்படும் இழப்பை ஈடுசெய்ய பிரிட்டிஷ் அரசு நஷ்ட ஈட்டுத்தொகை கொடுப்பதென்றும் கருத்துக்கள் உருவாக்கப்பட்டன. புதுக்கோட்டை அரசு இதற்கு இணங்கிய சமயத்தில் மற்ருெரு பிரச்சினை தலைதூக்கியது. மண்ணுப்பு காய்ச்சத் தடை விதித்தபோதிலும் கள்ளத் தனமாகக் காய்ச்ச வாய்ப்புகள் உண்டு என்றும் அதைக் கண்காணிக்க ஒரு அதிகாரி நியமிக்கப்படுவது அவசியம் என்றும் கூறிய பிரிட்டிஷ் அரசு அந்த அதிகாரி பிரிட்டிஷ் அலுவலராகவே இருக்க வேண்டுமென்று வற்புறுத்தியது.

இதனை காலற்சென்ற ராஜா ராமச்சந்திரத் தொண்டைமான் எதிர்க்கவே உடன்படிக்கை ஏற்படுவதில் காலதாமதம் ஏற்பட்டது. இறுதியாக 1887-ல் தான் உடன்படிக்கை உருவானது. அதன்படி ஆங்கில அரசு புதுக்கோட்டை தனியரசுக்கு ஆண்டு ஒன்றிற்கு ரூ. 38,000 நஷ்டஈடு தருவதென்றும் மண்ணுப்பு தயார் செய்வது புதுக்கோட்டை தடை செய்வதென்றும் ஒப்பந்தமாயிற்று. இந்த ரூ, 38,000ல், ரூ15,000 புதுக்கோட்டை அரசிற்கு ஏற்படும் வரி இழப்பை சரி செய்வதற்கும் ரூ. 13,000 மண் உப்பு தயாரித்து வந்த ஏழைகளுக்கு நிவாரணமளிக்கும் வகையில் வீட்டு வரியை ரத்துசெய்து அதன் மூலம் பள்ளம் விழும் வருவாயை ஈடுசெய்து கொள்வதற்கும் ரூ. 10,000 மண் உப்புத் தடைச் சட்டத்தை அமுல்படுத்தும் நிர்வாகச் செலவுக்கெனவும் செலவு வகை பிரிக்கப்பட்டது.

**நிலத் தீர்வையில் மாற்றம்**

ஏற்கெனவே வரி விலக்கு அளிக்கப்பட்டு இனும் நிலங்கள ளாக கைவினைஞர்களுக்கும், கோயில் திருப்பணிகளுக்கும் உற்சவக் காரியங்களுக்காகவும் ஆள் ஜீவிதமாக ராணுவத்தில் சேவை புரிந்தவர்களுக்கும் சுமார் மூன்று இலட்சம் ஏக்கர்கள் வழங்கப்பட்டிருந்தன. (ஆள் ஜீவிதம் என்றால் ஒரு குடும்பத்திற்குப் போதுமான 3 ஏக்கர் நஞ்சை நிலமாகும்.)

கோவில் திருப்பணிகளுக்காகவும், உற்சவக் காரியங்களுக்கும் அளிக்கப்பட்டிருந்த இனும்நிலங்களும் குறிப்பிட்ட காரியங்களுக்குப் பயன்படுத்தாது சொந்தத்திற்குப் பயன் படுத்தப்பட்டு வந்தாலும், அத்தகைய நிலங்கள் கைவசப் படுத்தப்பட்டன. 1880ல் தேவைப்பட்ட ராணுவச் சேவை இப்போது தேவைபடாததால், ராணுவத்தில் பணி புரிந்தவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்த நிலங்களுக்கு நிலவரி விதிக்கப்பட்டது. இதன் மூலம் சுமார் ஒரு லட்சம் ரூபாய் உபரியாக அரசுக்கு கிடைக்கலாயிற்று.

1887-ல் ஜனவரி மாதம் நிர்வாகத் துயையும் கட்டுப் பாட்டுக்கு உட்பட்டதாக மூன்று நீதிபதிகள் கொண்ட தலைமை நீதிமன்றமும் ஏற்படுத்தப்பட்டது. இது சேஷய்யா சாஸ்திரியாரின் "ஏஜெண்டு" ஆட்சிக் காலத்தில் செய்யப் பட்ட முக்கிய மாற்றமாம்.

சேஷய்யா சாஸ்திரியார் பதவியிலிருந்து விலகிய பிறகு, அந்த ஸ்தானத்தில்அவரின்கீழ் உதவி திவானாக இருந்து பணி யாற்றிய ஆர். வேதாந்தாச்சாரியார் என்பவர் நியமிக்கப் பட்டார்.

**மன்னரின் ஐரோப்பியப் பயணமும் ஆட்சிக் குழுவும்**

இந்தியாவின் பல பகுதிகளைச் சுற்றிப் பார்த்த மார்த்தாண்ட மன்னனுக்கு ஐரோப்பிய நாடுகளையும் கண்டுவர ஆவல் ஏற்பட்டது. அந்த எண்ணம் வலுப்படவே 1898-ல் மேலை நாடுகளுக்கு செல்லுவதற்கான ஏற்பாடுகளில் ஈடுபட்

டார், தாம் வெளிநாட்டில் இருக்கும்போது நாட்டின் நிர்வாகத்தை கவனித்துக்கொள்ள ஒரு ஆட்சிக் குழுவை ஏற்படுத்த வேண்டியதாயிற்று. இக்குழுவில் இருவர் அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டனர். ஒருவர் திவான், மற்றவர் மன்னரால் நியமிக்கப்பட்டவர். 'கவுன்சிலர்' என்று குறிப்பிடப்பட்டார்.

பிரிட்டிஷ் அரசில் துணைமாவட்ட ஆட்சித் தலைவராகப் பணியாற்றி வந்த மன்னரின் மூத்த சகோதரர் விஜயரகுநாத பல்லவராயர் ஆட்சிக் குழுவில் ஒருவராக நியமிக்கப்பட்டார். இவருக்கு விஜய ரகுநாத துரை ராஜா என்ற மற்றொரு பெயரும் உண்டு. ஆட்சிக் குழுவில் ஒருவராகப்பதவியேற்ற பிறகு பெரும்பாலும் இப் பெயரிலேயே அழைக்கப்பட்டு வந்தார்.

இந்த ஆட்சிக் குழு 1909-ல் மூவர் அடங்கிய குழுவாக மாற்றம் செய்யப்பட்டது. இதன்படி குழுவில் ஒரு நீதிபதியும், கண்காணிப்பாளராக ஒரு ஐ.சி.எஸ். ஆபீஸரும் கூடுதலாக இடம்பெற்றனர்.

1898-ல் ஏப்ரல் மாதத்தில் மன்னர் மார்த்தாண்ட தொண்டைமான் "சைனு" என்னும் கப்பலில் ஐரோப்பிய பயணத்தை மேற்கொண்டார். அக்கப்பல் ஏடனுக்கு அருகே பழுதடைந்துவிட்டதால், வேறொரு கப்பலில் தனது பயணத்தை மேற்கொண்டார். நேபில்ஸ், பிளாரன்ஸ், ரோம் போன்ற இத்தாலிய இடங்களில் உள்ள கலைச் செல்வங்களை கண்டு களித்தார். பிறகு இங்கிலாந்து சென்று வேல்ஸ் இளவரசரான ஏழாம் எட்வர்டு, விக்டோரியா மகாராணி ஆகியோரை சந்தித்தார். இவ்விதமாக ஐரோப்பிய பயணத்தை முடித்துக்கொண்டு ஆண்டு இறுதியில் புதுக்கோட்டைக்கு திரும்பினர். புதுக்கோட்டை மக்கள் அவருக்கு வரவேற்பு ஒன்று அளித்தனர்.

ஐரோப்பிய பயணத்தின்போது இங்கிலாந்து சென்று பிரிட்டிஷ் இளவரசரையும், விக்டோரியா மகாராணியையும் சந்தித்து திரும்பிய நிகழ்ச்சியின் நினைவாக ஒரு கல் மண்டபம் கட்டப்பட்டது.

அக்கட்டிடம் தற்பொழுது வடக்கு ராஜ வீதியில் உள்ள நகர மண்டபமேயாகும்.

**பிரதிநிதிச் சபை—1902**

முடியாட்சியில் உள்ள மக்களுக்கு ஓரளவிற்கு ஜன நாயகச் சலுகைகளை அளிக்கும் முறையில் 1902.ல் ஏற்படுத்திய பிரதிநிதிச் சபை (Representatives Assembly) மிக விரைவிலேயே புதுக்கோட்டை மக்களை ஜனநாயக ஆட்சிக்குத் தகுதியானவர்களாக ஆக்கிவிட்ட பெருமை உடையதாகும். முப்பது அங்கத்தினர்களைக் கொண்ட இச்சபையின் அங்கத்தினர்கள் முதலில் ஆட்சிக் குழுவினால் தேர்ந்தெடுக்கப்பட்டு நியமிக்கப்பட்டனர். ஆட்சிக் குழுவினர் அரசின் துறைத் தலைவர்களில் சிறந்து விளங்கியவர்களையே தேர்ந்தெடுத்து பிரதிநிதிச் சபையில் அங்கத்தினராக நியமித்தனர். இச்சபை ஆண்டுக்கு ஒருமுறை கூட்டப்பட்டது. இதில் அரசுத் துறைகள் சாதித்தவையும், சாதிக்கத் திட்டமிட்டு இருப்பவையும் அங்கத்தினர்களுக்குக் கூறப்பட்டது. அவற்றின் அடிப்படையில் அங்கத்தினர்கள் தங்கள் யோசனைகளையும், கருத்துக்களையும், வேண்டுகோள்களையும் தெரிவிக்க வாய்ப்பு அளிக்கப்பட்டது. இது மக்கள் கருத்தை அரசு அறிந்துகொள்வதற்கு ஒரு வாய்ப்பாக அமைந்தது.

1907-ம் ஆண்டு இப்பிரதிநிதிச் சபையின் உறுப்பினர்களில் ஐந்தில் மூன்று பகுதியினர் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களாகவும் ஏனையோர் நியமன உறுப்பினர்களாவும் இருக்கும் வகையில் பிரதிநிதிச்சபை உறுப்பினர்களை தேர்ந்தெடுக்கும் முறை திருத்தி அமைக்கப்பட்டது. புதுக்கோட்டை தனியரசின் வரலாற்றில் தேர்தல் முறையை முதலாவதாக அறிமுகப்படுத்திய பெருமை இத்திருத்தத்திற்கு உண்டு. ஏற்கெனவே இந்திய தேசிய இயக்கத்தில் பங்கு கொண்டிருந்த காங்கிரஸ்காரர்கள் இந்த வாய்ப்பை பயன்படுத்திக் கொண்டு, பிரதிநிதிச் சபை கூட்டங்களில் தேசிய விடுதலை உணர்ச்சிகளை பிரதிபலிக்கும் கருத்துக்களை

வெளிப்படுத்த முற்பட்டனர். ஆட்சி செய்வோருக்கு பொது மக்களின் எண்ணப் போக்கை புரிந்துக்கொள்ள ஒரு நல்ல வாய்ப்பையும் இது தந்தது.

### புதுக்கோட்டை மகாஜனங்கள் மாநாடு

தேசிய உணர்ச்சிமிக்க பிரதிநிதிச் சபை உறுப்பினர்களின் முயற்சியால் ஜனங்களோடு நேரடித் தொடர்பு ஏற்படுத்திக்கொள்வதற்கு வசதியாக புதுக்கோட்டை நகருக்கு வெளியே மாநாடுகள் கூட்டிடும் செயல்கள் மேற்கொள்ளப்பட்டன. இவை புதுக்கோட்டை மகாஜனங்கள் மாநாடு என்ற பெயரில் கூட்டப்பட்டன. அவற்றில் நாட்டு நடப்புப் பற்றிய பிரச்சனைகள் எழுப்பப்பட்டும் விளக்கப்பட்டும் மக்களுக்கு அரசியல் உணர்வு ஊட்டப்பட்டது. இந்தப் புதுக்கோட்டை மகாஜனங்கள் மாநாடு முதன்முறையாக ஆலங்குடி தாலுக்கா வளநாடு மாகாணம் பூவரசங்குடியில் 27— 4— 1920 ல் கூட்டப்பட்டது. நாளடைவில் இம்மாநாட்டில் நிகழ்த்திய விவாதங்களும், தீர்மானங்களும், புதுக்கோட்டை அரசருக்கு விரோதமாகவும் தேசிய பிரச்சாரத்திற்கு வலிவு தேடுகின்ற வகையிலும் அமைந்தன.

### பட்டமும் விழாவும்

1913ம்ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி மார்த்தாண்ட தொண்டைமானுக்கு இங்கிலாந்து மன்னரால் G. C. I. E.(Grand Commander of the order of the indian Empire) என்ற பட்டம் தரப்பட்டது. இவ்வாண்டில் பிக்கானீர் மகாராஜா தனது 25வது ஆட்சியாண்டை கொண்டாடக் கூட்டிய விழாவிற்கு விருந்தினராகச் சென்றார், இதே ஆண்டு புதுக்கோட்டை மன்னருக்கும் 25வது ஆட்சியாண்டு.

எனவே புதுக்கோட்டையிலும் பிப்ரவரி 22, 23, 24 ஆகிய மூன்று நாட்களிலும் 25வது ஆட்சியாண்டு விழா மிகச்

சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. இதனை ஒட்டி பல ஜன நாயக சலுகைகள் மக்களுக்கு வழங்கப்பட்டன. தேர்ந் தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சட்ட ஆலோசனைக் குழுவில் பங்கேற்கும் வாய்ப்பு நகரமன்ற உறுப்பினர் பதவிக்கு இருவரை தேர்ந்தெடுக்கும் உரிமை ஆகியவை வழங்கப்பட் டது. நகரில் ஒரு விவசாயப் பள்ளி அமைக்கப்பட்டதும் குறிப்பிடத்தக்கதாகும்.

### இரண்டாவது உலக யுத்தம்

1914 ம் ஆண்டு இரண்டாவது உலக யுத்தம் துவங் கியது. அந்த யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் இங்கிலாந்திற்கு யுத்த உதவியாக நிதி திரட்டும் முயற்சி புதுக்கோட்டையில் மேற்கொள்ளப்பட்டது. புதுக்கோட்டை அரசாங்கப் மணத்திலிருந்து இரண்டு லட்ச ரூபாய் சென்னை போர் நிதிக்கும் (Madras War Fund) ரூபாய் 15,000 வேல்ஸ் இள வரசர் நிவாரண நிதிக்கும் தரப்பட்டன.

### திருமணம்

மார்த்தாண்ட பைரவத் தொண்டைமானின் திரு மணம் புதுக்கோட்டை வரலாற்றில் ஒரு முக்கிய இடத்தை வகிக்கிறது. மிஸ்டர் உல்ப் பிங் (Mr. Wolf Fink M.A.L.L.B.) என்னும் ஆஸ்திரேலிய வக்கீலின் மகளான செல்வி மோலி பிங்(Miss. Molly Fink) என்பவரை 1915ம் ஆண்டு நவம்பர் 10ம் தேதி ஆஸ்திரேலியாவின் தலைநகராகிய சிட்னியில் மார் தாண்ட பைரவத் தொண்டைமான் மணந்து கொண்டார். 1915ம் ஆண்டு நவம்பர் 22ம் தேதி புதுக்கோட்டைக்குத் திரும்பிய இவ்வரச தம்பதி 1916 ஏப்ரல் மாதம் வரை புதுக்கோட்டையில் இருந்தனர். ஏப்ரல் மாதத்தில் ஆஸ்தி ரேலியாவிற்கு மீண்டும் சென்றனர். அங்கே 1916 ஜூலை 22ம் தேதி மோலி பிங் ஒரு ஆண்மகனைப் பெற்றாள். அக்குழந் தைக்கு மார்த்தாண்ட சிட்னி தொண்டைமான் என்று பெய

ரிடப்பட்டது. மார்த்தாண்ட சிட்னி தொண்டைமானின் பிறப்பு, புதுக்கோட்டை சமஸ்தானத்தில் ஒரு வாரிசுரிமை பிரச்சனையை தோற்றுவித்தது.

மார்த்தாண்ட தொண்டைமான் ஒரு ஆங்கிலப் பெண்ணை மணந்து கொண்டதையே தாங்கிக் கொள்ள இயலாத பழமை வாதிகள் ஆங்கில மாதிற்கு பிறந்த பிள்ளை இந்து ராஜ்யத்தின் மன்னராக உரிமையில்லை என்ற பகுத்தறிவிற்கு சற்றும்பொருந்தாத வாதத்தைதோற்றுவித்தனர். இதில் மிக வேடிக்கை என்னவென்றால் இந்த பிரச்சனையை தீவிரமாக்கியவர் காங்கிரஸ தியாகி சத்தியமூர்த்தி என்பவர் தான்.

1920 ம் ஆண்டு நவம்பர் மாதம் 12 ம்தேதி புதுக்கோட்டை டவுன் ஹாலில் கூட்டிய புதுக்கோட்டை மகா ஜனங்களின் இரண்டாவது மாநாட்டிற்கு தலைமை தாங்க திரு. S.சத்தியமூர்த்தி அழைக்கப்பட்டிருந்தார். அம்மாநாட்டில் தமது தலைமை உரையில் சத்தியமூர்த்தி, மார்த்தாண்ட பைரவ தொண்டைமான் அடிக்கடி ஐரோப்பிய நாடுகளுக்கு செல்வதைத் தாக்கியும் அவ்வாறு செல்வதை ஆட்சேபித்து மக்கள் கிளர்ந்து எழவேண்டும் என்றும் பேசினார். மேலும் சிட்னி மார்த்தாண்டனுக்கு வாரிசுரிமை வழங்கக்கூடாது என்று பிரிட்டிஷ் அரசுக்கு தெரிவித்து கிளர்ச்சி செய்யவேண்டும் என்றும் புதுக்கோட்டை மக்களை தூண்டும் வகையில் அவரது பேச்சு அமைந்திருந்தது. இதனால் திரு.S. சத்தியமூர்த்தி புதுக்கோட்டை சமஸ்தானத்திற்குள் பிரவேசிக்கக் கூடாது என்று உத்தரவு செய்து ராஜ சாஸனப் பிரகடனம் ஒன்றை புதுக்கோட்டை அரசு 1921ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 2ம் தேதி பிறப்பித்தது.

### ரிஜெண்ட் ஆட்சி

1922ம் ஆண்டு வாக்கில் ஐரோப்பாவிலேயே தமது குடும்பத்தோடு நிரந்தரமாகத் தங்கிவிட மார்த்தாண்ட தொண்டைமான் தீர்மானித்தார். எனவே நாட்டின் ஆட்

சிப் பொறுப்பையும் அரசரின் எல்லா அதிகாரங்களையும் நிர் வகிக்கும் பொறுப்பை ரிஜண்டிற்கு அளித்தார். அவருக்கு உதவியாக அரசின் பலதுறைகளுக்கும் பொறுப்பான திவான் ஒருவர் நியமிக்கப்பட்டார். ரீஜெண்ட் ஆக மன்னரின் மூத்த தமையனாரும், ஏற்கனவே சமஸ்தானத்தின் திவான் பதவியை வகித்து வந்தவருமான ராஜ்குமார் விஜய ரகு நாதத் தொண்டைமான் நியமிக்கப்பட்டடார். புதிய திவா ஞக திரு பி. கே. குன் உன்னிமேனன் (P. K. Kuhnunni Menan) நியமிக்கப்பட்டார்.

ஆங்கிலப் பேரரசின் ஒப்புதலோடும் ஆணையோடும் புதுக் கோட்டை அரசின் வைப்பு நிதியில் இருந்து ரூபாய் 20இலட் சமும் அரசர் திருமண நிதியில் இருந்து ஒரு இலட்சத்து அறு பது ஆயிரமும் ஆக 21லட்சத்து 60 ஆயிரம் ரூபாய் மார்த் தாண்ட தொண்டைமானுக்கு தரப்பட்டது. இதற்குப் பதி லாக மாதந்தோறும் மன்னருக்கு தரும் படித்தொகை ரூ 2,500 நிறுத்தப்பட்டது. இவ்வேற்பாட்டுடன் மன்னர் புதுக்கோட்டையை விட்டு வெளியேறினர்.

## இந்திய அரசுடன் நேரடித் தொடர்பு

1923ம் ஆண்டு அக்டோபர் மாதம் 1ம் தேதி வரை புதுக் கோட்டை சமஸ்தானம் சென்னை அரசாங்கத்தின் அரசியல் மேலாண்மை கீழ் இயங்கி வந்தது. சென்னை அரசின் பிரதி நிதியாக மாவட்டக் கலெக்டர் தகுதியில் இருந்தவர் செயல் பட்டார். ஆனல் மேலே குறிப்பிட்ட தேதியில் இந்திய அர சிற்கும் புதுக்கோட்டை சமஸ்தானத்திற்கும் நேரடித் தொடர்பு ஏற்படுத்தப்பட்டது. இந்தியாவின் கவர்னர் ஜெனரலின் ஏஜண்ட் மூலம் புதுக்கோட்டைக்கும் கவர்னர் ஜெனரலுக்கும் தொடர்பு அமைக்கப்பட்டது. இந்த ஏஜண்டின் தலைமை நிலையம் திருவனந்தபுரத்தில் அமைக்கப் பட்டது. இதுவரை புதுக்கோட்டையின் பொலிடிகல் ஏஜண்டாக இருந்த சென்னை அரசின் திருச்சி மாவட்ட

ஆட்சித் தலைவர் உதவிஏஜண்டாக நியமிக்கப்பட்டார். இது 1924 அக்டோபர் 1ம் தேதியில் உதவி ஏஜண்ட் பதவியை ரத்து செய்யும் வரை மூன்று ஆண்டுகளுக்கு நீடித்திருக்கிறது.

## சட்டசபையின் தோற்றம் (Legislative Council)

1924 செப்டம்பர் மாதத்தில் சட்டசபை ஒன்று ரீஜண்ட் ஆட்சியில் துவக்கப்பட்டது. இச்சபையை செப்டம்பர் மாதம் துவக்கி வைத்து, இந்திய கவர்னரின் அரசியல் ஏஜண்டாகிய மிஸ்டர் C. W. E. காட்டன் (Cotton) இச்சபைக்கு மேலும் பல அதிகாரங்களை தக்க தருணங்களில் அளிக்க வேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார். இச்சபை ஐம்பது உறுப்பினர்களைக் கொண்டது. இதில் 35 பேர் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள். மீதி 15பேர் நியமன உறுப்பினர்களாவர். இவர்களில் சிலர் அரசு துறைகளின் தலைவர்களாக இருந்தனர். 1930ஆம் ஆண்டில் இருந்து அரிஜன வகுப்பைச் சேர்ந்த ஒருவரையும் பெண் உறுப்பினர் ஒருவரையும் உறுப்பினர்களாக நியமித்தல் என்ற முறை மேற்கொள்ளப்பட்டது.

## மன்னர் மறைவு

1928 ஆம் ஆண்டு மே மாதம் 28ம் தேதி மன்னர் மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான் பாரிஸ் நகரில் காலமானார். மறுநாள் இச்செய்தி புதுக்கோடைக்கு எட்டியது. புதுக்கோட்டை அரசாங்கம் ஐந்து நாட்களுக்கு துக்கத்தை அநுஷ்டித்தது.

## வாரிசுரிமைக் குழப்பம்

மார்த்தாண்ட தொண்டைமானுக்குப் பிறகு அவர் மகன் சிட்னி மார்த்தாண்டன் மன்னராவதற்கு புதுக்

கோட்டை சமஸ்தானத்தில் பெரும் எதிர்ப்பு உருவாக்கப் பட்டது. இந்து ராஜ்யம் ஒரு இந்து மன்னனால்தான் ஆளப் படவேண்டும். கலப்புத் திருமணத்தில் பிறந்த சிட்னி மார்த் தாண்டனுக்கு வாரிசுரிமை கிடையாது என்ற வாதங்கள் முழக்கப் பட்டன. இத்தக் கருத்தை வெகு தீவிரமாக மக் களுக்கு போதித்து சத்தியமூர்த்தி போன்ற தேசியவாதிகள் பெரும் மக்கள் சக்தியை திரட்டினர். இவர்களில் ஒரு சாரார் மார்த்தாண்ட பைரவத் தொண்டைமானின் மூத்த சகோ தரியின் மைத்துனரும் சின்ன அரண்மனையைச் சேர்ந்தவரு மான பாலசுப்பிரமணிய ரகுநாத ராமச்சந்திரத்தொண்டை மானுக்கு அரசு பட்டம் தரவேண்டும் என்று கோரினர். திரு. பாலசுப்பிரமணிய ரகுநாத ராமச்சந்திரத் தொண்டை மான் அரசராக வருவதை ரீஜண்ட் விரும்பவில்லை என்று தோன்றுகிறது. மே மாதத்தில் மிகத் தீவிரமடைந்த இந்த வாரிசுமைக் குழப்பம் நவம்பர் மாதம் முதல் தேதிவரை நீடித்திருந்தது. 1928 நவம்பர் முதல் தேதி இந்திய அரசு வெளியிட்ட செய்தி இந்த வாரிசுரிமை பிரச்சனைக்கு முடிவு கட்டியது. புதுக்கோட்டை ராஜா பட்டத்திற்கு திருமிகு ராஜாகோபாலத் தொண்டைமானை தேர்ந்தெடுத்திருப்ப தாக இந்திய அரசு செய்தி வெளியிட்டது. திரு. ராஜா கோபாலத் தொண்டைமான் மேல அரண்மனையைச் சேர்ந் தவர். மன்னர் மார்த்தாண்ட பைரவத் தொண்டைமானின் இளைய சகோதரி மீனும்பாள் அவர்களுடைய பேரர் ஆவார். திரு.ராஜாகோபாலத் தொண்டைமான் ராஜா பட்டத்திற்கு தேர்ந்தெடுக்கப்பட்டபோது அவருக்கு எட்டு வயதுதான் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இந்திய அரசு திரு. ராஜ கோபாலத் தொண்டைமானை புதுக்கோட்டை அரசராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பதைக் குறித்து சுதேசமித்திரனி லும் ஜனமித்திரனிலும் வந்துள்ள கட்டுரைகள் குறிப்பிடத் தக்கன. அக்கட்டுரைகளிலிருந்து சில பகுதிகள் இங்கே தரப் பட்டுள்ளன.

''சுதேசமித்திரன்''

''காலஞ்சென்ற புதுக்கோட்டை ராஜாவின் ஸ்தானத்திற்கு ஸ்ரீமான் ராஜாகோபாலத் தொண்டைமானை இந்திய கவர்ன்மெண்டார் நியமித்துவிட்டதாக ஒரு செய்தி வந்திருக்கிறது. அவர் புதுக்கோட்டை ராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்; இந்து மதத்தினர். ஆகையால் புதுக்கோட்டை மகா ஜனங்கள் திருப்தி அடையலாம். இந்த நியமனத்தின் பலனாக ஸ்ரீமான் ராமச்சந்திரத் தொண்டைமானுடைய பாத்யமும், ஸ்ரீமான் மார்த்தாண்ட சிட்னியின் பாத்யமும் நிராகரிக்கப்பட்டன. மார்த்தாண்ட சிட்னி வெள்ளைக்கார ஸ்திரீக்குப் பிறந்தவர். அப்படிப்பட்ட சந்ததிகளை ராஜாக்களாகக் கூடாதென்று மன்னர் சபை இந்திய கவர்ன்மெண்டுக்கும் இந்திய மந்திரிக்கும் வற்புறுத்தினதாக நாம் கேள்விப்படுகிறோம். மார்த்தாண்ட சிட்னி நிராகரிக்கப்பட்டதற்கு மன்னர் சபையின் ஆட்சேபம் முக்கிய காரணமாய் இருக்கலாமென்று தெரிகிறது.''

''ஜனமித்திரன்''

''புதுக்கோட்டை வாரிசு பாத்தியப் பிரச்சனை ஒருவிதமாக முடிவடைந்துவிட்டது. நாமறிந்தமட்டும் வாரிசுரிமைக்கு சிட்னி மார்த்தாண்டாவும் திரு. ராஜகுமார், பி. ஆர். ராமச்சந்திரத் தொண்டைமான் அவர்களுந்தான் அபேட்சகர்களாயிருந்தனர். இப்பொழுது இந்திய கவர்ன்மெண்டார். இவ்விரு அபேட்சகர்களின் பாத்தியதைகளையும் புறக்கணித்து, மைனர் ஸ்ரீராஜகோபாலத் தொண்டைமானைப் புதுக்கோட்டை அரசுரிமைக்கு தேர்ந்தெடுத்திருக்கிறது. அரசுரிமைக்கு மூன்று அபேட்சகர்கள் இருந்திருப்பதாய்த் தெரியவருகிறது......சிட்னி மார்த்தாண்டர் சம்பந்தப்பட்ட மட்டில் இந்திய கவர்ன்மெண்டார் நியாயமாகவும் தைரியமாகவும் நடந்து கொண்டிருப்பது பற்றி சமஸ்தான ஜனங்களின் நன்றியறிதலுக்கு என்றைக்கும் பாத்திர

மானவர்களென்பதில் ஐயமில்லை. ......சமஸ்தானம் ஹிந்து சமஸ்தானமாயிருப்பதால், சிட்னி மார்த்தாண்டர் பூர்ண ஹிந்துவல்லாததால் சமஸ்தான ஜனங்கள் அன்னாரின் பாத்தியதைகளை ஆட்சேபித்தனர். மன்னர் சபையும் இவ்வாட்சேவனையை அங்கீகரித்தது. இந்திய கவர்ன்மெண்டாரும் இவ்வாட்சேபனையை எதிர்க்க முடியாமல் இறுதியில் அதை ஒப்புக்கொண்டு, சிட்னி மார்த்தாண்டாவின் பாத்தியதைகளை நிராகரித்துவிட்டனர். இதன்படிப்பினை சாமான்யமானதன்று. ஓர் மகத்தான கொள்கை வெற்றி பெற்றுவிட்டது. இனி மன்னர்கள் தங்கள் மனம்போன போக்கெல்லாம் மணம் செய்து கொள்ள முடியாது. அந்நிய நாட்டு ஸதிரீகளும் இனி சுதேசமன்னர்களையும் அந்தஸதையும் ஐசுவரியத்தையும் கண்டு மயங்கி அவர்களை மணம் செய்து கொண்டால் தங்கள் குழந்தைகளுக்கும் தக்க அந்தஸது ஏற்படும் என்ற தப்பபிப்பிராயத்துடன் மணம் செய்து கொள்ள ஒருப்படார். புதுக்கோட்டை சமஸதான வாரிசு பாத்ய முடிவிலிருந்து ஏனைய சுதேச மன்னர்கள் ஒரு மகத்தான படிப்பினையைக் கற்றுக்கொண்டிருப்பார்களெனபதில் ஐயமில்லை.

## 19. இராஜகோபாலத் தொண்டைமான்

புதுக்கோட்டை தொண்டைமான் பரம்பரையில் ஒன்பதாவது மன்னராக இராஜகோபால தொண்டைமான் அவர்கள் பதவி ஏற்றார். அப்போது அவருக்கு வயது ஆறுதான்.

இராஜ இராஜ கோபால தொண்டைமான் அவர்கள் மேல் அரண்மனை குடும்பத்தைச் சார்ந்தவர். இவர் இராஜகுமார் இராமச்சந்திர தொண்டைமானுக்கும், ஜானகி ஆயி அவர்களுக்கும் 1922ம் ஆண்டு ஜூன் மாதம் 23ம் தேதி பிறந்தார். இவரது தந்தை வழி பாட்டியாகிய மீனம்பாள் ஆயி மார்த்தாண்ட பைரவ தொண்டைமானின் இளைய தமக்கை ஆவார்.

### பட்டாபிஷேகம்

இந்திய அரசு 1928 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் திருமிகு இராஜகோபால தொண்டைமான் அவர்களை புதுக்கோட்டை அரசின் புது மன்னராக அறிவித்தது. அதைத் தொடர்ந்து நவம்பர் 19ந் தேதி ஒரு சிறப்பு தர்பார் புதுக்கோட்டையில் கூட்டப்பட்டது. இந்திய கவர்னர் ஜெனரலின் பிரதிநிதியாக லெப்டினன் கர்னல் குரோஸ் ஒயிட் கலந்து கொண்டார். அவர் புதிய மன்னரை அரச சிம்மாசனத்தில் இருத்தினார். புதிய அரசர் பட்டம் ஏற்பதை ஒட்டிய ஆங்கில அறிக்கை உதவி அரசியல் பிரதிநிதி நவாப் ஜடாமீர்சையத் ஆலம்கான் அவர்களால் படிக்கப்பட்டது. அதன் தமிழாக்கம் மன்னரின் தலைமைச் செயலரால் படிக்கப்பட்டது.

காலையில் நடைபெற்ற இந்நிகழ்ச்சியைத் தொடர்ந்து அன்று மாலை 4-30 மணிக்கு தொண்டைமான் அரசர்களின் குலதெய்வமான திருக்கோகர்ணம் பிரகதாம்பிகையின்

சன்னதியில் இந்துசமய அனுஷ்டான விதிமுறைகளின்படி அரசருக்குப் பட்டாபிஷேகம் நடத்தி வைக்கப்பட்டது.

### ஆட்சி குழு

மன்னர் இராஜ கோபால தொண்டைமான் சிறு வயதினராய் இருந்ததால் 1929 பிப்ரவரி 29ந் தேதி வரை அதாவது புதிய மன்னரின் பட்டாபிஷேகம் நடந்த பிறகு மூன்று மாதம் வரை துரை ராஜா அவர்கள் திவான் ரிஜெண்டாக இருந்து அரசு காரியங்களை நடத்தினர். 28ந் தேதியோடு அவரது பதவி காலம் முடிக்கப்பட்டது. அதன் பிறகு புதுக்கோட்டை அரசின் காரியங்களை கவனிக்க தலைவர், திவான், தலைமை நீதிபதி ஆகிய மூவரைக் கொண்ட ஒரு ஆட்சிக் குழு ஏற்படுத்தப்பட்டது. திவான்பகதூர் T. ராகவய்யபந்துலு தலைவராகவும் ராவ்சாகிப் P. S. சிவஞான முதலியார் உத்தியோக பூர்வமான உறுப்பினராகவும் பதவி ஏற்றனர். 1931-ம் ஆண்டு இக்குழு கலைக்கப்பட்டுஅவற்றுக்கு பதிலாக நாட்டின் ஆட்சியை நடத்தி செல்ல ஒரு நிர்வாகியும் உதவி நிர்வாகியும் நியமிக்கப்பட்டனர். பி. ஜி. ஹோல்ட்ஸ் வர்த் (B. G. Holds worth I.C.S.) அவர்கள் நிர்வாகியாகவும் ராவ்பகதூர் E. K. கோவிந்தன் உதவி நிர்வாகியாகவும் பொறுப்பு ஏற்றனர். 1933 மார்ச் மாதம் 4ம் தேதி E. K. கோவிந்தன் ஓய்வு பெற்றதை அடுத்து ராவ்பகதூர் R. கிருஷ்ணமாச்சாரியார் உதவி ஆட்சியாளராகப் பதவி ஏற்றார்.

### நகரில் நடந்த எதிர்ப்பியக்கம்

நகராட்சியின் குடியிருப்பு வரியைச் சிறிது உயர்த்தியதை எதிர்த்து 1931ம் ஆண்டு ஜூலை மாதம் 15ம் தேதி காலையில் யாரும் எதிர்பாராத வகையில் பெரும் கலகம் ஒன்று புதுக்கோட்டை நகரில் ஏற்பட்டது. வரியை எதிர்த்த மக்கள் கூட்டம், தாக்கும் சக்தியாக மாறி பெரும் சேதத்தை விளைவித்தது. பிரசிடெண்டின் வீடு தாக்கப்பட்டது. அரசு காரி

யாலயங்கள் நீதிமன்றம் ஆகியவற்றில் உள்ள ரிக்கார்டுகள் சேதப்படுத்தப்பட்டன. மத்திய சிறைச்சாலே தகர்க்கப்பட்டு அதில் இருந்த கைதிகள் விடுவிக்கப்பட்டனர்.

இக்கலவரத்தை அடக்கி அமைதியை நிலேநாட்ட திருச்சி யிலிருந்து பஞ்சாப் ரெஜிமென்ட் இராணுவப்படை அழைக் கப்பட்டது. கிளர்ச்சிக்கு மறுநாள் இப்படை அமைதியை நகரில் ஏற்படுத்தியது.

இக்கலகம் சமஸ்தானத்தின் போலீஸ்துறை நெருக்கடி நிலேமைகளே சமாளிக்க இயலாத பரிதாப நிலேயில் இருந் ததை நன்கு வெளிப்படுத்தியது. இதன் விளேவாக காவல் துறையை திருத்தி அமைக்கும் பணி மேற்கொள்ளப்பட்டது. மிஸ்டர் யும் (Mr. Hume) என்பவர் சமஸ்தானத்தின் போலீஸ் கமிஷனராக நியமிக்கப்பட்டார். அவர் ஆயுதப் படையினர் வலிமையை உறுதிப்படுத்தினர். சமஸ்தானத் தின் இராணுவ வீரர்கள் A, B, என்று இரு வகை யாகப் பிரிக்கப்பட்டனர். நல்ல உடற்கட்டும் வலிமையும் வாய்ந்த A பிரிவு வீரர்களுக்கு ஆயுத ரிசர்வ் போலீஸாருக்கு தரும் பயிற்சி அளிக்கப்பட்டது. அவ்வளவாக உடற்திறம் அற்றவர்கள் காவல்காரர்களாகவும், சடங்குகளுக்கு காவல் செய்யும் வீரர்களாகவும் நியமிக்கப்பட்டனர்.

**புதிய இரயில் பாதை**

திருச்சியிலிருந்து புதுக்கோட்டை வழியாக மானு மதுரை வரை இரயில் போக்குவரத்து 192சம் ஆண்டு ஏப்ரல் மாதம் 7ம் தேதி துவக்கப்பட்டது. இதே ஆண்டில் தான் புதிய அரண்மனேயும் கட்டி முடிக்கப்பட்டது. தற்போது மாவட்ட ஆட்சியாளரின் அலுவலகமாகச் செயல்படும் இக் கட்டிடத்திற்கு 1930ம் ஆண்டு மன்னர் குடியேறினர்.

**வைசிராயின் வருகை**

இந்திய வைசிராய் மார்க்கியுஸ் வெல்லிங்டன்னும் அவ ரது மனேவியாரும் 1933ம் ஆண்டு டிசம்பர் மாதம் 13ம் தேதி புதுக்கோட்டை விஜயம் செய்தனர். இந்திய வைசிராய்

ஒருவர் புதுக்கோட்டைக்கு விஜயம் தந்தது சமஸ்தானத்து வரலாற்றில் இதுவே முதல் தடவையாகும். அப்போது தான், திவான் பகதூர் M. R. சுப்பையா செட்டியார் நன் கொடையாக அளித்த ராஜா மருத்துவமனையில் எக்ஸ்ரே பகுதி கட்டிடத்திற்கான அடிக்கல் வைசிராயால் நாட்டப் பட்டது.

### சர் அலெக்ஸாண்டர் டாட்டன்ஹாம்

1934 ஜனவரி 3ல், சர் அலெக்ஸாண்டர் டாட்டன்ஹாம் புதுக்கோட்டையின் சமஸ்தான ஆட்சியாளராக பதவி ஏற்ருர். R. கிருஷ்ணமாச்சாரியார் இவருக்கு உதவி ஆட்சியாள ராகத் தொடர்ந்து பதவி வகித்துவந்தார்.

புதுக்கோட்டை சமஸ்தானத்திற்குக் கிடைத்த ஒப்பரிய மிகச் சிறந்த நிர்வாகிகளில் இறுதியாக வந்தவர் அலெக் ஸாண்டர் டாட்டன்ஹாமாகும். இவரும் இவருக்கு முன்னே புதுக்கோட்டை சமஸ்தானத்தில் பணிபுரிந்த சேஷய்ய சாஸ் திரி, வில்லியம் பிளாக்பர்ன் ஆகியோரும், தொண்டைமான் களின் வரலாற்றில் சுவையும் சுருதியும் பெருக்கிய முப்பெரும் பிரமுகர்களாக விளங்குகின்றனர்.

டாட்டன்ஹாமின் நிர்வாக சீர்திருத்தங்கள் பெரும் புகழ்பெற்றவை. இவரது காலத்தில் கவர்னர் ஜெனரலின் பிரதிநிதியாகிய "ஏஜெண்ட்" என்றும் பதவியின் பெயர் சென்னை ராஜ்யங்களின் பிரசிடெண்ட் என்று 1935 ஏப்ரல் 1 முதல் மாற்றி அமைக்கப்பட்டட்டது.

வருவாய்த் துறை, நீர்ப்பாசனம், நிதி கூட்டுறவு ஆகிய பல துறைகளிலும் சிறந்த சீர்திருத்தங்களை டாட்டன்ஹாம் செய்து புதுக்கோட்டை ஒரு நவீன சமஸ்தானமாவதற்கு வேண்டிய பல அடிப்படைக் காரியங்களைச் செய்தார்.

### இரண்டாம் உலகப் போர்

இங்கிலாந்தில் இரண்டாவது உலகப் போரில் ஈடுபட்ட போது, புதுக்கோட்டை சமஸ்தானம் தனது முழு ஆதரவை இங்கிலாந்திற்கு தருவதற்கான முயற்சியாக யுத்த நிதி திரட்

டும் குழு ஒன்று உதவி ஆட்சியாளர் ராவ் பகதூர் R. கிருஷ்ண மாச்சாரியார் தலைமையில் அமைக்கப்பட்டது. இதன் பயனுல் சுமார் ரூபாய் ஒரு லட்சத்து அறுபதாயிரம் புதுக்கோட்டையின் யுத்த நிதியாக அளிக்கப்பட்டது.

**ஆட்சி உரிமை பெறுதல்**

மன்னர் ராஜா ராஜகோபாலத் தொண்டைமான் தமது 22ஆம் வயதில் ஆட்சி உரிமை பெற்ருர். 1944ம் ஆண்டு ஜனவரி மாதம் 17ஆம் தேதி புதுக்கோட்டை மக்களுக்கு அது ஒரு திருவிழாவாக அமைந்தது. நகரில் உள்ள ஆலயங்களில் விசேஷ பூஜைகள் செய்யப்பட்டன. கலைவாணர்களும். அறிஞர்களும் வாழ்த்துக்கள் வழங்கினர். இவ்விழா தொடர்பாக நற்சாந்துப்பட்டியைச் சேர்ந்த திரு. தங்கமணி பிள்ளை என்பவர் மணிச்சரம் என்னும் சிறு நூலை வெளியிட்டார். அவ்வெளியீட்டில் வந்த கீழ்க்காணும் இராஜ வாழ்த்தை புதுக்கோட்டை மக்களின் இதய வாழ்த்து என்றே கருதலாம்.

அன்னை பிரகதிதாசனுக்கே—தமிழ்
ஆண்மை மிக்க நேசனுக்கே
பன்னெடு வாழ்வுகள் பல் காவன்றே—வாழ்த்தி
பாடுவோம் பல்லாண்டு பல்லாண்டே!
தொண்டைமான் குலத்தின் ஒண்மணியை—தமிழ்
தொண்மைக் குடியின் கண்மணியை
அண்டை அயலும் அகமகிழ—வாழ்த்தி
ஆடிப் பாடுவோம் பல்லாண்டே!
மாஜன தேச மாமகனை—தமிழ்
மா மொழி வளர்க்கும் கோமகனை
ராஜகோபாலப் பூ பதியை—வாழ்த்தி
போற்றி புகலுவோம் பல்லாண்டே!
மருதிப் பதாகை கொண்டானை—தமிழ்
மாண் புறுநல் வழி கண்டானை
சீருறு செந்தமிழ்ச் சீமானை—வாழ்த்த
செப்பிமகிழுவோம் பல்லாண்டே!

**காங்கிரஸ் கிளர்ச்சி**

இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியின் செல்வாக்கு தமிழ் நாட்டில் உச்சக்கட்டத்தை அடைந்ததை ஒட்டி புதுக் கோட்டை தனியரசு இந்திய யூனியனுடன் சேர்க்கப்பட வேண்டுமென்கிற கோரிக்கையும் வலுபடத் துவங்கியது. தேசிய காங்கிரஸ் இயக்கத்திற்கு புதுக்கோட்டை அளித்த இரு பெருமக்களை இங்கு குறிப்பிடுவது அவசியமாகும். ஒரு வர் தமது மேடைப் பேச்சுகளால் காங்கிரஸ் இயக்கத்திற் பெரிதும் வலிமையூட்டிய திரு. சத்தியமூர்த்தி அவர் மற்று ஒருவர் தமது சிறந்த சமுதாயத் தொண்டினால் லாற்றில் மிகச் சிறப்பான இடத்தை பெற்றுக்கொ டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி அவர்கள் ஆவார்கள்.

திரு. நாராயணசாமிக்கும் சந்திரம்மா என்பவருக்கும் மகளாய் பிறந்த முத்துலட்சுமி புதுக்கோட்டை சமஸ்தானத் தில் ஆங்கிலம் கற்ற முதல் மாணவியாய் 1903இல் மெட்ரிக் குலேசன் தேர்வில் தேர்ச்சி பெற்றார். இதனை தொடர்ந்து "முதற் பெண்மணி" என்னும் சிறப்பை பல வகைகளில் பெற்று சரித்திரம் படைத்த பெருமை இவருக்கு உண்டு. புதுக்கோட்டை மன்னர் கல்லூரியின் முதல் மாணவி சென்னை மருத்துவக் கல்லூரியின் முதல் மாணவி, மருத்து தேர்வில் மாநிலத்திலேயே முதலாவதாக தேறிய பெண் மணி, சட்டசபை அங்கத்தினராகிய முதல் இந்திய பெண் மணி என்றெல்லாம் பல துறைகளிலும் வரலாறு படைத்த டாக்டர் முத்துலட்சுமி பெண்கள் முன்னேற்றத்திற்கும், தாழ்த்தப்பட்டோர் உயர்விற்கும், குழந்தைகள் நலத்திற்கும் ஆற்றிய தொண்டு தமிழ்நாட்டு வரலாற்றில் பொன் னெழுத்துக்களில் பொறிக்கப்பட வேண்டியதாகும்.

டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி போன்றோரின் தன்னலங் கருதாச் சேவையும், சத்தியமூர்த்தி போன்றோரின் ஆவேச மான மேடைப் பிரசாரங்களும், புதுக்கோட்டை சமஸ் தான மக்களின் இந்திய தேசிய உணர்வு பெரிதும் வளரத் துணை செய்தன!

1947இல் இந்தியா விடுதலை அடைந்ததைத்தொடர்ந்து, புதுக்கோட்டை சமஸ்தானம் சென்னை மாகாணத்துடன் இணைக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை மிகவும் தீவிர மடைந்தது. திரு. வல்லத்தரசு என்னும் புதுக்கோட்டை வக்கீல் இக்கிளர்ச்சிக்கு தலைமைவகித்து நடத்தினர்.

புதுக்கோட்டை சமஸ்தானம் தனியாக இயங்க வேண்டும் என்று ஒரு கட்சியும் புதுக்கோட்டையில் தோன்றியது.

**புதுக்கோட்டை இந்தியாவுடன் இணைதல்**

1948ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இந்தியாவின் உள் துறை மந்தியாக இருந்த சர் வல்லபாய் பட்டேலின் அழைப்பின்பேரில் மன்னர் ராஜகோபாலத் தொண்டை மான் அவர்களும் அவரது ஆலோசகரும் புதுதில்லி சென் றனர்.

இருபத்திஆறே ஆண்டுகள் நிரம்பிய அந்த் இளம் வயதில் ராஜா ராஜகோபாலத் தொண்டைமான் அவர்கள் நடந்துகொண்ட முறை இதோ ஒரு இராஜரிஷி இந்த நூற்றாண்டிலும் இருக்கிறார் என்று கூறுவதாகவே இருந்தது.

சுதேச மன்னர்களில் பெரும்பாலோனுர் தத்தம் சமஸ தானங்களை இந்திய யூனியனில் இணைக்க வல்லடி வழக்கிட்டு ஒத்து வராமல் இருந்த நிலையில் இராஜா இராஜகோபாலத் தொண்டைமான் நடந்துகொண்டவிதம் பிரமிக்கதக்கதாய் இருந்தது. டெல்லி சென்றிருந்த நிலையில் இராஜா இராஜ கோபாலத் தொண்டைமான் அவர்கள் தனது அரண்மனை அதிகாரிகளுடனும் உற்றவர்களுடனும் உடன் பிறந்த சகோ தரர்களுடனும் கலந்தாலோசிக்காமலே புதுக்கோட்டை சமஸதானத்தை இந்திய யூனியனுடன் இணைத்துக்கொள்ள மனப்பூர்வமாக சம்மதம் தெரிவித்து அதற்கான ஆவனங் களில் கையெழுத்திட்டு திரும்பினர்.



1948ம் ஆண்டு மார்ச் மாதம் 3ம் தேதி ஓமந்தூர் ராமசாமி ரெட்டியாரின் தலைமையில் இயங்கிய சென்னை மாகாணத்துடன் புதுக்கோட்டை சமஸ்தானம்இணைந்தது.

முடிதுறந்த மன்னரான இராஜா இராஜகோபாலத் தொண்டைமான் அவர்கள் செல்வச் செழிப்புடன் விளங்கி வந்தபோதிலும் திருமணம்கூட செய்துகொள்ளாமல் தன்னந் தனியாக போற்றத்தக்க ஒரு ராஜரிஷியாக தற்போது திருச்சியில் உள்ள தமது அரண்மனையில் ஆடம்பரமற்ற எளிய வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறார்.

இந்த இராஜரிஷி தென் மொழியிலும் வடமொழியிலும் வல்லவர். இவர் மெக்கானிசம், போட்டோகிராபி போன்ற தொழில் நுட்பங்களிலும், ஓவியம் போன்ற நவீன கலைகளிலும், படிமங்கள் பார்ப்பது போன்ற பழம் பெருங் கலைகளிலும் தமது கருத்தைச் செலுத்தி வாழ்க்கையை கவிதையாக்கிக்கொண்டு வருகிறார். இவற்றிற்கெனவே தன் அரண்மனையில் ஒரு தொழில் பட்டறையும் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார். வெண்கலத்தில் அவர் வடித்திருக்கும் தெய்வச் சிலைகள் தெய்வீக ஒளியுடன் விளங்குவதைக் கண்டு களிக்கலாம்.



# 1690 ல்
# ரகுநாதராயத் தொண்டைமான்
# அரசும், பிற அரசுகளும்.

விராலிமலை
நமணத் தொண்டை
குளத்தூர்
தொண்டைமான் புதுக்கோட்டை
மருங்காபுரி
அம்மங்குரிச்சி
பொன்னமராவதி
சேதுபதி
திருமயம்
நாடு
நகரம்
அம்புக்கோயில்
தொண்டைமான் நாடு



Wrapper Printed at Alagu Achagam, Madras-600 001.